டாக்டர். உ. வே. சா.

# இலக்கணப் பதிப்புகள்




டாக்டர். கி. நாச்சிமுத்து

chithra

டாக்டர்

# உ. வே. சா. இலக்கணப்பதிப்புக்கள்

(நிறுவனச் சார்பிலமைந்த டாக்டர் உ. வே. சாமிநாதையர்

அறக்கட்டளைச் சொற்பொழிவு)

டாக்டர். கி. நாச்சிமுத்து, எம். ஏ., பிஎச். டி.
இணைப் பேராசிரியர், தமிழ்த் துறை,
கேரளப் பல்கலைக் கழகம்,
காரியவட்டம் 695 581
திருவனந்தபுரம், கேரளம்.




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
டி. டி. டி. ஐ., தரமணி, சென்னை-600 113

டாக்டர் உ. வே. சாமிநாதையர் அறக்கட்டளைச்
சொற்பொழிவு வரிசை — 3 (பிப்ரவரி 19 & 20-1986)
Dr. U. V. SWAMINATHAIYER ENDOWMENT LECTURE No. 3
(19th and 20th February 1986)
Endowment Lectures Publication No. 11

---

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the book | : | Tāktaṛ U. Vē. Cā. Ilakkaṇa-p patippukkaḷ |
| Author | : | Dr. K. NACHIMUTHU, M.A., Ph. D., Reader, Department of Tamil, University of Kerala, Kariavattom - 695 581. Trivandrum, Kerala. |
| Publisher | : | International Institute of Tamil Studies, T. T. T. I. Post, Taramani, Madras - 600113. |
| Publication No | : | 121 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 20-2-1986 |
| Edition | : | First |
| Paper used | : | 14 Kg. Tamilnadu D. Dy. |
| Size of the book | : | 21 × 14 cms. |
| Printing types used | : | 10 pt. |
| Number of copies | : | 1200 |
| Number of pages | : | VII + 124 |
| Price | : | Rs. 12 |
| Printers | : | Jayashree Printers, 238, Pycrofts Road, Triplicane, Madras-5. |
| Binding | : | Hard Board |
| Artist | : | Vichitra |
| Subject | : | A Study of U. Vē. Cā's Grammatical Editions |


---

* அறக்கட்டளைச் சொற்பொழிவாளர் கருத்துகளுக்கு நிறுவனம் பொறுப்பல்ல.

# பதிப்புரை

டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113.

இவ்வறக் கட்டளை உருவாக்குவதற்கு முழுநிலையில் துணை புரிந்த திரு. மு. கோ. ராமன் அவர்களுக்கு முதல் நிலையில் நன்றியைத் தெரிவிக்கிறோம்.

பதிப்பு வேந்தாகத் தன்னிகரற்றுத் திகழும் டாக்டர் உ. வே. சாமிநாதையரின் பெயரால் நிறுவனத்தில் அமைந்துள்ள அறக் கட்டளையின் வழி நிகழும் இச்சொற்பொழிவு மூன்றாவதாகும்.

இச்சொற்பொழிவினைச் செய்யக் கேட்டபோது அன்புடன் ஏற்றுக் கொண்டு, உரிய காலத்தில் செய்து தந்தார் டாக்டர் கி. நாச்சிமுத்து. ஐயரவர்களின் இலக்கணப் பதிப்புகளை இந்நூல் ஆராய்கிறது. புறப்பொருள் வெண்பாமாலை, நன்னூல் மயிலை நாதர் உரை, நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரை, தமிழ்நெறி விளக்கம் எனும் நான்கு இலக்கணப் பதிப்புகளின் வழிப் புலனாகும் ஐயரவர்களின் புலமை இங்கு எடுத்துக்காட்டப் படுகிறது. அதற்குப் பின்புலமாய் அமைந்தவற்றையும் சுட்ட ஆசிரியர் தவறவில்லை. நூற்பதிப்புப் பணியில் தம்முடன் பொருவாரின்றித் தனியாட்சி கண்ட ஐயரவர்களின் பதிப்புக் கொள்கைகளையும் தனித்தன்மைகளையும் வெளிக் கொணர் வதிலும் நூலாசிரியர் முயன்றுள்ளார். நன்கு முயன்று பல செய்திகளைத் திரட்டித் தொகுத்தும் வகுத்தும் நூலினை உருவாக்கியுள்ள நூலாசிரியரைப் பாராட்டிப் போற்றி மகிழ் கின்றேன்.

இந்நிறுவனப் பணிகளுக்கெல்லாம் ஆக்கமும், ஊக்கமும் தருகின்ற கல்வியமைச்சர் மாண்புமிகு. செ. அரங்கநாயகம் அவர்களுக்கு மிக்க நன்றியுடையோம்.

இந்நூல் வெளிவர நன்முறையில் முயன்ற அறக்கட்டளைச் சொற்பொழிவுப் பொறுப்பாளர் டாக்டர் ச. சிவகாமி அவர் கட்கும், உரிய காலத்தில் அச்சிட்டுத்தந்த ஜெயஸ்ரீ அச்சகத் தார்க்கும் எங்கள் நன்றி உரியது.

சென்னை
14-2-86

அன்புள்ள,
ச. வே. சுப்பிரமணியன்

# நன்றியுரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் தலைவராக இருந்து அரிய தமிழ்ப் பணிகள் ஆற்றி வரும் பேராசிரியர் ச. வே. சுப்பிரமணியனார் அவர்கள், டாக்டர் உ. வே. சா. அறக்கட்டளையின் மூன்றாம் சொற்பொழிவாக அய்யரவர்களின் இலக்கணப்பதிப்புக்களை ஆராய்ந்து பேசும்படி என்னைப் பணித்தார்கள். இத்தகைய அரியவாய்ப்பை நல்கிய அவர்கள் எனக்கு ஆசிரியராக விளங்கியதோடன்றி என்னைக் கேரளப் பல்கலைக் கழகத்தில் தமிழாசிரியராகவும் வேலைக்கு அமர்த்தி உதவியவர்கள். அது மட்டுமின்றி என் முன்னேற்றத்திலும் வாழ்விலும் என்றும் அன்பும் ஆதரவும் காட்டி வருபவர்கள். அவர்கள் பாலுள்ள என் கடப்பாட்டையும் நன்றியையும் நான் எவ்வாறு காட்டுவது என்று தெரியவில்லை. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு என்னாற்றுங் கொல்லோ உலகு (211) என்ற குறளை இங்கு நினைந்து அவர்களுக்கு என் வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அடுத்தது இத்தகைய ஒரு அறககட்டளையை நிறுவத்துணை நின்றதோடு அமையாது, உ. வே. சாமிநாதையரின் பதிப்புத் தொண்டை விடாது வளர்த்துக் காத்துப் பேணப் பல வழிகளிலும் முனைந்துள்ள பாலகவி திரு. மு. கோ. இராமன் அவர்கள் என் பால் காட்டி வரும் அன்பும் செய்து வரும் உதவிகளும் அளப்பரியன. அவர்கள் தம்பால் தமிழ் நாடி வருபவர்க்கு இல்லை என்னாது உதவும் பிறர்க்குரியாளர். அவர்கள் இச்சொற்பொழிவு பற்றி எனக்குத்தக்க அறிவுரைகள் கூறியும் வேண்டிய நூல்களைத் தேடித் தந்தும் பலவகையில் உதவினார்கள். அவர்களிடம் பேசும்போதெல்லாம் உ. வே..சா. பற்றிப் பல செய்திகளையும் கூறி இன்புறுத்துவார்கள். அவர்களின் தமிழ் நெஞ்சத்திற்கு என் நெஞ்சார்ந்த நன்றியும் வணக்கமும்.

இச்சொற்பொழிவுக் கட்டுரை எழுதுங் காலத்துப் பல பழைய பதிப்புக்களைக் கொடுத்துதவிய திருவனந்தபுரம் கேரளப் பல்கலைக்கழக நூலகம், காரிய வட்டம் கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை நூலகம், திருவனந்தபுரம் பல்கலைக்கழகக் கல்லூரித் தமிழ்த் துறை நூலகம், திருவனந்தபுரம் மாநிலப் பொது நூலகம், சென்னை மறைமலையடிகள் நூலகம்,

திருவான்மியூர் டாக்டர். உ. வே. சா. நூலகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகம், ஆகியவற்றின் பொறுப்பாளர்களுக்கும் நூலகர்களுக்கும், இன்னும் சில தனியார்களுக்கும் என் நன்றியை இங்குப் புலப்படுத்திக் கொள்ளுகிறேன்.

இச்சொற்பொழிவு நூல் தயாராகும் போது சரி பார்த்தல், படி எடுத்தல் முதலியவற்றில் பெருந்துணை புரிந்த என் துணைவி கிருஷ்ணாவிற்குத் தமிழன்னையின் அருளைச் சிந்தித்து வாழ்த்துகிறேன்.

காரியவட்டம்
9-2-1986

கி. நாச்சிமுத்து

# டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர்

—டாக்டர் வ. சுப. மாணிக்கம் டி. லிட்.

பார்காத்தார் ஆயிரம்பேர் பசித்தார்க் காகப்
பயிர்காத்தார் ஆயிரம்பேர் பாலர்க் காக
மார்காத்தார் ஆயிரம்பேர் வாழ்ந்த நாட்டில்
மனங்காத்த தமிழ்த்தாய் ''என்உடமை எல்லாம்
யார்காத்தார்'' எனக்கேட்க, ஒருவன் ''அம்மா
யான்காப்பேன்'' எனவெழுந்தான் சாமி நாதன்
நீர்காத்த தமிழகத்தார் நெஞ்சின் உள்ளான்
நிலைகாத்த மலையிமய நெற்றி மேலான்

பொய்யாத தமிழ்க்குமரி ஈன்ற சாமி
போகாத புகழ்க் கன்னி மணந்த நாத!
செய்யாத மொழித் தொண்டு செய்த ஐய
சிறுகாத நெஞ்சத்தேம் வணங்கு செம்மல்
எய்யாத திருவடியால் எண்பத் தாண்டும்
இளையாத உள்ளத்தால் எங்குஞ் சென்று
நெய்யாத தொன்னூல்கள் நிலைக்க வைத்த
நீங்காத தமிழ்க்குயிரே நின்தாள் வாழ்க!

*நன்றி: முல்லை முத்தையா*
டாக்டர் உ. வே. சாமிநாதையர் (1980)

'ஆதார நூல்களை ஒருவகையாக வெளிப்படுத்தி விட்டால் ஆராய்ச்சியாளர் அவற்றை ஆராய்ந்து சரித்திரங்களையும் பிற குறிப்புக்களையும் வெளியிடலாம்.''

உ. வே. சா., என் சரித்திரம் (1982) பக். 738

# உள்ளுறை

# 1. முன்னுரை

இலக்கணம் என்பது தமிழில், மொழியின் அமைப்பையும் மொழியில் எழும் இலக்கியத்தின் அமைப்பையும், அதன் வழியே அவற்றை ஆராய்ந்துரைக்கும் நூல்களையும் குறிக்கும். வேதாங்கங்கள் ஆறனுள் ஒன்றும் வேதபுருடனுக்கு முகமாகக் கூறப்படுவதுமான (மணிமேகலை : 27 : 102) வியாகரணம் என்ற வடநூல், வழக்குச் சொல்லிலக்கணத்தைக் குறிக்கும். தமிழில் இலக்கணம் என்ற சொல் வேதாங்கங்களுள் நான்காகிய வியாகரணத்தையும், சிட்சை என்ற எழுத்திலக்கணத்தையும், சந்தஸ் என்ற யாப்பிலக்கணத்தையும், நிருக்தம் என்ற சொற்றொகுதி ஆய்வையும் அடக்கும்.

வேதாங்கம் பற்றிய கருத்து மரபிலிருந்து பழங்காலத்தில் நம் நாட்டில் இலக்கண ஆராய்ச்சி என்பது தத்துவ நூலின் ஒரு பகுதியாக இருந்தது என்பதை உணரலாம். நியாயம், வைசேடிகம், மீமாஞ்சை, சப்தப் பிரம்மவாதம் முதலியவற்றில் மொழியின் இயல்பு, இலக்கணம் முதலியவை தத்துவப் பின் புலத்தில் ஆராயப்படுகின்றன. கிரேக்கம், உரோமம் போன்ற மேலை நாடுகளிலும் இலக்கண ஆய்வும் தத்துவ ஆய்வும் தொடர்புபட்டுத்தான் இருந்தன.

தமிழில் வடமொழிக்கு இணையான மிகப் பழைய இலக்கண மரபைப் பார்க்கிறோம். தொல்காப்பியம் முதலிய நூல்கள் முன் நூல்களைச் சுட்டுகின்றமை, தமிழிலேயே உருவான இலக்கணக் கலைச் சொற்கள், தமிழ் மொழியிலேயே எழுதப் பட்ட இலக்கண நூல்கள் முதலியவை வடமொழித் தொடர்புக்கு முன்பே இங்கிருந்த செழுமையான தனித்தமிழ் இலக்கண மரபைக் காட்டுகின்றன. வரலாற்றின் தொடக்கத்தில் இத்தனித்

தமிழ் மரபு வடமொழி மரபுகளுடன் தொடர்பு பெற்று மேலும் தன் தனித் தன்மையை இழக்காமல் செழுமை பெற்றது. இதைப் போன்றே பிற்காலத்தில் தமிழில் செழித்தோங்கிய தமிழ் வழித் தத்துவ மரபான சைவசித்தாந்தம், மருத்துவத் துறையான சித்த மருத்துவம் முதலியன தமிழில் முன்பு காலூன்றி வளர்ந்திருந்த தனித்த சிந்தனை மரபையும், மருத்துவ மரபையும் காட்டுகின்றன.

தமிழகத்தில் தொன்று தொட்டே தமிழ், வடமொழி இலக்கணங்களை ஆர்வத்துடன் கற்றுவந்தனர். பாணினிக்கு உரை எழுதிய பதஞ்சலி, குமாரிலபட்டர் முதலியவர்கள் தமிழ் நாட்டவர் என்ற நம்பிக்கை உண்டு. பாண்டியர்கள் சங்கம் வைத்து வடமொழியும் தென் மொழியும் பழுதறத் தாமாராய்ந்த தாகக் கூறிக் கொள்கிறார்கள். அகத்தியர் முதல் தமிழ் இலக்கண நூலை எழுதியவர், இவர் முருகனிடம் தமிழ் பயின்றதாகச் சைவர் கூறுவது போல, பௌத்தர் ஆயுங் குணத்தவலோகிதன் பக்கல் தமிழ்கேட்டதாகக் கூறுவர். (வீரசோழியம், பாயிரம்). சமணர் ஐந்திரவியாகரணம் முதலியவற்றைத் தம் வேதாகமங்கள் அடக்கியிருப்பதாகக் கருதினர் (சிலம்பு, 11. 154-155). புண்ணிய நீராடினால் அதன் பயனாய் இந்திரன் எழுதிய ஐந்திர வியாகரணத்தை உணர முடியும் என்ற நம்பிக்கை இலக்கண நூற் பயிற்சியின் அருமையைத் தெரிவிக்கும் (சிலம்பு, 11 : 98-99).

இடைக் காலக் கல்வெட்டுக்களிலிருந்து இலக்கணக் கல்வி பற்றிய பல செய்திகள் தெரிய வருகின்றன. திருவொற்றியூரில் வியாகரண மண்டபமே ஒன்றிருந்ததாகக் கல்வெட்டொன்று கூறுகிறது. அதுபோன்றே திரிபுவனிக் கல்வெட்டொன்று (கி. பி. 1048) அங்கு இலக்கணம் சிறப்பாகக் கற்பிக்கப் பட்டதைக் குறிப்பிடுகிறது. தெ. ஆ. மாவட்டம் எண்ணாயிரத்தில் (ARE 133 of 1917) கி. பி 10-ஆம் நூற்றாண்டில் வேதம், வேதாந்தம், மீமாம்சத்துடன் வியாகரணமும் கற்பிக்கப்பட்டதென்றும், வியாகரண ஆசிரியரே அதிகம் சம்பளம் பெற்றார் என்றும் அறிகிறோம்.

தமிழ் இலக்கண மரபு பிற்காலத்தில் தமிழ் நூல் வழி மரபு, வடநூல் வழி மரபு என்ற இருநிலைகளில் வளர்ச்சியடைந்தது. பின்னவரையே வடநூல் வழித்தமிழாசிரியர் என்று வீரசோழியம் கூறும். ''ஆரியம் என்னும் பேரிரும் பௌவத்தைக் காரிகை ஆக்கித் தமிழ்ப்படுத்திய அருந்தவத்துப் பெருந்தன்மை அமிர்த சகரர்'' என்று காரிகை உரை கூறுவதையும் நோக்குக.

'வடநூற் கடலுள் ஒருங்குடன் வைத்த உதாரணம் நோக்கி விரிந்து முடித்த மிறைக் கவிப்பாட்டே' என்று கூறும் யாப்பருங் கலம் (96). வடமொழிக் காவியாதர்சத்தைத் தமிழில் தண்டியலங்காரமாக ஆக்கினர். வீரசோழியம், இலக்கணக் கொத்து, பிரயோக விவேகம், சேனாவரையர், தெய்வச்சிலையார், சிவஞான முனிவர் உரைகள் முதலியனவற்றில் தமிழ்-வடமொழி மரபுகளை ஒப்பிட்டுக் காணும் முயற்சிளைக் காணலாம். இம்முயற்சிகளில் வடமொழியே தமிழ்நூல் எல்லாவற்றிற்கும் தாய் என்ற எதிர் நிலைக்குச் சென்றவர் இலக்கணக் கொத்துச் சாமி நாத தேசிகர்.

சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளில் இந்திய மொழிகளில் ஆயிரம் இலக்கண நூல்கள் எழுந்தன. தமிழில் மட்டுமே சுமார் 72 இலக்கண நூல்கள் தோன்றியுள்ளன. அவற்றில் மறைந்து போனவை 33 போகக் கிடைப்பவை 39 ஆகும்.[1] இவற்றின் மூலம் தமிழில் இடையீடின்றி இவ்விலக்கண மரபு வளர்ந்து வந்ததைக் காணலாம். மலையாள மொழியில் கி. பி. 14 ஆம் நூற்றாண்டில் எழுந்த லீலா திலகத்துக்குப் பின் சுமார் 500 ஆண்டுகள்-தற்காலம் வரை இலக்கண நூல்கள் எழவில்லை என்பதை நோக்கும்போது தமிழ் இலக்கண மரபின் தொடர்ச்சி தெள்ளிதின் புலனாகும். (எனினும், அது பிற்காலத்தில் புதுமை நாட்டமின்றிச் சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை மரபாக மாறி விட்டிருந்தது என்ற குற்றச்சாட்டுக்கும் உள்ளாகி உள்ளது என்பதையும் இங்குச் சுட்டிக்காட்டவேண்டும்.)

ஆயினும் நாட்டுச் சூழ்நிலை, பொருளாதார நிலை முதலியவற்றால் தமிழ் இலக்கணக் கல்வியில் ஆங்காங்கே தேக்க நிலைகளும் தொடர்புக் கண்ணி அற்றுப் போகும் சூழல்களும் எழாமல் இல்லை. பொருளிலக்கணக் கல்வியில் ஒரு தொடர்ச்சி அறுபட்டதை இறையனாரகப்பொருள் வரலாறு உணர்த்துகிறது அதுபோன்றே கி. பி. 19-ஆம் நூற்றாண்டுவரை பொருளிலக்கணம், சங்க நூற்கள், காவியம் முதலியவற்றில் பயிற்சி மங்கியிருந்தது என்றே சொல்லலாம். எழுத்து, சொல்லுக்கு நன்னூல் போதும் என்ற நிலையிலே தமிழ் இலக்கணப் பயிற்சி இருந்தது. பொருளிலக்கணக் கல்வி அறிவே இல்லை. இந்தப் பின்னணியிலே தான் டாக்டர் உ. வே. சா வின் இலக்கணப் பணியை மதிப்பிட வேண்டியிருக்கிறது. எனவே, முதலில் உ. வே. சாவின் இலக்கணக் கல்வி பற்றியும் பயிற்சி பற்றியும் நோக்குவோம்.

---

1. சோம-இளவரசு, இலக்கண வரலாறு (1963), பக். 226-244.

# 2. உ. வே. சா. இலக்கணக் கல்வியும் பயிற்சியும்

உ. வே. சாவின் இலக்கணப் பதிப்புக்களை நோக்கு முன் அவர் பெற்ற இலக்கணக் கல்வி, பயிற்சி முதலியவற்றை வரலாற்று நோக்கில் பார்ப்பது நல்லது. அந்தக் காலத்தில் தமிழ்க் கல்வியில் எழுத்துக்கும், சொல்லுக்கும் நன்னூலும், அணிக்குத் தண்டியலங்காரமும், யாப்புக்கு யாப்பருங்கலக் காரிகையுமே பெரும்பாலும் பயிற்றுவிக்கப்பட்டு வந்தன தொல்காப்பியப் பயிற்சி குன்றியிருந்தது. பொருளிலக்கணப் பயிற்சியும் மிக மிகக் குறைவு (என் சரித்திரம், பக். 405).

## நன்னூல் கல்வி

உ. வே. சா. முதலில் தமது பன்னிரண்டாவது வயதில் கார்குடியில் கஸ்தூரி அய்யங்காரிடம் பாடம் கேட்டதைக் கீழ்க் கண்டவாறு உரைப்பார்:

''கஸ்தூரி ஐயங்கார் நன்னூலில் நல்ல பயிற்சியுடையவர். தஞ்சாவூரில் இருந்த இலக்கணம் அண்ணாப் பிள்ளையென்ற வித்துவானும் அவரும் இலக்கண இலக்கிய விஷயமான செய்திகளை ஓலையில் எழுதி வினாவுவதையும் விடையளிப்பதையும் வழக்கமாகக் கொண்டிருந்தார்கள். அவ்வோலைகளை நானும் பார்த்திருக்கிறேன். இராமாயணம், பாரதம், பாகவதம் முதலிய நூல்களைத் தம் கையாலேயே கஸ்தூரி ஐயங்கார் ஏடுகளில் எழுதி வைத்திருந்தார். ஐயங்காரிடம் நான் பாடங் கேட்கத் தொடங்கினேன். குன்னத்திலிருந்தபோது தஞ்சையிலிருந்து வந்த ஸ்ரீநிவாஸையங்காரென்பவரிடம் மகாலிங்கையர் இலக்கணத்தைப் பாடம் கேட்டேன்.* நன்னூல் முதலிய இலக்கணங்

* மழவை மகாலிங்கையர் இலக்கணச் சுருக்கம் என்ற பெயரில் எழுத்து, சொல், சொற்றொடர், யாப்பு ஆகியவற்றின் இலக்கணத்தைச் சுருக்கமாக 365 விதிகளில் அமைத்து 1878-இல் வெளியிட்டுள்ளார். ஆரம்ப நிலையில் உள்ளார்க்கும் பள்ளி மாணவர்க்கும் பயன்படுவது இது (பார்க்க: தமிழ் நூல் விவர அட்டவணை முதல் தொகுதி-முதல் பகுதி (1961). எண்:1523—1532). பிற்காலத்தில் மழவை மகாலிங்கையர் பெயரில் தமிழ் இலக்கணம் (மூன்றாம் புத்தகம்)-புதுப்பிக்கப்பட்டது. (மாக்மில்லன் அண்டு கம்பெனி, சென்னை, 1923, மொ. ப. 106) என்பது காணப்படுகிறது. இதில் எழுத்தியல் சொல்லியல், பெயரியல், வினையியல், இடையியல், உரியியல், சொற்றொடரியல், புணரியல், பதவியல், பொதுவியல் என்ற இயல்களில் 440 விதிகள் உள்ளன. இரண்டு நூலுக்கும் உள்ள தொடர்பு என்ன என்பது தெரியவில்லை. அய்யரவர்கள் குறிப்பிடுவது இவற்றில் ஒன்றாதல் வேண்டும்.

களைத் தொடர்ந்து கேட்க வேண்டுமென்ற விருப்பம் எனக்கு இருந்து வந்தது. அதனால், முதல் முதல் அவரிடம் நன்னூல் பாடங் கேட்கலானேன். விசாகப் பெருமாளையர் இயற்றிய காண்டிகையுரையை ஒருவாறு பாடம் சொல்லி அதன் கருத்துரை, விசேஷ உரை முதலியவற்றை எனக்கும் பாடம் பண்ணி வைத்துவிட்டார். தினந்தோறும் நன்னூல் முழுவதை யும் ஒரு முறை நான் பாராமற் சொல்லிவந்தேன். நிலவில் பொருள்கள் காணப்படுவது போல் நன்னூலிலுள்ள இலக்க ணங்கள் எனக்குத் தோன்றின; அந்நூலைச் சிக்கறத் தெளிந்து கொள்ளவில்லை. படித்தவர் யாரேனும் வந்தால் கஸ்தூரி ஐயங்கார் எனக்குப் பாடம் சொல்லிய நன்னூல் சூத்திரங்களை யும் உரையையும் என்னைச் சொல்லும்படிச் செய்வார். அவற்றை நான் ஒப்பிப்பேன். இப்பழக்கத்தால் அவை என் மனத்திற் பின்னும் நன்றாகப் பதிந்தன.

அக்காலத்தில் நன்னூலுக்கு நல்ல மதிப்பு இருந்தது. ஐயமற அதனை ஒருவன் தெரிந்துகொண்டால் அவனை நல்ல புலவ னென்று யாரும் கூறுவர். சூத்திரங்களின் விசேஷ உரைகளி லுள்ள ஆக்ஷேப சமாதானங்களை நன்றாகத் தெரிந்துகொண்டு விளக்குபவர்கள் சிலரே இருந்தனர். இலக்கியப் பயிற்சியிலேயே பெரும்பாலோருக்குக் கவனம் சென்றதேயன்றி இலக்கணப் பயிற்சியிற் செல்லவில்லை. இந்த நிலையில் நான் நன்னூற் சூத்திரங்களையும் உரையையும் மனனம் பண்ணித் தமிழில் ''இலக்கண-வித்துவான்'' ஆகக் கூடுமென்ற எண்ணம் என்னைக் கண்டோருக்கு உண்டாக்கினேன். அத்துறையில் நான் பின்னும் எவ்வளவோ தெரிந்துகொள்ள வேண்டியதுண்டென்பதை நான் மறக்கவில்லை!'' (ஷை பக்.105)

பின் மீனாட்சி சுந்தரம் பிள்ளையிடமும், தியாகராசச் செட்டியாரிடமும் பாடம் கேட்ட இராகவையரிடம் நன்னூல் காண்டிகை உரையைப் பாடம் கேட்டார் (ஷை பக்.132). நன் னூலின் வரையறையை மேலே கண்ட இரு ஆசிரியர்களும் தெளி வாக உணர்ந்திருந்தனர்.

திருவாவடுதுறை மடத்திற் சேர்ந்த பின் அய்யரவர்கள் மீனாட்சி சுந்தரம் பிள்ளையிடமும், மகாசந்நிதானம் மேலகரம் சுப்பிரமணிய தேசிகரிடமும் இலக்கணப் பாடங்கள் கேட்டார்.

மீனாட்சி சுந்தரம் பிள்ளையிடம் நன்னூல் விருத்தியுரை, காண்டிகையுரையை முதலில் பாடம் கேட்டார் உ. வே. சா.

(ஷெ பக்.327). அப்போது உடன் பயின்ற மாணவர்களிடம் நன்னூலில் கேள்விகள் கேட்டுத் திணற அடிப்பதும் உண்டு (ஷெ பக்.328).

## விசாகப் பெருமாளையரின் பால போத இலக்கணம்*

விசாகப் பெருமாளையர் எழுதிய பால போத இலக்கணம் என்ற புத்தகம் மிகவும் விளக்கமாகவும் சுருக்கமாகவும் உள்ளதென்று தியாகராசச் செட்டியார் வாயிலாகக் கேள்விப்பட்டு அதை மீனாட்சி சுந்தரம் பிள்ளையிடம் பாடம் கேட்டார் அய்யர் (ஷெ பக், 338). அதைப் பற்றி அவர் கூறுவது குறிக்கத் தக்கது.

''நன்னூலைப் பாடம் கேட்டவனாதலின் அப்புஸ்தகத்தின் அருமை எனக்கு விளங்கியது. அதனை முற்றும் இரண்டு முறை பாடம் கேட்டேன். இடையிடையே ஆசிரியர் அப்புஸ்தகத்தின் அமைப்பைப் பாராட்டியதோடு விசாகப் பெருமாளையரைப் பற்றிய வரலாற்றையும் எடுத்துச் சொன்னார்.'' — (ஷெ பக். 338)

## சுப்பிரமணிய தேசிகரிடம் நன்னூல் விருத்தியுரை முதலியன பாடம் கேட்டது:

சுப்பிரமணிய தேசிகர் சைவ சித்தாந்த சாத்திரங்களிலும் இலக்கியங்களிலும் மட்டுமின்றித் தமிழ் இலக்கணங்களிலும் ஆழ்ந்த புலமை உள்ளவர். அதோடு வடமொழியிலும் உள்ள புலமையால் அவருக்கு இலக்கணத்தில் மிகுந்த தெளிவு இருந்தது. ''தேசிகர் இலக்கணச் செய்திகளை வரையறையாகச் சொல்வதும், உரிய இடங்களில் வடமொழிப் பிரயோகங்களையும் வடநூற் செய்திகளையும் சொல்லுவதும் மிகவும் இனிமையாக

---

* இந்நூல் முதற்பதிப்பு எப்போது வந்தது என்பது தெரியவில்லை. ஐந்தாம் பதிப்பு 1870 இல் வெளி வந்துள்ளது. பின்பும் பல பதிப்புக்கள் வெளியாகியுள்ளன, பிற்காலத்தில் இந்நூலின் திருந்திய பதிப்பு, தமிழ் இலக்கணம் நான்காம் புத்தகம்-திருத்தணிகை விசாகப் பெருமாளையர் இயற்றியது (மாக் மில்லன் அண்டு கம்பெனி, சென்னை, 1921, மொ. பக்:186) என்ற பெயரில் வெளியாகியுள்ளது. இதில் எழுத்து, சொல், புணர்ச்சி, தொடர்மொழி என நான்கு அதிகாரங்களில் 418 பங்கிகள் (பத்திகள்) காணப்படுகின்றன.

இருக்கும்'' என்பார் உ. வே. சா. (ஷெ பக். 303) (மேலும் பார். ஷெ பக். 544).

நன்னூல் கற்றது பற்றி உ. வே. சா. மேலும் கூறுவார்:

''சுப்பிரமணிய தேசிகரிடம் நாங்கள் இலக்கண நூல்களையும் சைவ சித்தாந்த சாஸ்திரங்களையும் சில இலக்கியங்களையும் பாடம் கேட்டோம். நன்னூல் விருத்தியுரையைப் பாடம் கேட்க விரும்பியபோது சுப்பிரமணிய தேசிகர் அதன் சம்பந்த மாகச் சில விஷயங்களைச் சொல்லலானார்: ''நன்னூலுக்கு முதலில் சங்கர நமச்சிவாயர் உரை எழுதினார். பிறகு, சிவஞான முனிவர் அதைத் திருத்தியும் புதுக்கியும் விருத்தியுரையை அமைத் தார். அவர் தாம் எழுதிய சிவஞான போத திராவிட மகாபாஷ் யத்தில் அமைத்துள்ள அரிய வடமொழி தென்மொழிப் பிரயோகங்களை எளிதிற் பிற்காலத்தவர்க்குப் புலப்படுத்த நினைந்து இலக்கணக் கொத்து, தொல்காப்பியச் சூத்திர விருத்தி இலக்கண விளக்கச் சூறாவளி என்னும் நூல்களிலும் பிறவற்றி லும் உள்ள முக்கியமான சிலவற்றை அவ்வுரையில் அங்கங்கே சேர்த்தார். சில இடங்களில் சிலவற்றைக் குறைத்தும் சில வற்றை மாற்றியும் எழுதி நிறைவேற்றினார். இலக்கணக் கொத்து முதலிய மூன்றையும் பாடம் கேட்ட பிறகுதான் விருத் தியுரை தெளிவாக விளங்கும்'' என்று சொல்லி சிவஞான முனிவர் தம் கரத்தாலேயே திருத்திய ஏட்டுப் பிரதி ஒன்றை எடுத்துக் காட்டினார்.* அப்பிரதியில் அங்கங்கே அடித்தும் கூட்டியும் மாற்றியும் அம்முனிவர் எழுதியவற்றைப் பார்த்து மகிழ்ந்தோம்.

தேசிகர் கட்டளைப்படியே இலக்கணக்கொத்து முதலிய மூன்று நூல்களையும் பாடம் கேட்டுப் பிறகு நன்னூல் விருத்தி யுரையைக் கேட்கத் தொடங்கினோம். சங்கர நமச்சிவாயர் உரை மாத்திரம் இருந்த ஏடொன்று மடத்தில் இருந்தது. அதை யும் வைத்துக்கொண்டு எங்கெங்கே சிவஞான முனிவர் விருத்தி யுரையில் திருத்தம் செய்திருக்கிறாரோ அங்கெல்லாம் 'சி' என்ற அடையாளமிட்டுக் குறித்துப் படித்தோம்.''(ஷெ. பக். 403-404).

நன்னூல் விருத்தியுரை முழுவதையும் ஒரு முறை ஸ்ரீ பரம சிவத் தம்பிரான் என்பவரிடம் பாடம் கேட்டிருக்கிறார் அய்யர்

* திரு. தண்டபாணி தேசிகர் நன்னூல் விருத்தியுரைக்கு இதைப் பயன்படுத்தியதாகக் கூறுகிறார். நன்னூல் விருத்தியுரை 1971 (இரண்டாம் பதிப்பு) முன்னுரை பக். 4)

(ஷெ. 433). சமஸ்கிருத வியாகரணம் படித்த அவர் சில நுட்ப மான கருத்துக்களை விளக்கிச் சொன்னார்.

## காரிகை பாடம் கேட்டது

மிகவும் இளம் பருவத்திலே அய்யரவர்கள் பாடம் கேட்ட இன்னொரு இலக்கண நூல் யாப்பருங்கலக்காரிகை. செங்கணம் விருத்தாசல ரெட்டியாரிடம் காரிகையைச் சுமார் நான்கு மாதம் பாடம் கேட்டார். இதைப் பற்றி அய்யரவர்கள் தன் என் சரித்திரத்தில் (ஷெ பக். 137—151) மிக விரிவாக எழுதியுள்ளார்

"...நீர் நன்னூல் காண்டிகை உரையைப் பாடம் கேட்டிருத்தலால் எழுத்து, சொல் இலக்கணங்கள் ஒருவாறு தெரிந்திருக்கும். இந்த ஞானமே மேலே இலக்கியங்களைப் படித்தற்குப் போதுமானது. அடுத்தபடியாக யாப்பிலக்கணம் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம்; ஆதலால் முதலில் யாப்பருங் கலக்காரிகையைப் பாடம் சொல்லுகிறேன்..."

என்று விருத்தாசல ரெட்டியார் அய்யரவர்களிடம் கூறிப் பாடத்தைச் சுக்கில வருஷம் மார்கழி (1869) மாதத்தில் ஆரம்பித்தார். அப்போது அய்யரவர்களுக்கு வயது பதினான்கு. தான் காரிகை கற்றதைக் கீழ்க் கண்டவாறு எடுத்துரைப்பார் அய்யர்

..."யாப்பிலக்கணத்தைப் பற்றிச் சிறிதும் அறியாத நிலையில் இருந்தேன் நான். எனக்கு அதைக் கற்பிப்பது சிரமமான காரியந்தான். ஆனாலும், ரெட்டியார் தெளிவாக எனக்குக் கற்பித்தார். அவருடைய ஞானமும் என்னுடைய ஆவலும் சேர்ந்து அந்தத் தெளிவுக்குக் காரணமாயின" (ஷெபக். 141-142).

"யாப்பருங்கலக் காரிகையும் உரையும் மேற்கோட் செய்யுட்களும் என் உள்ளத்தே பதிந்தன. மேற்கோட் செய்யுளின் அர்த்தத்தையும், எந்த இலக்கணத்துக்கு உதாரணமாக அது காட்டப்படுகிறதோ அந்த இலக்கணம் அமைந்திருப்பதையும் ரெட்டியார் எடுத்துரைப்பார். அந்த இலக்கணத்தை அமைத்துப் புதிய செய்யுட்கள் எழுதும்படிச் சொல்வார். நான் எழுதியதைப் பார்த்து இன்ன இன்ன பிழைகள் இருக்கின்றன என்று விளக்குவார். ஒருவகைச் செய்யுளுக்குரிய இலக்கணத்தை அவ்வகைச் செய்யுளாலேயே உரைக்கும் இலக்கண நூல் தெலுங்கிலும் வடமொழியிலும் உள்ளனவாம். ரெட்டியாருக்குத் தெலுங்கு தாய் மொழி. அதிலும் அவருக்குப் பயிற்சி உண்டு. தெலுங்கு நூலைப் பற்றி என்னிடம் சொல்லி "அவ்வாறே நீரும் செய்து பழகும்" என்று உரைத்து அவ்வழியையும் கற்பித்தார்.

அப்படியே நேரிசை வெண்பாவின் இலக்கணத்தை நேரிசை வெண்பாவிலேயே அமைத்தேன்; ஆசிரியப்பாவின் இலக்கணத்தை ஆசிரியப்பாவாலேயே கூறினேன். மிகவும் சிரமப்பட்டு இவ்வாறு பாடிக் காட்டுவேன். அச்செய்யுட்களில் உள்ள குணத்தைக் கண்டு முதலில் எனக்கு உத்ஸாகம் ஊட்டுவார்; பிறகு பிழை இருந்தால் அதனையும் எடுத்துக் காட்டுவார்.

காரிகையின் முதற் செய்யுளின் உரையில் உரையாசிரியராகிய குணசாகரர் வேறு மொழிகளிலுள்ள நூல்களை உவமையாக எடுத்துச் சொல்லுகிறார். அந்நூல்களைப் பற்றிய வரலாறுகள் மாத்திரம் ரெட்டியாரால் சொல்ல இயலவில்லை ஆதலின் அவ்விஷயத்தில் சந்தேகம் இருந்தது. இடையிடையே வரும் மேற்கோள்களில் ஜைன சமயத் தொடர்புடைய பாடல்கள் பல. அவற்றில் அச்சமய சம்பந்தமான சில செய்திகளை அவர் விளக்கவில்லை. இவற்றைத் தவிர, மற்ற எல்லாம் தெளிவாகவும் அழுத்தமாகவும் என் அறிவில் பதிந்தன. அந்த அஸ்திவார பலம் இன்னும் இருந்து வருகிறது. இலக்கணமென்றால் கடினமானதென்ற நினைவே இல்லாமல் சுலபமாகவும் மனத்துக்கு உத்ஸாகமுண்டாகும் வண்ணமும் ரெட்டியார் பாடம் சொன்ன முறையை நான் என்றும் பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன். அவரிடம் நான்கு மாதங்கள் நான் பாடம் கேட்டேன் ஆயினும், என் வாழ்வு முழுவதும் அப்பாடம் பயன்பட்டு இன்பம் தருவதாயிற்று.'' (ஷை பக். 142-143)

பிற்காலத்தில் சுப்பிரமணிய தேசிகரிடமும் காரிகையை அய்யர் பாடம் கேட்டார் (ஷை பக். 404).

## பிற இலக்கண நூல்கள் பாடம் கேட்டது
## தண்டியலங்காரம், பாட்டியல் நூல்கள்

காரிகை பாடம் கேட்ட காலத்தில் அய்யர் தண்டியலங்காரத்தைத் தாமே படித்தார். (ஷை பக். 144). பின் பாட்டியல் நூல்களில் பயிற்சி பெற்றார். இது பற்றி அய்யர் கூறுவதாவது:

''காரிகைக்குப் பிறகு ரெட்டியார் எனக்குப் பொருத்த இலக்கணங்களையும் கற்பித்தார். அவற்றை அவர் நன்றாக ஆராய்ந்து வரையறை செய்து வைத்திருந்தார். அவருடைய வீட்டுத் திண்ணைச் சுவர்களில் பல இடங்களில் இரட்டை நாகபந்தம், அஷ்ட நாகபந்தம் முதலிய சித்திரக் கவிகள் எழுதப்பெற்றிருக்கும். நான் முன்பே சில பாட்டியல் நூல்களைப் படித்திருந்

தமையால் அவர் கற்பித்தபோது எனக்கு அவை தெளிவாக விளங்கின. ரெட்டியாருடைய விருப்பத்தின்படி ஒவ்வொரு பாட்டியலிலும் ஒரே விஷய சம்பந்தமாகக் காணப்படும் இலக்கணங்களைத் தொகுத்து வரிசைப் படுத்தி ஏட்டிற் பிரதி செய்து கொண்டேன். மங்கலப் பொருத்தம்; என்பதன் இலக்கணத்தைப் பற்றி எல்லாப் பாட்டியல்களிலுமுள்ளவற்றை ஒருங்கே எழுதினேன். இம்முறையில் மற்றவற்றையும் எழுதினேன். இவ்வாறு தொகுத்து எழுதிய அச்சுவடி, விஷய வரிசையால் அமைந்த பாட்டியற் கொத்தாக இருந்தது. அப்பிரதி பிற்காலத்தில் என்னிடமிருந்து நழுவி விட்டது. அவரிடம் தத்தாத்திரேயப் பாட்டியல் என்னும் பிரபந்த இலக்கண நூல் இருந்தது. அதனையும் படித்தேன். பிரதி செய்து கொள்ளவில்லை. இப்போது அந்நூல் தமிழ் நாட்டில் அகப்படவில்லை சித்திரக் கவிகளின் இலக்கணத்தையும் அவற்றை இயற்றும் பழக்கத்தையும் ரெட்டியார் உதவியால் அறிந்து கொண்டேன் (ஷை பக். 145).

இலக்கண விளக்கம், யாப்பருங்கலக் காரிகை, தண்டியலங்காரம், வடமொழிக் குவலயானந்தத்தைத் தழுவி விசாகப் பெருமாளையர் எழுதிய அணியிலக்கணம் முதலியவற்றைத் தேசிகரிடம் பாடம் கேட்டார் உ. வே. சா. (ஷை பக். 404). தண்டியைப் பாடம் சொல்லும்போது அதன் வடமொழி மூல நூலாகிய காவ்யாதர்சத்திலுள்ள சுலோகங்களை எடுத்துச் சொல்லி விளக்குவார் தேசிகர். அது போன்றே காரிகையின் அவதாரிகையிலே உள்ள விஷயங்களை விரிவாக எடுத்துச் சொல்லி விளக்குவாராம். உ. வே. சாவுக்கு அதுவரையில் யாரும் அவ்விஷயங்களைத் தெளிவாகச் சொன்னதில்லையாம் (ஷை பக். 404). அணியிலக்கணங்களைப் படித்து வருகையில் அவற்றிற் கூறப் பெற்ற அணிகளை அமைத்துத் தேசிகர் விஷயமாகப் புதிய செய்யுட்களை எழுதி அவரிடம் காட்டுவார் உ. வே. சா. தேசிகர் கேட்டு மகிழ்ந்து பிழையிருப்பின் எடுத்துரைத்துத் திருத்துவார்.

மேலும் தேசிகரிடம் கேட்ட இலக்கணப் பாடங்களைப் பற்றி உ. வே. சா. கீழ்க்கண்டவாறு எழுதுகிறார்.

"தொல்காப்பியம் எழுத்து அதிகாரம், இளம்பூரணர் உரை, சொல்லதிகாரம் சேனாவரையர் உரை, இலக்கண விளக்கம் என்பவற்றை நாங்களாகப் படித்து, சில சந்தேகங்களை நீக்கிக் கொண்டோம். சேனாவரையர் உரையில் உள்ள சந்தேகங்களை விளக்கும்போது தேசிகருக்கு அளவிறந்த

உத்ஸாகம் உண்டாகும். ''இவர் உரை எழுதுவதைப் போல் இலக்கண நூலுக்கு யாரும் எழுத முடியாது-ஸம்ஸ்கிருத ஞானம் நன்றாக இருப்பதால் பல அருமையான விஷயங்களைக் காரண காரியத்தோடு நியாயங் காட்டி எழுதுகிறார்;'' என்று அவ்வுரையைப் பாராட்டுவார்.

எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் இலக்கண நூல்களைத்தான் பாடம் கேட்டோம். அகப்பொருள் இலக்கணத்தைக் கேட்கவில்லை. திருச்சிற்றம்பலக் கோவையாரை உரையுடன் கேட்டபோது அவ்விலக்கியத்திலிருந்தே இலக்கணத்தை அறிந்து கொண்டோமே யன்றித் தனியே அகப்பொருள் இலக்கண நூலைப் பாடம் கேட்கவில்லை. அக்காலத்தில் அவ்விலக்கணத்தைத் தனியே படிப்பார் மிகக் குறைவு. பொருளிலக்கணத்தின் மற்றொரு பிரிவாகிய புறப்பொருளைப் பற்றிய ஆராய்ச்சியே இல்லை. அகப் பொருளிலக்கணத்தை ஒருவரும் படியாவிடினும் அகப் பொருளிலக்கியங்களைப் படித்தார்கள். புறப் பொருள் விஷயத்திலோ இலக்கியமும் வழக்கில் இல்லை, இலக்கணத்தைத் தேடுவாரும் இல்லை.

யாப்பருங்கலக் காரிகை கேட்டபோது செய்யுள் வகைகளுக்கு உதாரணமாக அந்நூலில் அமைந்திருக்கும் சில பாடல்களுக்குத் தக்கவாறு பொருள் விளங்கவில்லை. ஜைன சமய சம்பந்தமான செய்திகள் அவற்றில் வருகின்றன. நான் முன்பு விருத்தாசல ரெட்டியாரிடம் அதனைக் கேட்டகால முதலே அச் சந்தேகங்கள் விளங்காமலிருந்தன. தேசிகர், ''காரிகையிலுள்ள இலக்கணங்களுக்கு இலக்கியமாக ஸ்ரீ குமரகுருபரர் சிதம்பரச் செய்யுட்கோவை என்ற பிரபந்தம் ஒன்றை இயற்றியிருக்கிறார். சைவ சம்பந்தமான நூலாதலின் நன்றாக விளங்கும். செய்யுளிலக்கணத்தைத் தெரிந்துகொள்ள அந்த நூல் மிக்க உபகாரமாக இருக்கும்'' என்று சொல்லி எங்களுக்கு அதைப் பாடஞ் சொன்னார்.'' (ஷை பக். 404-405).

அத்தோடு யாராவது பெரிய மனிதர்கள் வந்தால் தொல்காப்பியப் பாயிர விருத்தி, இலக்கண விளக்கச் சூறாவளி, சிவஞான பாடியம் முதலியவற்றில் சிறந்த பாகங்களை அய்யரைக் கொண்டு படிப்பித்து அவற்றை வந்தவர்களுக்குத் தாமே விளக்குவார். அத்தகைய சமயங்களில் அய்யரவர்கள் கற்றுக்கொண்ட கருத்துக்கள் பல (ஷை பக். 409-544).

உ. வே. சா. அவர்கள் இவ்வாறு மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடம் ஆறு ஆண்டுகளும், சுப்பிரமணிய தேசிகரிடம் நான்கு ஆண்டுகளும் இலக்கிய இலக்கணங்களில் பாடங்கேட்டுத் தெளி

வாய்க்கற்பிக்கிறதிலும் தேர்ச்சி பெற்றார் (ஷை பக். 484). நிகண்டை இளம் பருவத்திலே மனனம் செய்திருந்தார் (ஷை பக். 164). வடமொழி அமரம் மூன்று காண்டங்கள் கூட அய்யருக்கு மனப் பாடமாக இருந்தன (ஷை பக். 52).

மேலே கூறிய இலக்கண நூல்கள் தவிர, தமிழிலுள்ள பிற இலக்கண நூல்களை அய்யரவர்கள் தாமே படித்துக்கொண்டதாகத் தெரிகிறது (எ.டு. ஷை பக். 666, 715, 726,743; 747).

புறநானூற்று ஆராய்ச்சிக்காக, புறப்பொருள் வெண்பா மாலை மூலமும் உரையுமுள்ள ஏட்டுச் சுவடியை வைத்து ஆராய்ந்து திணை துறைகளின் இலக்கணம் பெரும்பாலான வற்றைத் தெரிந்துகொண்டார் (ஷை பக். 728). புறப் பொருள் வெண்பாமாலை ஆராய்ச்சியின் போது தொல்காப்பியப் பொருளதிகார இளம்பூரணர் உரையின் ஏட்டுச் சுவடியைக் கண்டு அதையும் ஆராய்ந்து வைத்துக்கொண்டார் (ஷை பக். 743).

இலக்கண நூல்களைப் பதிப்பித்த பிற ஆசிரியர்களிடம் அய்யருக்குத் தொடர்பிருந்தது; விசாகப் பெருமாளையர் எழுதிய பஞ்ச லக்ஷண வினாவிடை, பாலபோத விலக்கணம், நன்னூல் விருத்தியுரை, யாப்பருங்கலக் காரிகையுரை, தண்டியலங்கார உரை, வச்சணந்திமாலை முதலியவற்றை அச்சிட்ட தில்லையம் பூர் சந்திர சேகர கவிராஜ பண்டிதர், தொல்காப்பியம், வீரசோழியம், இறையனாரகப் பொருளுரை, இலக்கண விளக்கம், முதலியவற்றைப் பதிப்பித்த சி. வை தாமோதரம் பிள்ளை முதலியவர்களுடன் அய்யரவர்களுக்குத் தொடர்பிருந்தது.

## இலக்கணப் பயிற்றாசிரியர்

இலக்கணத்தைச் சிறப்புறக் கற்ற தோடமையாது, இலக் கணத்தை மாணவர்க்கு எளிய முறையில் கற்பிக்கும் சிறந்த ஆசிரியராகவும் அய்யரவர்கள் விளங்கினார்கள். திருவாவடு துறை மடத்திலிருக்கும்போதே அய்யரவர்கள் நன்னூல் முதலியவற்றைக் காவடிச் சிந்து பாடிய சின்னிகுளம் அண்ணா மலை ரெட்டியாருக்குப் பாடம் சொல்லி உள்ளார் (ஷை பக். 407). கல்லூரியில் முதன் முதலில் பி. ஏ. இரண்டாவது வகுப்புக்கு இலக்கணப் பாடம் சொன்னதைக் கீழ்க்கண்டவாறு நினைவு கூர்வார் அய்யர்.

''பி. ஏ. இரண்டாவது வகுப்புக்குள் நான் சென்றேன். செட்டியாரும் உடன் வந்தார். அங்கே நன்னூல் பாடம் நடத்தத் தொடங்கினேன். பெயரியலில், 'ஒன்றே யிருதிணைத் தன்

பாலேற்கும்'' என்னும் சூத்திரத்தைச் சொல்லி வந்தேன். அப்பொழுது ஒரு சேவகன் நாற்காலி ஒன்றை எடுத்து வந்து என் பக்கத்தில் போட்டான். அடுத்த நிமிஷம் கோபாலராவ்* வந்தார். உடனே எழுந்து அஞ்சலி செய்தேன். ''நீங்கள் சும்மா இருந்து பாடத்தை நடத்துங்கள்'' என்று சொல்லிவிட்டு அவர் அந்த நாற்காலியில் அமர்ந்தார். நான் சூத்திரத்திற்கு உரையும் உதாரணங்களும் சொல்லிவிட்டுக் கேள்விகள் கேட்டேன். ராயர் ஒரு மாணாக்கரிடமிருந்து ஒரு நன்னூல் புஸ்தகத்தை வாங்கிக் கையில் வைத்துக்கொண்டு கவனித்து வந்தார்.

அவர் அங்கே இருந்ததில் எனக்குச் சிறிதும் அதைரியம் ஏற்படவில்லை. ஊக்கத்துடனே சொல்லி வந்தேன். அவர் நன்னூலை நன்றாகக் கற்றவரென்பதைத் தியாகராச செட்டியார் என்னிடம் முன்பே சொல்லியிருந்தார். அதனால் எனக்குப் பின்னும் தைரியமே பிறந்தது. நன்னூலை இளமை தொடங்கியே நான் படித்துப் பலவகையாக ஆராய்ந்து சிந்தித்துஒழுங்கு படுத்தி ஞாபகத்தில் வைத்திருந்ததால் அதனைப் பாடம் சொல்லுவது எனக்கு மிகவும் சாதாரணமாக இருந்தது. நான் முன்னும் பின்னுமுள்ள செய்திகளோடு இயைத்து விஷயங்களை விளக்கினேன். நூல் முற்றும் படித்த ராயர் அவற்றிலிருந்து என் பயிற்சியை உணர்ந்து திருப்தியடையக்கூடும் என்ற நம்பிக்கையோடு நான் பாடம் சொன்னேன்.'' (ஷை பக். 504).

அய்யரவர்கள் ஐந்திலக்கணச் செய்திகளையும் அமைத்துப் பாடல் விளக்கம் செய்வது எல்லோரையும் கவரத்தக்கதாக அமைந்தது (ஷை பக். 698). அது போன்றே செய்யுளியற்றும் ஆற்றலையும் அய்யரவர்கள் பெற்றிருந்தார்கள்.

இவ்வாறு அய்யரவர்கள் பெற்ற செம்மையான இலக்கணப் பயிற்சி, பதிப்புத் துறைக்கும். அதற்காக அவர் மொழியிலும் இலக்கியத்திலும் செய்த ஆய்வுகளுக்கும் பெருந்துணையாக அமைந்தது என்பதில் ஐயமில்லை.

---

*கும்பகோணம் கல்லூரி முதல்வர்

# 3. உ. வே. சா. இலக்கணப் பதிப்புக்கள்

டாக்டர் உ. வே. சா. பதிப்பித்த நூல்கள் எழுபத்து நான்கில்[1], நான்கு மட்டுமே இலக்கண நூல்களாகும். அவையாவன:

| வரிசை எண் | நூற் பெயர் | முதற்பதிப்பு ஆண்டு | உ.வே.சாவுக்கு அப்போது வயது | ஏனைய பதிப்புக் கள் | மொத்தப் பதிப்புக் கள் |
|---|---|---|---|---|---|
| 1. | புறப்பொருள் வெண்பாமாலை | 1895 | 40 | அய்யர் காலத் தில் வந்தவை: (1908 தேர்வுப் பதிப்புக்கள்) 1915, 1924, 1934 | 4 |
| | | | | அவருக்குப் பின் வந்தவை 1942, 1946, 1950, 1953, 1963 | 5 |
| 2. | நன்னூல்-மயிலைநாதர் உரை | 1918 | 63 | அய்யருக்குப் பின்வந்தது: | 1 |
| | | | | 1946 | 1 |
| 3. | நன்னூல்-சங்கரநமச்சி வாயர் உரை | 1925 | 70 | 1935 | 2 |
| | | | | அய்யருக்குப் பின்வந்தவை: 1942, 1953 | 2 |
| 4. | தமிழ் நெறி விளக்கம் | கலைமகள் தொகுதி 10-11 ஆகஸ்டு 1936 முதல் மார்ச்சு 1937 வரை | 82 | 1937 | 2 |
| | | | | அய்யருக்குப் பின்வந்தது 1947 | 1 |

அய்யரவர்கள் காலத்திலேயே புறப் பொருள் வெண்பா மாலைக்கு நான்கு பதிப்புக்களும், நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரைக்கும், தமிழ் நெறி விளக்கத்துக்கும் இரண்டிரண்டு பதிப்புக்களும், நன்னூல் மயிலை நாதர் உரைக்கு ஒரு பதிப்பும் வெளியாயின. அய்யரவர்களுக்குப்பின் அவர் மகனார் திரு.

1. பூ. சொல்விளங்கும் பெருமாள், டாக்டர் உ. வே. சா. பதிப்புப் பணி ஓராய்வு, மதுரை (1981) பக். 1

கலியாண சுந்தரய்யர் முதலியோரால் புறப் பொருள் வெண்பா மாலைக்கு ஐந்து பதிப்புக்களும், நன்னூல் சங்கரநமச்சிவாயர் உரைக்கு இரண்டும் ஏனைய இரண்டுக்கும் ஒவ்வொரு பதிப்பும் வெளியாகியுள்ளன. பின்வந்த இப்பதிப்புக்களில் எல்லாம் அய்யரவர்கள் விட்டுச்சென்ற திருத்தங்களும் பிறவும் சேர்க்கப் பட்டுள்ளன. இது அய்யரவர்கள் பதிப்புத் துறையில் மேற் கொண்ட இடையறா முயற்சியை உணர்த்தும்.

அய்யரவர்களின் முதல் இலக்கணப் பதிப்பு வெளியாகும் போது அவருக்கு வயது நாற்பது, இறுதிப் பதிப்பு வரும்போது வயது எண்பத்திரண்டு. இந்த நாற்பத்திரண்டு ஆண்டுகளுக் கிடையே அய்யரவர்களின் புலமை முதிர்ச்சி, அனுபவம் முதலியவற்றால் பதிப்புக்கள் அடைந்தசெப்பங்கள் பல. இதன் மூலம் அவர்கள் பதிப்புத் துறையில் மேற்கொண்ட இடையறா முயற்சியையும் முன்னேற்றங்களையும் மட்டுமின்றி, தாம் பதிப்புத் துறையில் பெற்ற அனுபவங்களை ஏற்று மேலும் மேலும் செப்பஞ் செய்யும், செய்வன திருந்தச் செய்யும் பண்பை யும் நாம் உணர்ந்து கொள்ளலாம்.

உ. வே. சா. அவர்கள் சீவக சிந்தாமணி போன்ற மிகப் பெரிய நூலாயினும் சரி, சிறிய நூலாகிய பழனி இரட்டை மணி மாலை ஆயினும் சரி எல்லாவற்றையும் மிகுந்த கவனத்துடனும், செப்பமாகவும் பதிப்பிக்கும் பண்பினர். பொறுமையுடன் ஏடுகள் தேடுதல், பாடவேறுபாடுகளைத் திரட்டிச் செந்நெறியில் மூல பாடம் காணுதல், பின்னர் நூலகத்துள்ள பொருள் சிக்கறுக்கும் செய்திகளைப் பலவழிகளிலும் திரட்டுதல், ஒப்புமைப் பகுதிகள் காட்டல், மேற்கோள்களின் ஆகரம் சுட்டுதல், பல வகையான அகராதிகள் தயாரித்தமைத்தல், முன்னுரையாயமையும் நூலாராய்ச்சி முதலியவை உ. வே. சா. அவர்களின் பதிப்பு நெறி ஆகும். இத்தகைய செப்பமான நெறிகளை வகுத்துக் கொண்டு பதிப்புப் பணியைச் செய்திருப்பதுதான் அவரின் தனித் தன்மை. அய்யரவர்களின் பதிப்புக்களில் அவரின் தனி முத்திரை களைத் தவறாது பார்க்கலாம். அதனால்தான் அய்யரவர்கள் பதிப்பிக்காத பிற பழந்தமிழ் இலக்கிய இலக்கண நூல்களைப் பயன்படுத்தும் போதெல்லாம் தமிழ் மாணவர்கள் ''இந் நூலுக்கு அய்யரவர்கள் பதிப்பு வெளியிடாமல் போய் விட்டார் களே'[2] என்று ஏங்கும் நிலை ஏற்பட்டுவிட்டது. அய்யரவர்கள் கைபட்டு ஏடாய்க்கிடந்த பழந்தமிழ் நூல் அகலிகைகள் எல்லாம்

2. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு பத்தாம் நூற்றாண்டு (1972) பக். 284, பன்னிரண்டாம் நூற்றாண்டு (1973) இரண்டாம் பாகம். பக் 651.

நூலுருவம் பெற்று உயிருடன் உலவத் தொடங்கிய கதையே இன்றைய தமிழாரய்ச்சியின் வரலாறாகும்.

அய்யரவர்களுடைய பதிப்புக்களைப் பற்றிக் கூறும்போது ''இவரது பெரும் புலமையும் ஆராய்ச்சியும் உருவெடுத்து வந்தவைதான் இவருடைய பதிப்புக்களாகும் என்பார் பேராசிரியர் ச. வையாபுரிப்பிள்ளை (தமிழ்ச்சுடர் மணிகள், பக். 318).

உ. வே. சா. பிற நிலைகளில் திறமையும் சிறப்பும் பெற்றிருந்தாலும் பதிப்புத் துறையே அவர் உயிர் மூச்சாகக் கொண்ட துறை. அவருடைய பதிப்புப்பணி பற்றிப் பொது நிலையிலும்[3] சிறப்பு நிலையிலும்[4] ஏற்கனவே சில நூல்கள் வெளிவந்துள்ளன. எனவே, இங்கு அவர் இலக்கண நூற் பதிப்புக்கள் மட்டும் ஆராயப் பெறும்.

இலக்கிய நூல் பதிப்பிலும் இலக்கண நூல் பதிப்பிலும் 1. ஏடு தொகுத்தல் 2. மூலபாட ஆய்வு போன்றவை பொதுவாக அமைபவை. இலக்கிய நூல் பதிப்பில் மூலநூலுக்கு உரையில்லை எனில் உரையோ, குறிப்புரையோ விளக்கமோ, அமைத்தல், ஒப்புமைப் பகுதிகளை அமைத்தல், அவை மேற் கோளாய் இலக்கணங்கள், உரைகளில் வருமிடங்களைத் தொகுத்தல், முதலிய வற்றைத் தனிக் கவனத்துடன் செய்யவேண்டும். இலக்கணப் பதிப்பிலோ எடுத்துக் காட்டாய் வரும் மேற்கோள்களின் ஆகரம் சுட்டுதல், இலக்கண நூற்பாக்கள் மேற்கோளாய்ப் பிற நூல் களில் வருமிடங்களைத் தொகுத்துச் சுட்டல், எடுத்துக் காட்டு அகராதி முதலியவை சிறப்பிடம் பெறும். இலக்கணக் கருத்துக் களுக்கு வேண்டிய இடங்களில் தகுந்த விளக்கமும் ஒப்புமைப் பகுதிகளும் அமைக்க வேண்டும். மேற்கோள் அகராதி அரும்பத அகராதி முதலியன இலக்கியப் பதிப்புக்கும், இலக்கணப் பதிப்புக்கும் ஒத்த நிலையில் தேவையானதாகும். இவற்றை யெல்லாம் உ. வே. சா. அவர்கள் எம்முறையில் செய்துள்ளார் என்பதைத் தனித்தனியாக ஆராயலாம்.

உ. வே. சாவின் பதிப்பு முயற்சிகளைப் பொது நிலையிலும் இலக்கணப் பதிப்புக்களைச் சிறப்பு நிலையிலும் பார்க்கும்போது,

3. சொல் விளங்கும் பெருமாள், மேற்காட்டிய நூல்.

4. இலா. குளோறியா சுந்தரமதி, டாக்டர் உ. வே. சா. சங்க இலக்கியப் பதிப்புகள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1984.

இரா. காசிராசன், உ. வே. சா. காப்பியப் பதிப்புக்கள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1985.

ஓரிரண்டு பொதுப் பண்புகள் கவனிக்கத்தக்கன. ஒன்று இது வரை யாரும் வெளியிடாத நூல்களை அச்சிற் கொணர்தல், இரண்டு பிறர் அச்சிட்டதில் உரை முதலியன இன்றியோ, பிற வகையிற் குறைவுடையனவாகவோ உள்ள நூல்களைச் செவ்விய முறையில் வெளியிடல், மூன்று தம் நீண்ட நாள் மேற் கொண்ட பதிப்பு முயற்சிகளில் விளைந்தபயனாய் ஒரு நூலை வெளியிடல் என்ற மூன்று பண்புகளை அவர் பதிப்பித்த இலக்கண நூல்களில் பார்க்கலாம்.

நன்னூல் மயிலை நாதர் உரையையும் தமிழ்நெறி விளக்கத்தையும் முதன் முதலில் அச்சிட்டு வெளியிட்டவர் அய்யரவர்களே. அதுபோன்றே நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரையைத் தனியே முதன் முதலில் அச்சிற் பதிப்பித்ததும் அய்யரவர்களே. புறப் பொருள் வெண்பாமாலைக்கு முன்பே பதிப்பிருந்தது. எனினும், அதில் உரை முதலியன காணாமை நோக்கி, தமக்குக் கிடைத்த உரையுடன் கூடிய படியைப் பதிப்பித்து வெளியிட்டார். புறநானூற்றைப் பதிப்பிக்கும் முயற்சியின் விளைவாய்ப் புறப்பொருள் வெண்பாமாலை வெளியாயிற்று. அதுபோன்றே மீனாட்சி சுந்தரம் பிள்ளை சுப்பிரமணிய தேசிகர் முதலியவர்களிடம் பாடம் கேட்டபோது பெற்ற பயன்களாலும் நேர்ந்த தேவைகளாலும் பிற்காலத்தில் சங்கர நமச்சிவாயர் உரை வெளியாயிற்று.

இவ்விடத்தில் ஒரு கேள்வி எழுவது இயல்பு. அய்யரவர்கள் ஏனைய இலக்கண நூல்களை அச்சிடாதது ஏன்? என்பதே அது. இதற்கு இரண்டு விளக்கங்கள் அளிக்கலாம்.

உ. வே. சா வுக்கு முன்பும் சமகாலத்திலும் பலர் தமிழ் இலக்கண நூல்கள் பலவற்றையும் முதன் முதலாக அச்சிட்டு வெளிப்படுத்திக் கொண்டிருந்தனர். தாண்டவராய முதலியார், சரவணப் பெருமாளையர், களத்தூர் வேதகிரி முதலியார் (1799-1852) ஆறுமுகநாவலர் (1822-1879), மழவை மகாலிங்கய்யர், சி. வை. தாமோதரம் பிள்ளை [1832-1901] இராமசுவாமிகள், சுப்பராயச் செட்டியார் [?-1894] சபாபதிசுவாமிகள், அமிர்த நாதர், தில்லையம்பூர் சந்திரசேகர கவிராச பண்டிதர் [?-1883], வி. எஸ். வைத்தியலிங்கம் பிள்ளை. இராசகோபாலப் பிள்ளை, இரா. வேங்கடாசலம் பிள்ளை [1858-1953], இரா. இராகவையங்கார் [1870-1948], கா. நமச்சிவாய முதலியார் [1876-1981], பவானந்தம் பிள்ளை [?-1932], எஸ். வையாபுரிப் பிள்ளை [1861-1956], தி. கி. இராமனுஜ அய்யங்கார் முதலியவர்கள் தமிழ் இலக்கண நூற்பதிப்பில் ஈடுபட்டுப் பல

நூல்களுக்கு முதற்பதிப்புக்களை வெளியிட்டுள்ளார்கள் என்பதை இக்கட்டுரையின் இறுதியிலமையும் தமிழ் இலக்கண நூல்கள்-முதற்பதிப்புக்கள், வெளியிட்டோர் முதலிய விவரங்கள் பற்றிய பட்டியல் காட்டும், இச்சூழலில் பிறர் செய்ததையே திரும்பச் செய்ய வேண்டாம் என்ற நோக்கில் இத்துறையில் அய்யரவர்கள் மிகுந்த கவனம் செலுத்தாதிருந்திருக்கலாம்.

அடுத்தது இதுவரை அச்சிடுவாரும் படிப்பாருமின்றிக் கிடந்த காவியங்கள், சங்க நூல்கள் முதலியவற்றைத் தேடிக் கண்டு பிடிப்பதும் வெளியிடு வதுமாகிய புதிய துறையில் அய்யரவர்கள் கவனம் செலுத்தியதாலும் அதிலேயே அவர் வாழ்நாளின் பெரும் பகுதி செலவழிந்ததாலும் இலக்கண நூற் பதிப்புக்குப் போதிய காலம் அய்யரவர்களுக்குக் கிடைக்காமற் போய்விட்டது என்று தோன்றுகிறது. மனிதர் பிராயம் நூறாயினும் ஒருவர் வாழ்நாளில் எல்லாவற்றையும் சாதித்துவிட முடியுமா? எவ்வளவு செய்தார் என்பதல்ல முக்கியம். எப்படிச் செய்தார் என்பதே முக்கியம். நான்கேயாயினும் அய்யரவர்கள் செய்த தமிழ் இலக்கணப் பதிப்புக்கள் சிறப்புக்கள் பல நிறைந்தவை. அந்நிலையில் உ. வே. சா. அவர்கள் பதிப்புத் திறனும், பணியும் இவ்வளவிற்காவது தமிழ் இலக்கணத்துக்குக் கிடைத்ததே என்று நாம் நிறைவு கொள்வோம்.

# தமிழிலக்கண நூல்களின்-முதற்பதிப்புக்கள், வெளியிட்டோர் முதலிய விபரம்

| வ.எ. 1 | நூற்பெயர் (காலம் நூற்றாண்டில்) 2 | அச்சான பகுதி 3 | பதிப்பித்தோர் 4 | ஆண்டு 5 |
|---|---|---|---|---|
| 1 | தொல்காப்பியம் | | | |
| | அ. எழுத்து-இளம்பூரணர் (11) உரை | முழுமையும் | சுப்பராயச்செட்டியார் | 1868 |
| | ஆ. ,, நச்சினார்க்கினியர் (14) உரை | ,, | மழவை மகாலிங்கையர் | 1849 |
| | இ. சொல்-இளம்பூரணர் (11) உரை | ,, | கா. நமச்சிவாயமுதலியார் | 1924 |
| | ஈ. ,, சேனாவரையர் (13) உரை | ,, | இராசகோபாலப்பிள்ளை | 1868 |
| | ,, ,, | ,, | ஆறுமுக நாவலர் பரிசோதித்து | |
| | உ. ,, நச்சினார்க்கினியர் (14) உரை | ,, | சி. வை. தாமோதரம்பிள்ளை பதிப்பித்தது | 1868[1] |
| | ஊ. ,, கல்லாடர் (15) உரை | ,, | | |
| | எ. ,, பெயர்தெரியா உரை (15) | பகுதிகள் | சி.வை. தாமோதரம்பிள்ளை | 1893 |
| | ஏ. ,, தெய்வச்சிலையார் (15) உரை | முழுமையும் | கு. சுந்தரமூர்த்தி | 1964 |
| | ஐ. பொருள்-இளம்பூரணர் (14) உரை | இயல் 1-2 | ,, | 1964 |
| | ,, ,, | முழுமையும் | ரா. வேங்கடாசலம்பிள்ளை-கரந்தை தமிழ்ச்சங்கம் | 1929 |
| | ஒ. ,, நச்சினார்க்கினியர் (14) உரை | இயல் 1-5 | | |
| | ,, ,, | இயல் 8 செய்யுளியல்மட்டும் | நமச்சிவாய முதலியார் | 1920 |
| | | | வ. உ. சி | 1928 |
| | ஓ. பொதுப்பாயிரம்-ஆத்திரையன் பேராசிரியர் (10) | | சி. வை. தாமோதரம்பிள்ளை | 1885 |
| | | — | இரா. இராகவய்யங்கார் | 1917 |
| 2 | புறப்பொருள் வெண்பாமாலை (9) | மூலம் மட்டும் | தி. வை. சதாசிவம் பண்டாரத்தார் | 1923 |
| | ,, | ,, | தாண்டவராய[2] முதலியார் | 1835 |
| | ,, | ,, | சரவணப் பெருமாளையர்[3] | ? |
| | புறப்பொருள் வெண்பாமாலை | மூலமும்உரையும் | இராமசாமிகள் | 1886 |
| | | | உ. வே. சா முதற்பதிப்பு | 1895 |

| | | | | |
|---|---|---|---|---|
| 3. | இறையனார் அகப்பொருள் (10) | மூலமும் உரையும் | சி. வை. தாமோதரம் பிள்ளை | 1883 |
| 4. | தமிழ்நெறி விளக்கம் (10) | சில இயல்கள் | உ.வே.சா. முதற்பதிப்பு | 1936 |
| 5. | யாப்பருங்கலம் (11) | மூலம் மட்டும் | தாண்டவராய முதலியார் | 1858— 1859 |
| | ,, | முழுமையும் | பவானந்தம்பிள்ளை | 1916 |
| 6. | யாப்பருங்கலக்காரிகை (11) | மூலமும்விருத்தி யுரையும் | களத்தூர் வேதகிரி முதலியார் | 1851 |
| 7. | வீர சோழியம் (11) | முழுமையும் | சி. வை. தாமோதரம் பிள்ளை | 1881 |
| 8. | நேமிநாதம் (12) | மூலம் மட்டும் | இராமசுவாமிகள் | 1886 |
| | ,, | முழுமையும் | இரா. இராகவய்யங்கார் | |
| | | | செந்தமிழ் வெளியீடு முதற்பதிப்பு | 1903 |
| | | | இரண்டாம் பதிப்பு | 1923 |
| 9. | வெண்பாப்பாட்டியல் (12) | ,, | தில்லையம்பூர் சந்திரசேகர் கவிராச பண்டிதர் | 1860 |
| 10 | தண்டியலங்காரம் (12) | ,, | ,, | 1857 |
| | ,, | ,, | இன்னொருவர் | ? |
| 11 | நன்னூல் (13) | | | |
| | அ. மயிலைநாதர் உரை (14) | ,, | உ. வே. சா | 1918 |
| | ஆ. சங்கர நமச்சிவாயர் உரை (18) மட்டும் | ,, | ,, | 1925 |
| | இ. விருத்தியுரை (சங்கர நமச்சிவாயரும் சிவஞான முனிவரும் (18) | சில பகுதிகள் | களத்தூர் வேதகிரி முதலியார் | 1851 |
| | ,, | முழுமையும் | ஆறுமுகநாவலர் | 1851 |
| 12 | அகப்பொருள் விளக்கம் (13) | மூலம் மட்டும் | தாண்டவராய முதலியார் | 1835 |
| | ,, | மூலமும் உரையும் | வி. எஸ். வைத்தியலிங்கம்பிள்ளை | 1878 |

| | | | |
|---|---|---|---|
| ,, | ,, | செந்தமிழ் வெளியீடு | 1913 |
| 13 களவியற் காரிகை (14) | மூலமும் உரையும் | ச. வையாபுரிப்பிள்ளை | 1931 |
| 14 பன்னிருபாட்டியல் (10/14) | ,, | இரா. இராகவய்யங்கார்-செந்தமிழ் வெளியீடு முதற் பதிப்பு | 1912 |
| | | இரண்டாம் பதிப்பு (திருத்தியது) | 1951 |
| 15 நவநீதப் பாட்டியல் (14) | 25 பாட்டுக்கள் | ? | 1908 |
| ,, | முழுமையும் | ச. வையாபுரிப்பிள்ளை | 1943 |
| ,, | இரு உரையுடன் | சாமிநாதய்யர் நூலக வெளியீடு | 1944 |
| 16 வரையறுத்த பாட்டியல் (14) | முழுமை ? | விசாகப் பெருமாளையர் முன்னிலையில் தில்லையம்பூர் சந்திரசேகர கவிராசபண்டிதர் | 1860 |
| 17 சிதம்பரப் பாட்டியல் (16) | முழுமை | மதுரைத்தமிழ்ச் சங்கம் | 1932 |
| 18 மாறனலங்காரம் (16) | ,, | ,, | 1915 |
| 19 மாறனகப் பொருள் (16) | ,, | ,, | |
| | | தி. கி. இராமானுஜ அய்யங்கார் | 1915 |
| 20 பாப்பாவினம் (17) | ,, | ,, | 1932 |
| 21 சிதம்பரச் செய்யுட் கோவை (17) | ,, | சபாபதி சுவாமி களும் வே. குமார சுவாமி உடையாரும் | 1886 |
| 22 பிரயோகவிவேகம் (17) | ,, | ஆறுமுக நாவலர் | 1882 |
| 23 அ. இலக்கண விளக்கம் (17) | முழுமை? | சி. வை. தாமோதரம்பிள்ளை | 1889 |
| ஆ. ,, | செய்யுளியல் | ,, | 1900 |
| 24 இலக்கணக் கொத்து (17) | முழுமை | ஆறுமுகநாவலர் | 1886 |
| 25 தொன்னூல் விளக்கம் (17-18) | ,, | புதுச்சேரி | 1838 |
| ,, | ,, | அமிர்தநாதர் நாகை | 1864 |
| 26 பிரபந்தமரபியல் (16) | 35 நூற்பா | மு. அருணாசலம் | 1973 |
| 27 பிரபந்ததீபம் (?) | 97 நூற்பாக்கள் உரையுடன் | ச. வே. சுப்பிரமணியன் | 1980 |

| | | | | |
|---|---|---|---|---|
| 28 | பிரபந்த தீபிகை (1)) | 26 செய்யுட்கள் | செந்தமிழ் தொகுதி 17 | 1918 |
| | | முழுமையும் உரையுடன் | ச. வே. சுப்பிரமணியன் & அன்னி தாமசு | 1982 |
| 29 | பிரபந்த திரட்டு | முழுமையும் உரையுடன் | அன்னிதாமசு | 1980 |
| 30 | முத்துவீரியம் (19) | முழுமையும் | முத்துவீரிய உபாத்தியாயர் | 1889 |
| 31 | சாமிநாதம் (19) | 34 நூற்பாக்கள் | இ. கோவிந்தசாமிப்பிள்ளை தமிழ்ப் பொழில்துணர் 4 | 1924 |
| | | முழுமையும் | செ. வை. சண்முகம் | 1975 |
| | | சிறப்புப்பாயிரம் எழுத்தாக்கமரபு பதமரபு மட்டும் இரு உரைகளுடன் | ,, | 1976 |
| 32 | சந்திரலோகம் [13], தமிழ் மொழி பெயர்ப்பு விசாகப் பெருமாளையர்-உரை நடையில் | | | |
| 33 | முத்துச்சாமி அய்யங்கார் செய்யுளில் குவலயானந்தம் [16] | முழுமை | செந்தமிழ் | 1909 |
| | தமிழ் மொழி பெயர்ப்பு [19] சங்கர நாராயண சாஸ்திரிகளும் முகவூர் மீனாட்சி சுந்தரக்கவிராயரும் | முழுமை | வேங்கடேசுர எட்டுப் பாண்டியன் | 1895 |
| 34 | குவலயானந்தம் [ ? ] மாணிக்கவாசகர் | முழுமை | ச. வே. சுப்பிரமணியன் | 1979 |

## இப்பட்டியல் தயாரிக்க உதவிய நூல்கள்:

மு. அருணாசலம். தமிழிலக்கிய வரலாறு-ஒன்பதாம் நூற்றாண்டு (1975), பத்தாம் நூற்றாண்டு (1972), பதினொராம் நூற்றாண்டு (1971), பன்னிரண்டாம் நூற்றாண்டு-முதற் பகுதி (1973), இரண்டாம் பகுதி (1973), பதின் மூன்றாம் நூற்றாண்டு (1970), பதினான்காம் நூற்றாண்டு (1969), பதினைந்தாம் நூற்றாண்டு (1969), பதினாறாம் நூற்றாண்டு-முதற் பாகம் (1977) இரண்டாம் பாகம் (1975) மூன்றாம் பாகம் (1976). அ. சதாசிவம் பிள்ளை, பாவலர் சரித்திர தீபகம்-பகுதி-1-பொ. பூலோக சிங்கம் புதிய பதிப்பு (1975), தமிழ் நூல் விவர அட்டவணை-முதல் தொகுதி-முதல் பகுதி (1961), சோம இளவரசு, இலக்கண வரலாறு (1963), John Murdoch, Classified Catalogue of Tamil Printed Books-with Introductory Notice (Reprinted with a number of Appendices and supplement) [1968] முதலியன. இதில் கூறப்படும் பதிப்பு ஆண்டு முதலிய விவரங்களில் இன்னும் சரி பார்க்கப் படவேண்டியனவும் உண்டு.

## குறிப்புக்கள் :

1. அ. சதாசிவம் பிள்ளை. பாவலர் சரித்திர தீபகம்; மேற்காட்டிய நூல் பக். 157

2. மு. அருணாசலம். தமிழிலக்கிய வரலாறு-ஒன்பதாம் நூற்றாண்டு (1975) பக். 282.

3. என் சரித்திரத்தில் உ. வே. சா. (பக். 742), புறப்பொருள் வெண்பாமாலை மூலம் மட்டும் சரவணப் பெருமாளையரால் முன்பு வெளியிடப்பட்டுள்ளதாக எழுதியுள்ளார் மு. அருணாசலம், தாண்டவராய முதலியார் அதை முதலில் வெளியிட்டுள்ளதாக எழுதியுள்ளார். இரண்டுக்கும் இடையேயுள்ள முரண்பாட்டைத் தீர்க்கும் தெளிவுகள் கிடைக்கவில்லை.

# 4. புறப் பொருள் வெண்பாமாலைப் பதிப்புக்கள்

## பதிப்பு முன்வரலாறு

புறப்பொருள் வெண்பாமாலை, மூலமும் உரையுமுள்ள சுவடியொன்றை அய்யரவர்கள் தமது திருநெல்வேலிச் சுற்றுப் பயணத்தின்போது (1888) ஆழ்வார் திருநகரியிலிருந்த இலட்சுமணக் கவிராயரிடமிருந்து பெற்று வந்தார் (என் சரித்திரம் பக். 647). 1894-இல் புறநானூற்றை முதலில் வெளியிடுவதற்குமுன் அய்யரவர்கள் செய்து வந்த புறத் திணை, துறை ஆராய்ச்சிக்கு இவ்வேட்டுச் சுவடி மிகுந்த துணை செய்தது (ஷை 728-740).

புறப்பொருள் வெண்பாமாலை வெளியீடு பற்றிய வரலாற்றை அய்யரவர்கள் என் சரித்திரத்தில் விரிவாக எழுதியுள்ளார்கள் (பக். 740-743). அப்பதிப்பு வெளியாகியபோது அய்யரவர்கள் வயது 40. இது அய்யரவர்கள் வெளியிட்ட பன்னிரண்டாவது நூல். அதற்கு முன்பு அவர்கள் வெளியிட்ட முக்கிய பழைய நூல்கள் சிந்தாமணி (1887) சிலப்பதிகாரம் (1892), புறநானூறு (1894), பத்துப் பாட்டு (1889) முதலியவையாகும். இந்நூல்களின் வெளியீட்டில் ஏற்பட்ட பயிற்சி இப்பதிப்பில் அய்யருக்குத் துணை செய்திருக்கும். புறப்பொருள் வெண்பா மாலையை வெளியிட வேண்டுமென்ற உள்ளக்கிடக்கையை முதலில் பாண்டித் துரைத் தேவரவர்களிடம் வெளியிட்டார்கள்:

...''அந்நூலிற் [புறநானூறு] கண்ட துறைகளுக்கு விளக்கம் தேடுகையில் புறப் பொருள் வெண்பாமாலை மிகவும் உபயோகமாயிற்று. அதனை நன்கு ஆராய்ந்தேன். அதற்குப் பழைய உரையொன்று என்பால் இருக்கிறது. மூலம் மாத்திரம் சரவணப் பெருமாளையரால் முன்பு வெளியிடப்பட்டிருக்கிறது. இப்போது உரையுடன் வெளியிடலாமென்று எண்ணுகிறேன்''... (ஷை. பக். 740) என்று அய்யரவர் பாண்டித்துரைத் தேவரவர்களிடம் தம் கருத்தை வெளியிட்டார்கள். அவர்கள்

17.12.84 அன்று ஒரு செய்யுட் கடிதமும் ஐந்நூறு ரூபாய்க்கு உண்டியலும் அனுப்பினார்கள். இம்முயற்சிக்குத் திருவாவடு துறை அம்பலவாண தேசிகர் முந்நூறு ரூபாய் வழங்கினார். மேற்கொண்டு செய்த முயற்சிகளை அய்யரவர்கள் சொற் களிலேயே பார்க்கலாம்:

"பாண்டித்துரைத் தேவர் கடிதம் புறப்பொருள் வெண் மாலைப் பதிப்பைத் தொடங்கத் தூண்டுகோலாக உதவியது. அந்த நூலை அடுத்தபடி பதிப்பிக்க எடுத்து வைத்துக் கொண்டேன்.

புறப்பொருள் வெண்பாமாலை என்பது புறப்பொருளின் இலக்கணத்தைக் கூறும் சூத்திரங்களையும் அவ்விலக்கணத்துக்கு இலக்கியமாகிய வெண்பாக்களையும் கொண்டது. வெண்பா மாலை என்றும் அதற்கு ஒரு பெயர் உண்டு. சேர குலத்திற் பிறந்த ஐயனாரிதனார் எனபவர் அந்நூலின் ஆசிரியர். என்னிட மிருந்த உரையின் ஆசிரியர் இன்னாரென்று அக்கால்த்தில் எனக்குத் தெரியவில்லை. பிறகு, இராமனாதபுரம் மகாவித்து வான் ஸ்ரீரா. இராகவையங்கார், மதுரைத் தமிழ்ச் சங்கத்தி லிருந்த ஒரு சுவடியிற் கண்ட குறிப்பினால் அவ்வுரையாசிரியர் மாகறல் சாமுண்டிதேவநாயகரென்று புலப்படுவதாகத் தெரிவித் தார்.

புறப்பொருள் வெண்பாமாலைச் சுவடிகள் சில என்பால் இருந்தன. பின்னும் கிடைக்குமோவென்று தேடலானேன். தி. த. கனகசுந்தரம் பிள்ளை என்னிடம் ஒரு பழைய ஏட்டுச் சுவடியைக் கொடுத்து, "இந்தச் சுவடி இன்னதென்று விளங்க வில்லை; புறப்பொருள் பற்றிய வெண்பாவை இடையிலே கண்டேன்; பாருங்கள்" என்று சொன்னார். நான் அதை எடுத்து வந்து பார்க்கையில் ஏடுகள் வரிசையாக இராமல் நிலை மாறிக் கோக்கப்பட்டிருந்தன. மிகவும் சிரமப்பட்டு ஒழுங்கு படுத்திப் பிரதி செய்வித்தேன். அப்பால் அதைப் படித்துப் பார்க்கையில் தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் உரை யென்று தெரிந்தது. புறத்திணையின் உரையில் புறப்பொருள் வெண்பாமாலைச் செய்யுட்கள் பல உதாரணமாகக் காட்டப் பெற்றிருந்தன. பதிப்பிக்கப்பட்டிருந்த பொருளதிகார உரையை வைத்து ஒப்பு நோக்கியபோது அவ்வுரை வேறாகக் காணப் பட்டது. 'ஏதோ வேறு பழைய உரையாக இருக்க வேண்டும்' என்று தோன்றியதே தவிர இன்னாருடையதென்பது விளங்க வில்லை. மற்றும் ஒருமுறை படித்துப் பார்த்தேன்.

புறப் பொருள் சம்பந்தமாக உள்ள எல்லா நூல்களையும் படித்து ஆராயத் தொடங்கி இலக்கண விளக்கத்தைப் படித்தேன். அதில் மாலை நிலை என்னும் துறையைப் பற்றிச் சொல்லுகையில் உரையில் உரையாசிரியர் இன்னவாறு எழுதினாரென்ற குறிப்பு இருந்தது. அக்குறிப்பிலிருந்து என்னிடமிருந்த தொல்காப்பிய உரை, உரையாசிரியரென்று வழங்கும் இளம்பூரணருடையதென்று தெரிய வந்தது. அப்போது நான் மிக்க ஆனந்தத்தை அடைந்தேன். புறப் பொருளிலக்கண ஆராய்ச்சியில் நான் எதிர்பாராமற் பெற்ற பெரிய லாபம் இது. மீண்டும் அவ்வுரையை நன்கு ஆராய்ந்து அதில் வரும் மேற்கோள்களைக் கவனித்து இன்ன நூலென்று குறித்து வந்தேன்.

புறப் பொருள் வெண்பா மாலைப் பதிப்புக்கு வேண்டிய அங்கங்களைச் சித்தம் செய்து கொண்டு சென்னைக்குச் சென்று அதனை அச்சுக்குக் கொடுத்தேன்.'' (ஷை 742-743)

இவ்வாறு மிகுந்த சிரமமின்றிப் புறப் பொருள் வெண்பமாலையை அச்சிட்டு வெளியிட்டார் அய்யர்.

## உ. வே. சா. பதிப்புக்கு முன்பு வந்த பதிப்புக்கள்

உ. வே. சாவின் புறப் பொருள் வெண்பாமாலைப் பதிப்புக்கு முன் சரவணப் பெருமாளையர் வெளியிட்ட மூலம் மட்டுமுள்ள பதிப்பு இருந்தது பற்றி அவர் தமது என் சரித்திரத்தில் குறிப்பிடுகிறார் (மேலே காண்க).

தாண்டவராய முதலியார் சென்னையில் 1835-இல் வெளியீட்டுள்ள இலக்கணப் பஞ்சகங்களில் நன்னூல் மூலமும் அகப்பொருள் மூலமும் புறப் பொருட் கிலக்கியத்தோடு வெண்பாமாலை மூலமும்— என்ற நூலில் புறப்பொருள் வெண்பாமாலை மூலம் மட்டும் முதன் முதல் வெளியாகியுள்ளது. [John Murdoch's, Tamil Printed books ...Reprint 1968] திரு. மு. அருணாசலமும் தமது தமிழிலக்கிய வரலாறு-ஒன்பதாம் நூற்றாண்டில் (1975 பக் 282) தாண்டவராய முதலியார் அதைமுதலில் வெளயிட்டுள்ளதாக எழுதியுள்ளார். உ. வே. சா அவர்கள் சரவணப் பெருமாளையர் முதலில் வெளியிட்டுள்ளார் என எழுதியதற்கான ஆதாரம் கிடைக்கவில்லை.

மேலும் பஞ்சலட்சண மூலம் என்ற தலைப்பில் நன்னூல், அகப் பொருள் விளக்கம், புறப் பொருள் வெண்பாமாலை, யாப்பருங்கலக்காரிகை, தண்டியலங்காரம், நேமிநாதம், வீரசோழியம் ஆகிய நூல்கள் தொகுக்கப்பட்டு 1836-இல் இராமசுவாமிகள்

என்பவர், சென்னையிலிருந்த ஜீவரக்ஷாமிர்த அச்சுக் கூடம் வழி வெளியிட்டுள்ளார். இதில் மூலம் மட்டும் 156 பக்கங்களில் பாக்கெட் அளவில் (361 செய்யுட்கள்) வெளியிடப்பட்டுள்ளது (தமிழ் நூல் விவர அட்டவணை :எண் 1415).

## அய்யரவர்கள் பதிப்புக்கள்:

புறப் பொருள் தெண்பமாலை உரையுடன் கூடிய பதிப்பை முதலில் வெளியிட்டவர்கள் அய்யரவர்களே, அதன் பின் அது கடைசியாக ஒன்பது பதிப்புக்கள் வரை வெளியாகியுள்ளது. அதன் விவரம் வருமாறு:

1895—முதற்பதிப்பு
1908—வாகைப்படலம் பாடாண் படலம்-உ. வே. சா. உரை, குறிப்புக்களுடன். (சென்னைப் பல்கலைக்கழக 1908-ஆண்டு பி. ஏ. தேர்விற்கு) வெட்சிப் படலம் முதல் காஞ்சிப் படலம் முடியத் தனியாக இன்னொரு நூல் காலம் தெரியவில்லை.
1915—இரண்டாம் பதிப்பு
1924—மூன்றாம் பதிப்பு
1934—நான்காம் பதிப்பு-அய்யரவர்கள் காலத்தில் வந்த இறுதிப் பதிப்பு
1942—ஐந்தாம் பதிப்பு
1946—ஆறாம் பதிப்பு
1950—ஏழாம் பதிப்பு
1953—எட்டாம் பதிப்பு
1963—ஒன்பதாம் பதிப்பு

இதில் முதல் நான்கு பதிப்புக்கள் அய்யரவர்கள் மேற்பார்வையில் அவர் முகவுரை முதலியவற்றுடன் வெளியாகியுள்ளன. இனி, ஒவ்வொரு பதிப்பாக அவற்றின் அமைப்பு; அடைந்த செப்பம் முதலியவற்றை நோக்குவோம்:

## முதற்பதிப்பு

புறப் பொருள் வெண்பா மாலை முதற் பதிப்பு 1895-ஆம் ஆண்டு சென்னையிலிருந்த வெ. நா. ஜூபிலி அச்சுக் கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது. மூலமும் உரையும் உள்ள இந்நூலில் 6+13+155+23 பக்கங்கள் உள்ளன. விலை 1-8-0.

### நூலமைப்பு

நூலின் முதற் பக்கம் உ கணபதி துணை; சேரர் பரம்பரையினராகிய ஐயனாரிதனார் அருளிச் செய்த புறப் பொருள் வெண்பா

மாலை மூலமும் உரையும். —இவை பாலநத்தம் ஜமீந்தாரவர்களாகிய இராமநாதபுரம் ம-ா-ா-ஸ்ரீ பாண்டித் துரை தேவரவர்கள் விருப்பத்தின்படி கும்பகோணம் கவர்ன்மெண்ட் காலெஜ் தமிழ்ப் பண்டிதராகிய உத்தமதானபுரம் வே சாமிநாதையரால் பல பிரதி ரூபங்களைக் கொண்டு பரிசோதித்து சென்னை-வெ. நா. ஜூபிலி அச்சுக் கூடத்தில் பதிப்பிக்கப்பட்டன. விலை ரூபாய் க?. Copyright Registered இதில் ஆண்டு குறிப்பிடப்படவில்லை.

**இப்புத்தகத்திலடங்கியவை:**

க. முகவுரை
உ. அரும்பதவகராதி
ங, இக்காலத்து அருகி வழங்குஞ் சொற்கள்
ச இலக்கணக் குறிப்பு
ரு. புறப் பொருள் வெண்பாமாலை சூசீபத்திரம்

**சா. புறப் பொருள் வெண்பாமாலை மூலமும் உரையும்**

எ. சூத்திர முதற்குறிப் பகராதி
அ. துறையகராதி
கூ. கொளுவின் முதற்குறிப்பகராதி
க0. வெண்பாவின் முதற்குறிப்பகராதி
கக. விஷய சூசிகை
கஉ. இடம் விளங்கிய மேற் கோள்கள்
கங. இடம் விளங்கா மேற் கோள்கள்
கச. பிழையும் திருத்தமும்

இதில் பக்கம் குறிப்பிடப்படவில்லை.

**உதவிய பிரதிகள்**

முதற் பதிப்புக்கு உதவிய பிரதிகளை 'இந்நூற் பரிசோதனைக்குக் கிடைத்த கையெழுத்துப் பிரதிகள்' என்ற தலைப்பில் முகவுரையின் இறுதியில் கீழ்க்கண்ட ஏழு பிரதிகளைக் கொடுத்துள்ளார் அய்யர் (புறப் பொருள் வெண்பா மாலை முதற் பதிப்பு, 1895, பக். சா)

| | | |
|---|---|---|
| திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்துப்பிரதி | — | க |
| மேற்படி ஆதீனத்து மகாவித்துவான் ம-ா-ா-ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் பிரதி | — | க |
| திருக்குற்றாலத்தைச் சேர்ந்த மேலகரம் திரிகூடராசப்ப கவிராயரவர்கள் பிரதி | — | க |

| | | |
|---|---|---|
| திருநெல்வேலி திருவம்பலத்தின்னமுதம் பிள்ளையவர்கள் பிரதி | — | க |
| ஆழ்வார் திருநகரி தேவர் பிரான் கவி ராயரவர்கள் பிரதி | — | க |
| திரிசிரபுரம் அண்ணாசாமிப் பிள்ளையவர்கள் பிரதி | — | க |
| திருக்கோணமலை, த. கனக சுந்தரம் பிள்ளை யவர்கள் பிரதி | — | க |
| ஆகப்பிரதி | | எ |

மேலே கையெழுத்துப் பிரதி என்று குறிப்பிடுவது ஏட்டுச் சுவடியி லுள்ள கையெழுத்துப் பிரதிகள் என்றே தோன்றுகிறது. ஏனென் றால் என் சரிதையில் (பக். 742) த. கனக் சுந்தரம் பிள்ளைய வர்கள் பிரதியை ஏட்டுச் சுவடி என்றே அய்யர் குறிப்பிடுகிறார். இவற்றுள் ஒரு சில, காகிதக் கையெழுத்துப் பிரதிகளாகவும் இருந் திருக்கலாம். புறப் பொருள் வெண்பா மாலை அய்யரவர்கள் அச்சிடு முன்பே அச்சுப் பிரதியாக வந்து விட்டதால் அதிலிருந்து வேறுபடுத்தக் கையெழுத்துப் பிரதி என்ற தொடரை வழங்கியி ருக்கலாம். இதிலிருந்து இன்னொரு யூகமும் செய்யலாம். அய்யரவர்கள் அச்சுப் பிரதியைத் தன் பதிப்புக்குப் பாடவேறு பாடு,மூல பாடம் காணல் முதலியவற்றுக்குப் பயன்படுத்தவில்லை என்று தோன்றுகிறது. தமது என் சரித்திரத்தில் புறப் பொருள் வெண்பாமாலையை முதலில் அச்சிட்டவர் சரவணப் பெரு மாளையர் என்று கூறியிருப்பினும், இப்பதிப்பு முன்னுரையில் அதைக் குறிக்கவில்லை. தமக்கு முன் வந்த பதிப்புக்களைக் கூறும் வழக்கம் உ. வே. சாவுக்கு இல்லை என்று அதை அவர் பாலுள்ள குறையாகக் கூறுபவர்களும் உண்டு. (ச. வையாபுரிப் பிள்ளை (தமிழ்ச்சுடர் மணிகள் 1968 நான்காம் பதிப்பு பக். 296)

## பதிப்பு முறை

முதற்பதிப்பில் தான் பதிப்பித்த முறை பற்றித் தன் முகவுரை யில் கீழ்க்கண்டவாறு உரைப்பார் உ. வே. சா:

''உழிஞைப் படலத்தின் பின்னிற்றற்குரிய நொச்சிப் படலம் எல்லாப் பிரதிகளிலும் அதற்கு முன்பே காணப்பட்டமையால், அது அவ்வாறே பதிப்பிக்கப்பட்டது. உரையிலுள்ள சிலமொழி கள் யான் அறிந்த மட்டில் இக்காலத்து உலக வழக்கிலும் செய் யுள் வழக்கிலும் காணப் படாமையால் அதனைப் புலப்படுத்த-

வேண்டி அவற்றின் முதலிறுதிகளில் இவ்விரு ( ) தலைப் பகரங்கள் அமைக்கப்பட்டன. பின்னும் இந்நூலிலும் உரையிலும் விளங்காதவைகள் சிலவுள; அவை விளங்கிய பின் இவற்றைப் பதிப்பிக்க விருப்பமிருந்தும் கிடைத்த கையெழுத்துப் பிரதிகளை உடையவர்களிடம் விரைவிற் சேர்ப்பிக்க நேர்ந்தமையால், இன்னும் இயன்றவரையில் ஆராய்ந்து மற்றொரு சமயத்துப் பதிப்பிக்கலாமென்று எண்ணி ஒருவாறு பதிப்பித்தேன்''

—புறப் பொருள் வெண்பாமாலை (1895) முதற்பதிப்பு முன்னுரை பக். ச-ரு

## பாடபேதங்கள் முதலியன

முதற்பதிப்பில் 36 பாட பேதங்கள் அடிக்குறிப்பில் காட்டப்பட்டுள்ளன. அத்துடன் ஓரிரு மேற் கோள்கள், ஒப்புமைப் பகுதிகள், கருத்து விளக்கங்களும் இடம் பெறுகின்றன.

## முகவுரைச் செய்திகள்

நூலாசிரியர் பெயர், நூலின் இயல்பு, அகம் புறம் என்பவை பற்றிய விளக்கம்; புறப்பொருள் வெண்பா மாலைப் பெயர் விளக்கம், புறத்திணைகள் 12 பற்றிய சிறு விளக்கம், புறப் பொருள் வெண்பாமாலைச் செய்திகள் தொல்காப்பியப் புறத் திணையியல் நச்சினார்க்கினியர் உரையால் புலனாதல், உரையின் இயல்பு, உரையாசிரியர் பெயர் விளங்காமை, ஏடுகளிலுள்ள படல அமைப்பு, நூற்பதிப்பு முறை, அவையடக்கம், நூற்பதிப்புக்கு உடனிருந்தும், பொருள் தந்தும் உதவியோர், கடவுளுக்கு வணக்கம், நூலாராய்ச்சிக்குக் கிடைத்த பிரதிகளின் பட்டியல் ஆகியவை அமைக்கப்பட்டுள்ளன.

உரையாசிரியர் பெயர் விளங்காமை பற்றிக் கீழ்க்கண்டவாறு எழுதுவார் அய்யர்:

''இந்நூலுரையாசிரியர் இன்னாரென்பதும் அவர் கால முதலியனவும் ஒருவாற்றானும் விளங்கவில்லை. உற்று நோக்கின் இவ்வுரை மிகப் பழைய காலத்ததென்று மட்டும் தெரிகின்றது''
— முகவுரை. பக். ச

இப்பதிப்புக்கு உடனிருந்து உதவியவர்கள் சிவகங்கை ஸப் டிவிஷன் சிறுவயல் அரண்மனை வித்துவான் பிரஹ்மஸ்ரீ திரு. கிருஷ்ணையரவர்களும், கும்பகோணம் நேடிவ் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதராகிய மணலூர் ம-ா-ா- ஸ்ரீ இராமானுஜா

சாரியவர்களுமாவர். பொருளுதவி செய்தவர் பாலவநத்தா ஜமீன்தாரவர்களாகிய இராமநாதபுரம் ம-ா-ா-ஸ்ரீ பாண்டித் துரைத் தேவரவர்களாவர்.

## பிற பகுதிகள்: அகராதிகள் முதலியன

முகவுரையைத் தொடர்ந்து உதவிய பிரதிகள் பட்டியலும் அதை அடுத்து அரும்பதவகராதியும் அமைந்துள்ளன. (பக். க-கூ). இதில் அரிய சொற்களுக்கும் தொடர்களுக்கும் பொருள் எழுதப்பட்டு வருடமும் சுட்டப்பட்டுள்ளன. அடுத்து ஒரு பக்கத்தில் இக்காலத்து அருகி வழங்குஞ் சொற்கள் தொகுத்துப் பொருளுடனும், வருமிடத்துடனும் கொடுக்கப்பட்டுள்ளன. அதை அடுத்து இன்னொரு பக்கத்தில் உரையிற் கண்ட இலக்கணக் குறிப்பகராதி என்ற தலைப்பில் இலக்கணச் செய்திகளைத் தொகுத்து அகர வரிசையில் வருமிடத்துடன் கொடுத்துள்ளார் அய்யரவர்கள்.

சூசீபத்திரம் என்ற தலைப்பில் நூலமைப்புக் கீழ்க்கண்டவாறு கொடுக்கப்பட்டுள்ளது.

நூலின் இறுதியில் சூத்திர முதற் குறிப்பகராதி, துறையகராதி, கொளுவின் முதற் குறிப்பகராதி வெண்பாவின் முதற் குறிப்பகராதி விஷய சூசிகை, இடம் விளங்கிய மேற்கோள், இடம் விளங்கா மேற்கோள், பிழையும் திருத்தமும், பிரகடனபத்திரம் ஆகியன காணப்படுகின்றன.

விஷய சூசிகை (கசா-கசூ) என்பது பொருளடைவாகும். நூலினகத்து அச்சிடப்படாமல் பின் இடம் விளங்கிய மேற்கோள்களாக மூன்று மேற் கோள்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இடம் விளங்கா மேற்கோள்களாகப் பத்து உள்ளன. பிழை திருத்தம் இரண்டு பக்கம் உள்ளது. பிரகடனப் பத்திரத்தில் அய்யரவர்கள் வெளியிட்ட பத்து நூல்களின் விலை, கிடைக்குமிடம் முதலியன அறிவிக்கப் பட்டுள்ளன.

**நூலினளவு** : 16×24 செ.மீ (6.50''×9.50) துறைத் தலைப்பு, சூத்திரம், கொளு, வெண்பா, உரை முதலியன வெவ்வேறு அச்செழுத்தில் தெளிவாக அச்சடிக்கப்பட்டுள்ளன. நூலமைப்பு அழகாகவும் படிப்பதற்கு இனிமையாகவும் அமைந்துள்ளது.

## 1908-ஆம் ஆண்டு பி. ஏ. தேர்வுப் பதிப்பு:

(வாகைப் படலமும், பாடாண் படலமும்) சென்னைப் பல்கலைக்கழக 1908-ஆம் ஆண்டு பி. ஏ. தேர்வுக்காகப் புறப்பொருள் வெண்பாமாலையிலுள்ள வாகைப் படலம் பாடாண் படலம் என்ற இரண்டு படலங்களை-பதவுரை, குறிப்புரையுடன் உ. வே. சா. வெளியிட்டுள்ளார்கள். இதனை முதற் பதிப்புக்குப் பின் வந்த முழுமையடையாத இரண்டாம் பதிப்பு என்று அமைக்கலாம்.

### நூலமைப்பு

நூலின் முகப்புப் பக்கம் ஆங்கிலத்தில் அமைந்துள்ளது. University of Madras. B. A. Examination of 1908. Purapporul Venbamalai (Vahaippadalam and Padanpadalam) with Commentary, edited with Explanatory Notes by V. Swaminatha Aiyar, Tamil Pandit, Presidency College, Madras, Price 6 Annas, Madras. Printed at the Presidency Press, 1908. மொத்தப் பக்கம் 54. முகவுரையைத் தொடர்ந்து இரண்டு படலங்கள் அச்சிடப்பட்டுள்ளன. வேறு அகராதிகள் முதலியன இதில் இல்லை.

### முகவுரை

ஆசிரியர் பெயர், நூற்பொருள், நூலாராய்ச்சி, தொல்காப்பியத்துடன் ஒப்புமை, பன்னிரண்டு திணைகள் பற்றிய சிறு

நூல்நுவல் செய்திகள் பற்றிய சில குறிப்புகள், உரை, பதிப்பு முறை முதலியனவற்றை முகவுரையில் விளக்கியுள்ளார். முகவுரையிலுள்ள அடிக்குறிப்பில் ஐயனாரிதனாரென்பது சாஸ்தாவுடைய திருநாமம்; ஐயனார்; இந்நூலுரையாசிரியர், சாமுண்டி தேவநாயகன் என்னும் பேருடையானென்பர், செந்தமிழ் தொகுதி-க; பகுதி-க. சரு-ஆம் பக்கம் பார்க்க என்ற இரண்டு செய்திகள் காணப்படுகின்றன.

## நூலமைப்பு முறை

இப்பதிப்பில் தாம் மேற்கொண்ட பதிப்புமுறை, உரை எழுதிய முறை முதலியவை குறித்து உ. வே. சா. கீழ்க்கண்ட வாறு கூறுவார.

''எட்டாவதும் ஒன்பதாவதுமாகிய இப்படலங்களில் இடக்கர்ச் சொல் வந்துள்ள பாடல்கள் பதிப்பிக்கப்படவில்லை.

இப்போது கிடைத்த கையெழுத்துப் பிரதிகள் சிலவற்றிற் பாடபேதங்களும் உரை வேறுபாடுகளும் சிற்சில காணப்பட்டன; அவற்றை உபயோகித்தும் மாணாக்கர்களுக்குக் கருத்து நன்கு புலப்படும்படிக் கொளுக்களுக்கும் செய்யுட்களுக்கும் பழைய வுரையைத் தழுவியே அந்வயித்துப் பதவுரை யெழுதியும் அவ் வுரையில் திரிசொற்களிருந்தவிடத்தில் இயற் சொற்களை யமைத்தும் முக்கியமான இடங்களில் விஷயங்களை விளக்கியும் இப்புத்தகம் பதிப்பிக்கப் பெற்றது.

இந்தப்பகுதிகளை விளக்கி விரிவாகப் பொருளெழுத வேண்டு மென்று எண்ணியிருந்தும் அப்பொழுதப்பொழுது நேரும் பல வகையான வேலைகளால், அங்ஙனம் செய்யக் கூடவில்லை.'' முன்னுரை பக்.4

## பாடவேறுபாடுகள் முதலியன.

நான்கு பாடவேறுபாடுகள், ஓரிரு பொருள் விளக்கக் குறிப்புக்கள் முதலியன அடிக்குறிப்பாக அமைக்கப் பட்டுள்ளன.

## விடுபட்டவை:

இடக்கர்ச் சொல் வந்திருப்பதால் கீழ்க்கண்ட பாடல்கள், கொளுக்கள், வெண்பாக்கள், இப்பதிப்பில் பதிப்பிக்கவில்லை என்று அவ்வவ்விடங்களிலுள்ள அடிக்குறிப்புக்கள் கூறுகின்றன: (பிறைக் குறிக்குள் உள்ளவை இடக்கர்ச் சொற்கள்)

வாகைப் படலம், 15 [முயக்கு], 16[அடிக்கண்ணாள் தோள் நசை] 21 [முலை].

பாடாண் படலம்: 24 [வெள் வளையார் தோள் விழைந்து] 41 [முலை], 45 [வனமுலை], 46 [முயக்கு-வரையகலந்தோய்] 47 [விறலோன் மார்பம் புல்லேம்-மார்பு படிதல்] 49[ முக்கணான் முயக்கம்-ஆகம்புல்லி]

பெண்களுடைய உடலுறுப்புக்கள், கல்வி பற்றிய சொற்கள் முதலியவற்றை இடக்கராகக் கருதி, அவை மாணாக்கர் கற்பதற் காகா என விலக்கிய அக்கால மன நிலையை இச்செயல் காட்டு கிறது. இது பாடத்திட்டக் குழுவின் முடிவா அல்லது பதிப்பாசிரி யர் முடிவா என்று அறியக் கூடவில்லை.[1]

## உ. வே. சா. உரை அமைத்த நெறி

சங்ககால மொழி போன்ற பழங்கால மொழியில் செய்யுள் நடையில் எழுந்த இலக்கியம் முதலியவற்றைத் தற்கால மொழியில் உரைநடைப் பொழிப்புரையாகவோ, அல்லது வேறு மொழிகளில் மொழி பெயர்த்தோ அவற்றைப் புரிந்து கொள்ள முயற்சி செய்கிறோம். இது ஒரு மொழியின் இரண்டு காலகட்ட மொழிகளுக்கு இடையேயோ, இரண்டு வேறுபட்ட மொழி களுக்கு இடையேயோ நடக்கலாம். அதுவுமன்றி ஒரே மொழி யின் சமகாலத்தில் வழங்கும் இருவித மொழி வகைகளுக்கும் இடையிலும் இது நடக்கலாம். எ-டு. அறிவியல் மொழி

1. சில ஆண்டுகளுக்கு முன் வரையில் கூடக்கல்வி நிலையப் பாடநூல்களில் குல்தொடர் அன்மொழி போன்று வரும் இடக்கர்ப் பகுதிகளை விடுத்துப் புள்ளியிட்டு விடும் வழக்கம் இருந்து வந்தது. சி.வை. தாமோதரம் பிள்ளை கலித்தொகையில் பதினோரிடங்களில் வந்த அல்குல் என்ற சொல்லுக்குப் பதிலாக மகளிரின் பிறவுறுப்புக் களைச் சுட்டும் வேறு மொழிகளாக மாற்றியமைத் துள்ளார். கல்வி நிலையங்களில் மாணவர் பொருட் டாக இத்தகு இடங்களை மாற்றியமைக்க சி. வை. தாமோதரம் பிள்ளை முற்பட அதனைப் பின் பற்றிச் சௌரிப் பெருமாள் அரங்கனும் [தம் குறுந்தொகைப் பதிப்பில்] செய்வாராயினர். இது கண்டனத்திற்குள்ளா யிற்றாம். மு. சண்முகம் பிள்ளை 'பாடவேறு பாடுகளும் பதிப்பாசிரியர்களும்' 'தமிழ்க்கலை, தமிழ் 2, கலை 1, மார்ச்சு 1984, பக். 45—53. உ. வே. சாவும் இப்போக் கிலேயே செல்கிறார்.

சாதாரண வழக்கு மொழி, குழந்தை மொழி. இந்த மொழி மாற்றத்தின் தன்மை, கால, இட இடை வெளிகளைப் பொருத்தும், மொழி வகைகளின் சிறப்புத் தன்மைகளைப் பொருத்தும் அமையும். இதை ஒரு கருத்து வரைபடமாக விளக்கலாம்:




### கருத்துகள் மொழி மாற்றம் செய்யப்படும் நிலைகள்

மூல மொழியிலுள்ள கருத்தைப் பெறுபவர் தாம் புரிந்து கொண்டதைப் பொழிப்புரையாக்கி அல்லது மொழிபெயர்த்து வெளிப்படுத்துகிறார். புரிந்துகொள்ளலும், வெளிப்படுத்தலும் ஒரு செயலின் இரண்டு வேறு நிலைகள். இச்செயற்பாட்டில், கால, இட இடைவெளிகள், மொழி வகைகளின் சிறப்பியல்கள் முதலியவற்றால் விளையும் தடைகளைத் தகர்த்தாக வேண்டும். இதைச் செவ்வணம் அறிவியல் முறையில் செய்பவனே சிறந்த உரையாசிரியன் அல்லது மொழி பெயர்ப்பாசிரியன். உ. வே. சா ஒரு உரையாசிரியராக இப்பணியை எங்ஙனம் செய்துள்ளார் என்பதை அவருடைய இரண்டு படல உரையை வைத்து நோக்கலாம்.

தாம் உரை எழுதும் போது மேற் கொண்ட முறைகளை உ. வே. சா. விளக்கியிருப்பதிலிருந்து கீழ்க் கண்டவற்றை யூகிக்கலாம்:

1. பழைய உரையைத் தழுவிச் செய்யுள் தொடரைப் பொருட் பொருத்த முற ஒழுங்கு படுத்தல் [அந்வயித்தல்]

2. பொழிப்புரையைப் பதவுரையாக மாற்றுதல்

3. திரி சொற்கள் இருந்த இடத்தில் இயற் சொற்களை அமைத்தல்.

4. குறிப்புரை அமைத்து முக்கிய இடங்களில் பொருள் விளக்கம், ஒப்புமைப் பகுதிகள் மூலம் கருத்தை விளக்குதல்.

மேலே கண்ட முறையைப் பின் பற்றி அய்யரவர்கள் உரை வரைந்ததை ஓர் எடுத்துக் காட்டு கொண்டு விளக்கலாம்.

**வாகையரவம்**

வெண் கண்ணியுங் கருங் கழலுஞ்
செங் கச்சுந் தகை புனைந் தன்று

**சாமுண்டி தேவ நாயகர் உரை**

இ-ள். வெள்ளை மாலையினையும் வலிய வீரக் கழலினையும் சிவந்த கச்சினையும் அழகிதாக அணிந்தது. எ-று,

வெண் கண்ணி-கொத்தான் வாகை.

**உ. வே. சா. உரை**

இ-ள். வெண் கண்ணியும்- வெள்ளை மாலையினையும், கருங் கழலும்-வலிய வீரக் கழலினையும், செங்கச்சும்-சிவப்பாகிய கச்சினையும், தகை புனைந்தன்று-அழகிதாக அணிந்தது எ-று. வெண்கண்ணி-கொத்தான் வாகை

[கு—பு] வெண் கண்ணியென்பது முதலியன முரண் தொடை கொத்தான் வாகை-ஒரு வகை வாகை மரம். கச்சணிதல் வீரர்களுக்கு இயல்பு; ''கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்'' [திரு முருகு. 208] என்பதனாலுணர்க.

வ-று. அனைய வமரு ளயில் போழ் விழுப்பு
ணினைய விளிக்கவலை யில்லை புனைக
வழ லோ டிமைக்கு மணங்குடை வாண்மைந்தர்
கழலோடு பூங்கண்ணி கச்சு,

### சாமுண்டி தேவ நாயகர் உரை

இ-ள். அத்தன்மையமாகிய பூசலிலே வேல் பிளந்த சீரியபுண் இத்தன்மையவாயின, மேல் ஓர் துயரமில்லை; அணிக, நெருப் போடிலங்கும் பகைவர்க்கு வருத்தஞ் செய்தலை யுடைய வாண் மள்ளர், வீரக்கழலினையும் பொலிந்த மாலை யினையும் கச்சியினையும். எ-று.

### உ. வே. சா. உரை

இ-ள். அனைய அமருள்-அத்தன்மையவாகிய போரிலே, அயில் போழ் விழுப் புண்-வேல் பிளந்த சீரியபுண், இளைய, இத்தன்மையவாயின, இனி கவலை இல்லை மேல் ஒரு துயர மில்லை, அழலோடு இமைக்கும் அணங்கு உடைவாள்-நெருப் போடு விளங்கும் [பகைவர்க்கு] வருத்தஞ் செய்தலையுடைய வாளையுடைய, மைந்தர் - வலியவீரர், கழலோடு-வீரக் கழலுடனே, பூ கண்ணிகச்சு-அழகிய மாலையினையும் கச்சினை யும், புனைக-அணிக எ-று.

[கு-பு] 'அனையை அமர்' என்றது, முன்னே நடந்த தொரு போரை, 'விழிப்புண்-முகத்தினும் மார்பினும் பட்ட புண்' என்பர் பரிமேலழகர், [திருக்குறள், எஎசா] இம்மைந்தர் முன்பு விழுப்புண் பெற்றவராதலின், இனிக் கவலையில்லை, இனி இவர் கழல் முதலியவற்றைப் புனைவாராக வென்று ஒரு வீரன் கூறிய தாக இக்கவி இயற்றப்பெற்றது. கழற் கூறப்பட்டமையின், இது வாகையரவமானமை யறிக; அரவம்-முழக்கம்.

பொருளிலிருந்து பெரிதும் விலகாது உ. வே. சா. உரை வரைந்திருப்பது மேலே கண்ட எடுத்துக் காட்டால் புலனாகும். நூல் முழுமைக்கும் அவர் இத்தகைய உரை வரைந்திருந்தால் மாணாக்கர்க்குப் பெரும் பயன் விளைந்திருக்கும்.

## வெட்சிப் படல முதலிய நான்கு படலங்கள்: இன்னொரு தேர்வுப் பதிப்பு

புறப்பொருள் வெண்பா மாலை மூலமும் உரையும் என்ற தலைப்பில் வெட்சிப் படல முதலிய நான்கு படலங்கள் தனி நூலாக வெளிவந்துள்ளன. (பக். 4+68) அதில் வாகை, பாடாண் உள்ள பதிப்பிலிருந்த அதே முன்னுரை உள்ளது. அதில் "வெட்சிப் படல முதலிய நான்கு படலத்துள் 21, 73-ஆம் வெண் பாக்களிலும் 78-ஆம் பாட்டின் கொளுவிலும் அலையல் இளவிகள் வந்திருந்தலின் படிக்கும் மாணவர்கள் இதை நீக்கிப் படித்துக் கொள்க" என்ற வரிகள் காணப்படுகின்றன. அய்யர

வர்கள் அவையல் கிளவிகள் என்று குறிப்பிடுவது மென்முலை (21) முலை (73,78) ஆகியனவாகும்.

## இரண்டாம் பதிப்பு

புறப்பொருள் வெண்பா மாலை இரண்டாம் பதிப்புப் பல வகையில் சீர்த்திருத்தம் அடைந்துள்ளது.

அய்யரவர்களே முதற்பதிப்பின் கைப்பிரதி ஒன்றில் இரண்டாம் பதிப்பிற் செய்யவேண்டிய மாற்றங்களை ஆங்காங்கே குறித்து வைத்துள்ளார்கள். சாஸ்தாவின் பெயர் குராஞ்சேரியில் வழங்குவது பற்றி முகவுரையில் காணப்படும் குறிப்பு, தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் மேற்கோளாக வரும் இடங்கள், ஒப்பமைப் பகுதிகள் முதலியனவற்றை ஆங்காங்கே அய்யரவர்கள் தம்முடைய அழகான எழுத்தில் நீல் நிறத்திலும், சிவப்பு நிறத்திலும் எழுதி வைத்திருக்கிறார்கள். இதை இன்றும் உ. வே. சா. நூல் நிலையத்தில் காணலாம்.

அய்யரவர்கள் தம் இரண்டாம் பதிப்பில் செய்துள்ள மாற்றங்கள் எவை என்பதை அவரின் முகவுரையே உணர்த்தும்.

உ

கணபதிதுணை

''இந்நூலும் உரையும் 1895-ஆம் ஸூத்திற் பதிப்பிக்கப் பெற்றன. அதன் பின்புகிடைத்த கையெழுத்துப் பிரதிகளாலும், பல நூல்களின் ஆராய்ச்சி முதலியவற்றாலும் இவை அடைந்த திருத்தங்களும் இந்நூல் சம்பந்தமாக யான் அறிந்த விஷயங்களும் பல.

இப்பதிப்பில், அத்திருத்தங்கள் ஆங்காங்கு அமைக்கப் பெற்றும், முற்பதிப்பில் வேறு வேறாக இருந்த அரும்பத அகராதி முதலியவை ஒருங்கே தொகுக்கப் பெற்றும், முதற்பதிப்பிற் சேர்க்கப் பெறாதனவும் மூலம் உரை இரண்டிலும் உள்ளன, வாய்த்தமிழ் நூல்களின் ஆராய்ச்சிக்கு இன்றியமையாதனவுமாகிய பற்பல அரும் பதங்கள், பற்பல விஷயங்கள், இன்பம் விளைவிக்கும் அநேக தொடர் மொழிகள், பல உவமைகள் ஆகிய இவைகள் நூதனமாகச் சேர்க்கப் பெற்றும் உள்ளன. மேற்கூறிய அரும் பதங்களுட் பெரும்பாலனவற்றிற்குப் பொருள்கள் எழுதப் பெற்றிருக்கின்றன.

இந்நூலின் உரைக் கையெழுத்துப் பிரதிகளிலெல்லாம் இப்புத்தகத்தின் முதல் இரண்டு படலங்களின் இறுதிகளில்

திணைப்பாட்டு ஒன்றும் துறைப் பாடடுக்கள் இவ்வளவும் முடிந்தன வென்றிருப்பன போன்ற வாக்கியங்கள் மற்றப் படலங்களின் இறுதிகளிற் காணப்படவில்லை ஆனாலும், சூத்திர இறுதிகளிலுள்ள ஆதாரங்களைக் கொண்டு, வஞ்சிப் படல முதற் பாடாண் படல மிறுதியாகவுள்ள ஒவ்வொன்றன் முதலிலிருக்கும் வெண்பாவைத் திணைப்பாட்டென்றும்பின்னுள் ளவற்றைத் துறைப்பாட்டுக்களென்றும் கொள்ளுதல் முறை யென்று தோன்றுகிறது.

இந்நூலின் கூ-ஆம் படல முதலியவற்றின் முதற் சூத்திரங் களுக்கு ஒரு பிரதியிலும் உரைகள் காணப்படவில்லை [பக். 89, 111, 130, 139].*

இன்னும் இங்கே எழுதவேண்டிய சில குறிப்புக்கள், இதன் பின்னுள்ள முதற்பதிப்பின் முகவுரையில் உரிய இடங்களிற் கீழ்க் குறிப்புக்களாக அமைக்கப் பெற்றுள்ளன.

இப்பதிப்பிற்கு உடனிருந்து உதவி புரிந்தவர்கள், மயிலாப் பூர் பி. எஸ். ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் பிரஹ்மஸ்ரீ இ. வை. அநந்தராமையர்.

இந்நூல் சம்பந்தமாகத் தொகுக்கப் பெற்றிருக்கும் குறிப்புக் கள் பலவற்றை ஒழுங்கு படுத்தி இப்பதிப்பில் வெளியிட எண்ணி யிருந்தும் சில இடையூறுகளால் அவ்வெண்ணம் நிறைவேற வில்லை.

வெண்பா

''ஒன்றை நினைக்கி னதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளு மீசன் செயல்.''

சென்னை, இங்ஙனம்,
25-2-1915. வே. சாமிநாதையன்

புறப் பொருள் வெண்பாமாலை—இரண்டாம் பதிப்பின்(1915) முகவுரை.

இரண்டாம் பதிப்பிற்கு ஆதார மான பிரதிகள் பற்றிய விவரங்கள் தரப்படவில்லை. இதில் அமையும் பாடபேதங்கள் மொத்தம் 41 மட்டுமே ஆகும்.

---

*இவ்வுரைப்பகுதிகள் மூன்றாம் பதிப்பில் (1924) காணப்படு கின்றன. ஆதாரம் சுவர்ணம் பிள்ளையவர்கள் பிரதி....

## நூலமைப்பு

முதற்பக்கம்: உ. கணபதி துணை. சேரர் பரம்பரையின ராகிய ஐயனாரிதனார் அருளிச்செய்த புறப்பொருள் வெண்பா மாலை மூலமும் உரையும்-இவை சென்னை, ப்ரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப் பண்டிதராகிய உத்தமதானபுரம் வே. சாமிநாதையரால் பல பிரதி ரூபங்களைக்கொண்டு பரிசோதித்தது. சென்னை: வைஜயந்தி அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப் பெற்றன. இரண்டாம் பதிப்பு. ஆனந்த ஞு மாசி மீ 1915. விலை ரூபாய் 1—8—0. Copy right Registered.

## உள்ளுறை

இப்புத்தகத்திலடங்கியவை என்ற தலைப்பில் நூலுள்ளுறை கொடுக்கப் பட்டுள்ளது. அது வருமாறு:



பு.வெ.மா. இரண்டாம் பதிப்பு
பக். 2 (1915)

## முகவுரை

இரண்டாம் பதிப்பின் முகவுரையில் [மேலே காண்க] சேர்க்க வேண்டிய ஆறு குறிப்புக்களை, முதற்பதிப்பு முகவுரையை அமைத்து, அதன் கீழ் அமைத்துள்ளார் ஆசிரியர். இக்குறிப்புகளில் வெண்பாமாலை பற்றிய பெயர் வழக்கைக் குறிக்கும் மேற் கோள்களும், இதன் உரையாசிரியர் சாமுண்டி தேவநாயகரென்ற விவரம் ரா. ராகவையங்கரால் [செந்தமிழ், முதல் தொகுதி பக். 45] தெரிந்து கொண்ட செய்தி, மணலூர் இராமானுஜாசாரியர் இப்பொழுது கும்பகோணம் காலேஜில் தமிழ்ப் பண்டிதராக இருக்கிறார்கள் என்பன குறிப்பிடத்தக்கன.

இப்பதிப்பில் மேற் கொள்ளப்பட்ட சீர் திருத்தங்களில், குறிப்புக்கள் அடிக்குறிப்பாக அமைகின்றமை, அரும்பத அகராதி பொருளுடன் விரிவு பெற்றமை என்ற இரண்டும் குறிப்பிடத் தக்கன.

## அடிக்குறிப்புக்கள்

அடிக்குறிப்புக்களில் பாடபேதங்களும் [41], சில இடங்களில் அருஞ் சொல்லுக்குப் பொருளும் [5], சுருக்க விளக்கமும் [1]மேற் கோள் விளக்கமும் [5], ஒப்புமைப் பகுதிகளும்[6] காணப் படுகின்றன.

## பிற

சூத்திரங்களுக்கு வரிசை எண் இல்லை. சூத்திரங்களின் கீழ் அமையும் துறைகளுக்கு அவ்வத்திணைகளின் கீழ் வரிசை எண் பாடலுரையிறுதியில் காணப்படுகின்றன. இடம் விளங்கா மேற் கோள்களாகப் பத்தைக் குறிப்பிட்டுள்ளார். அரும்பத முதலியவற்றின் அகராதி பக். 177—215] முப்பத்தெட்டுப் பக்கங்களில் காணப்படுகிறது. இதில் அரிய சொற்களுக்குப் பொருள் எழுதியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## மூன்றாம் பதிப்பு

மூன்றாம் பதிப்பு அதற்கு முன்புள்ள பதிப்புக்களை விடப் பல வகையில் செப்பத்துடனும், கூடுதல் செய்திகளுடனும் காணப்படுகின்றது. இரண்டாம் பதிப்பு முகவுரையில் கொடுக்க முடியாமற் போனதாகச் சொன்ன [மேற் கோள், ஒப்புவமைப் பகுதிகள் முதலியன] பலவற்றையும் இதில் சேர்த்துள்ளார் அய்யர்.

## ஆதாரமான கூடுதல் பிரதிகளும் பிரதிபேதங்களும்:

மூன்றாம் பதிப்பு முகவுரையில் அய்யரவர்கள், "இப்பதிப்பின் பரிசோதனைக்கு ஆழ்வார் திருநகரி ஸ்ரீ தே. லக்ஷுமண கவிராயரவர்கள் வீட்டுப் பிரதியொன்றும், திருநெல்வேலி இந்து காலேஜ் தமிழ்ப் பண்டிதர் ம-ா-ா-ஸ்ரீ, சுவர்ணம் பிள்ளையவர் தந்த பிரதியொன்றும் மிக உதவியாக இருந்தன. இவற்றாலும், நூல்களின் ஆராய்ச்சி முதலியவற்றா லும் இந்நூல் மூலமும் உரையும் சில சில திருத்தங்களைப் பெற்றன; முன்பு உரையில்லாத பாகத்துக்கு வைஷ சுவர்ணம் பிள்ளையவர்கள் தந்த பிரதியிலிருந்து உரைகிடைத்தது.*

பிரதி பேதங்கள் அவ்வப்பக்கத்தின் கீழே காட்டப் பட்டுள்ளன." பு. வெ. மா. மூன்றாம் பதிப்பு [1924] முகவுரை பக். 9.

பாடபேதங்களை [பி-ம்] என்ற சுருக்கக் குறியீட்டுடன் அவ்வப் பக்கங்களில் தொடர் எண்ணிட்டு அடிக்குறிப்பாயமைத் துள்ளார். உ. வே. சா..

இப்பதிப்பில் அய்யரவர்கள் 149-பாடபேதங்கள் காட்டி யுள்ளார். இதிலிருந்து அய்யரவர்கள் பல பிரதிகளையும் ஒப்பிட்டு அரிதின் முயன்று இப்பாட பேதங்களைத் தொகுத் துள்ளார் என்பதை உணரலாம.

பாடபேதங்கள் ஒரே ஏட்டின் பலபடிகளிலும் காணப் படுவது ஒரு வகை. இன்னொரு வகை அவை பிற நூல்களில் மேற் கோளாய் அமையும் போது ஏற்படும் பாடபேதங்களாகும்.

---

*உரை கிடைத்த பகுதிகள் 9-ஆம் படலம் முதலியவற்றின் முதற் சூத்திரங்கள்; படலங்களின் இறுதியில் காணப்படும் பாடல் தொகை பற்றிய பகுதிகள் [3-ஆம் படலம் முதல்] ஆகியன. இதற்கு ஆதாரமான பிரதி ஒன்றை அளித்த சுவர்ணம் பிள்ளை, வ. உ. சி., ச. வையாபுரிப்பிள்ளை முதலியவர்களிடம் தாமே பழைய ஏடுகளைத் திருத்தியும், புதியவை தயாரித்தும் கொடுத்து ஏமாற்றியவராவார் என்ற செய்தி இங்கு நினைக்கத்தக்கது. (மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, 11-ஆம் நூற்றாண்டு [1971], பக். 395-403, ச. வையாபுரிப் பிள்ளை, தமிழ்ச்சுடர் மணிகள் [1968], பக். 379)

எவ்வகைப் பாட பேதங்களாயினும் அவை எவ்வச் சுவடி யிலுள்ளவை என்பதைச் சுருங்கிய முறையில் குறிக்க ஒரு முறையைக் கையாண்டிருக்கலாம். இம்முறையை அய்யரவர்கள் கையாளவில்லை. இவ்வாறு செய்திருந்தால் பாடபேதத்திற்கும் ஏட்டுக்கு முள்ள தொடர்பு, காரணம் முதலியவை தெளிவடைய வாய்ப்புண்டு.

பொதுவாகப் பல ஏட்டுச் சுவடிகளிலிருந்தும் நூலைப் பதிப்பிக்கும் போது அது ஒரு சுவடியின் மறுபதிப்பல்ல. பல சுவடிகளிலும் காணப்படும் பாடங்கள், வேறுபாடுகள் முதலியவை மூலபாட ஆய்வால் பதிப்பாசிரியர் தேர்ந்தெடுத்து நூலாகப் பதிப்பிக்கப் படுகிறது. நமக்குக் கிடைக்கிற பாடவேறு பாடுகளில் ஒன்று மூலபாடமாக இருக்கலாம்; அல்லது நமக்குக் கிடைக்காத ஒரு பாடம் கூட மூலபாடமாக இருக்கலாம். எனவே மூலபாட ஆய்வில் ஏற்றுக் கொண்ட பாடத்தைப் போலவே ஏற்றுக்கொள்ளாத பாடங்களுக்கும் ஒத்த மதிப்புண்டு.

அய்யரவர்கள் இங்குக்குறிப்பிடும் ஆழ்வார் திருநகரி ஸ்ரீ தே. லக்ஷ்மணக்கவிராயர் வீட்டுப்பிரதி என்பது 1888-இல் பெற்று கொண்டதாக என் சரித்திரத்தில் [பக். 647] கூறும் பிரதியா அல்லது வேறொன்றா என்பது தெரியவில்லை. இரண்டும் ஒன்றாயின் முதற்பதிப்புக்கு அதை ஏன் பயன்படுத்த வில்லை என்ற கேள்வி எழுகிறது. முதற்பதிப்புக்கு உதவிய ஆழ்வார் திருநகரி தேவர் பிரான் பிரதி என்பதுவும் இதுவும் வேறு வேறு என்பது ஆழ்வார் திருநகரிப் பிரதிகள் என்று மூன்றாம் பதிப்பு முகவுரையில் [பக். 10] அய்யர் குறிப்பிலிருந்து உணரலாம்.

## நூலமைப்பு

### முதற்பக்கம்:

இதில் ஆசிரியர் பெயர் உத்தமதானபுரம் மஹோமஹோ பாத்தியாய வே. சாமிநாதையர் என்பது மட்டும் காணப் படுகிறது. அய்யரவர்கள் 1919-இல் பிரசிடென்சி கல்லூரியி லிருந்து ஓய்வு பெற்று விட்டதால் முன் பதிப்பிலிருந்த அக்குறிப்பு இதில் இடம் பெறவில்லை. இது சென்னைக் கமர்ஷியல் அச்சுக் கூடத்தில் ரக்தாக்ஷி வருடம் வைகாசி மாதம் (1924) பதிப்பிக்கப் பட்டது-விலை 1-14-0. மொ. பக். 10+214.

### உள்ளுறை

இரண்டாம் பதிப்பில் காணப்படாத, எடுத்துக் காட்டிய நூல் கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி [சுருக்க விளக்கத்துடன்]

இதில் அமைக்கப்பட்டுள்ளது புதுமையாகும். கைக்கிளைப் படலம் ஆண்பாற் கூற்று, பெண்பாற் கூற்று என்றிரண்டாகவும், பெருந்திணைப் படலம் பெண்பாற் கூற்று, இருபாற் பெருந்திணை என இரண்டாகவும் பிரிக்கப்பட்டதோடு, வென்றிப் பெருந்திணை என்பதன் கீழிருந்த பகுதியை ஒழிபு என்ற தலைப்பின் கீழ்பதிப்பித்துள்ளார். அப்பகுதி, தமக்கு அப்போது கிடைத்த பிரதிகளில் வேறாகப் பிரித்து எழுதப் பட்டிருந்தமையின் அங்ஙனமே பதிப்பிக்கலாயிற்று என்று முன்னுரையில் எடுத்துக் காட்டியுள்ளார் அய்யர். [முன்னுரை பக். 8]. அடுத்ததாக இதுவரையிலில்லாத சூத்திர அகராதி பின்னிணைப்பில் முதலாவதாக அமைக்கப் பட்டுள்ளது குறிப் பிடத்தக்கது. முதல், இரண்டாம் பதிப்பு முகவுரைகளை நீக்கி விட்டு, மூன்றாம் பதிப்பிற்கு விரிவான முகவுரை எழுதிச் சேர்த் துள்ளார் உ. வே. சா.

## முகவுரை அமைப்பு, செய்திகள் முதலியன

அய்யரவர்கள் முகவுரையின் முகப்பில் 'திருச்சிற்றம்பலம்' என்று பெயரையும், "என்னையப்பா..." என்று தொடங்கும் திருவாசகம் நீத்தல் விண்ணப்பம் 16 ஆம் பாடலையும் கொடுத் துள்ளார். பிற்காலத்தில் அய்யரவர்கள் பதிப்பு முகவுரையின் ஒரு பண்பாக, தேவாரம், திருவாசகத்திலிருந்து ஒரு பாடலை முகப்புப் பாடலாக அமைப்பதை வழக்கமாகக் கொண் டிருந்தார்.

முதற்பதிப்பு முகவுரையில் இரண்டாம் பதிப்பில் அடிக்குறிப் பாகச் சேர்க்கப்பட்ட வண்ணமே பெரும்பாலும் மூன்றாம் பதிப்பு முகவுரை காணப்படுகிறது. இளம்பூரணர், இலக்கண விளக்கவுரையாசிரியர் முதலியோர் மேற்கோளாக் காட்டும் குறிப்புக்கள் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. திணைகளைப் பற்றிய செய்திகள் பன்னிருபடல நூற்பாக்கள் சில சேர்க்கப்பட்டுள்ளன. முன்பு குறித்தபடி ஒழிபு-என்பது தனியாக விளக்கப்பட்டு உள்ளது. உரையாசிரியர் சாமுண்டி தேவநாயகர் என்ற செய்தி முன்பு அடிக்குறிப்பாக இருந்தது. இங்கு முகவுரையினகத்து அமைக்கப்பட்டுள்ளது. இப்பதிப்புக்கு உதவிய பிரதிகள் இதில் செய்யப்பட்டத் திருத்தங்கள், லக்ஷ்மண கவிராயர் வீட்டுப் பிரதியின் முடிவில் 803-ஆம்வருடம் ஆவணி 11-ஆம்தேதி வெண்பா மாலை முடிந்தது என்று வரையப் பெற்ற செய்தி, ஆழ்வார் திருநகரிப் பிரதிகளில் 'தேனாறா'... எனத் தொடங்கும் அருண்மைச் செய்யுள் வரையப் பட்டுள்ளமை, இப்பதிப்பிற்கு உதவி யவர் சுந்தரபாண்டியம் சிரஞ்சீவி எஸ். கோதண்டராமையர்

என்பது; ஓரா தெழுதினேன் என்ற அவையடக்க வெண்பா முதலியன இம்முகவுரையிற் காணப்படும் செய்திகளாகும். நூலின் இறுதியில் (பக். 162) 877-ஆம் வருடம் மார்கழி மாதம் சதுர்த்தசியும் புதன்கிழமையும் உரோகிணியும் பெற்ற சுபதினத்திலே இரத்தின கவிராசர் வெண்பாமாலை உரை எழுதி முற்றும் என்று ஒரு ஏட்டுப் பிரதியிலிருந்த செய்தி அடிக்குறிப்பாக அமைந்துள்ளது.

திருத்தங்கள் சில பயன் கருதி, துறை, கொளு, வெண்பா இம்மூன்றையும் சேர்த்து முற்றும் தொடர்ச்சியாக எண்கள் இப் பதிப்பில் அமைக்கப் பெற்றுள்ளன.

## அடிக்குறிப்புக்கள்

முன்பே குறிப்பிட்டபடி மிகுதியான பாடபேதங்கள் (149) அடிக்குறிப்பில் காட்டப்பட்டுள்ளன. தவிர, இந்நூலில் வெண்பா முதலியவை மேற்கோளாக எடுத்தாளப்பட்ட 113 இடங்களும் நூற்றிற்கு மேற்பட்ட ஒப்புமைப் பகுதிகளும் அடிக்குறிப்பில் அமைக்கப்பட்டுள்ளன.

## பிற

இடம் விளங்கா மேற்கோள் முற்பதிப்பில் பத்தாக இருந்தது இதில் எட்டாகக் குறைந்துள்ளது. அரும்பத அகராதி முற் பதிப்பைப் போன்றே அமைந்துள்ளது. இறுதியில் ஆகப் பாட்டு 361 என்று தொகை கூறப்பட்டுள்ளது.

## நான்காம் பதிப்பு

புறப் பொருள் வெண்பா மாலையின் நான்காம் பதிப்பு 1934-இல் அய்யரவர்களால் அச்சிடப் பெற்றது. இதுவே அய்யரவர்கள் உயிருடனிருந்த காலத்து வந்த கடைசிப் பதிப்பு என்று தோன்றுகிறது. இப்பதிப்பில் முகவுரை விரிவு பெற்றதும், பொருளமைப்புப் பற்றி எழுதிச் சேர்க்கப் பெற்றதும் புதுமைகளாகும். முன்பில்லாத ஐந்து பாடபேதங்கள் இதில் சேர்ந்துள்ளன. மொத்தம் 153. வேறு ஏட்டுப் பிரதிகளை நோக்கியதாகத் தெரியவில்லை. அடிக்குறிப்புக்களிலும் பிற இடங்களிலும் காணப்பட்ட செய்திகள் முன்னுரையில் தக்க இடங்களில் அமைக்கப்பட்டுள்ளன.

## நூலமைப்பு

தலைப்புப் பக்கத்தில் சாமுண்டி தேவநாகரியற்றிய உரையும் என்பதும், ஐயரவர்களுக்குத் தாக்ஷிணாத்திய கலாநிதி, டாக்டர்

உ. முதலிய அடைகளும், 'நூதனமாக எழுதிய பல ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன்' கேசரி அச்சுக்கூடத்தில்... என்பதும் பிறவும் சேர்க்கப் பெற்றுள்ளன. பதிப்பாண்டு பவ வருடம் மார்கழி மாதம் (1934). விலை. 1-9-0.

உள்ளுறையிலும் புதிதாகச் சேர்க்கப் பெற்ற பொருளமைப்பு (பக். XII-XXVI) என்ற பகுதி காட்டப்பட்டுள்ளது. சூத்திர அகராதி, சூத்திர முதற்குறிப்பகராதி எனவும், வெண்பாவின் முதற்குறிப்பகராதி, வெண்பா முதலியவற்றின் முதற் குறிப்பக ராதி எனவும் திருத்தம் அடைந்துள்ளன. நூலில் தமிழ் எண் களில் கொடுக்கப்பட்டிருந்தவை, அராபிய எண்களாக மாற்றப் பட்டுள்ளன. இப்பதிப்பில் பாடபேதங்கள் காணப் படுகின்றன.

## முகவுரை

முகவுரையில் பாடலுக்குப் பின்னரும் திருச்சிற்றம்பலம் எழுதப்பட்டுள்ளது. முன்பே குறிப்பிட்டபடி இம்முகவுரையில் முன்பு ஆங்காங்கே இருந்த செய்திகள் ஒழுங்கு படுத்தப்பட்டுத் தக்க இடங்களில் அமைக்கப்பட்டுள்ளன. நூற்பெயர், அகம், புறம் பற்றிய செய்திகள், நூல் நுவல் பொருள், நூலாசிரியர் பற்றிய செய்திகள், இந்நூலை மேற்கோளாக ஆண்டவர்கள், புறத்திணை இயல்பு, புறத்திணைகள் பற்றிய சிறு சிறு விளக்கங் கள், உழிஞை நொச்சி நிற்கும் முறை, உரையின் இயல்பு, உரை யாசிரியர் பெயர், முன் பதிப்பு விவரங்கள், சில ஏட்டுச் செய்தி களில் காணப்பட்ட ஆண்டு, செய்யுள்...முதலியன, நூலமைப்பு முதலியன முகவுரையில் காணப்படுகின்றன.

## பிற்காலப் பதிப்புக்கள்

நான்காம் பதிப்பிற்குப் பின் ஒன்பதாம் பதிப்பு வரை வந்துள் ளவை நான்காம் பதிப்பை ஒட்டியவையே: பின் பதிப்புக்களில் ஐயரவர்கள் கைப் புத்தகத்திலிருந்து கிடைத்த சில புதிய குறிப் புக்களும் (ஏழாம் பதிப்பு 1950 எஸ். கலியாண சுந்தரையர் குறிப்பு), பின் அவ்வப்பொழுது கிடைத்த குறிப்புக்களும் உரிய இடங்களில் சேர்க்கப் பெற்றுள்ளன என்று கூறப்படுகிறது (ஒன்பதாம் பதிப்பு (1963). முகவுரைக் குறிப்பு சு. சுப்பிர மணியன் பக். XI) இவை அய்யரவர்களுக்குப் பின்பு வந்தவை யாதலால் இவை பற்றிய ஆராய்ச்சி இங்கில்லை. ஐந்து, ஆறு, ஏழு, எட்டாவது பதிப்புக்கள் அய்யரவர்கள் மகனாலும், ஒன்ப தாவது பேரனாலும் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

## அய்யரவர்கள் பதிப்பில் இடம் பெறத்தக்க செய்திகள்

அய்யரவர்கள் பதிப்புக்களுக்காக உரித்தான சில பண்புகள் புறப் பொருள் வெண்பாமாலைப் பதிப்பில் காணப் படவில்லை. மூல நூலாசிரியர் வரலாறு, கால ஆராய்ச்சி, உரையாசிரியர் வரலாறு, அவர் கால ஆராய்ச்சி, நூலாராய்ச்சி, உரையியல்பு பற்றிய கட்டுரைகள் இதனகத்து இடம் பெறத் தக்கனவாகும். டாக்டர் உ. வே. சா, "ஆதார நூல்களை ஒரு வகையாக வெளிப்படுத்தி விட்டால் ஆராய்ச்சியாளர் அவற்றை ஆராய்ந்து சரித்திரங்களையும் பிற குறிப்புக்களையும் வெளியிடலாம்" என்ற கருத்தினர் (பார்க்க:என் சரித்திரம். பக். 738). அதன் காரணமாகப் பல்வேறு விதமான ஆராய்ச்சித் துறையுள் கவனத்தைச் சிதறடிக்காமல் அடிப்படைப் பணியில் ஈடுபட்டவர் அய்யரவர்கள் என்பதை இங்கு நினைவு படுத்த வேண்டியுள்ளது. விளங்கா மேற்கோளகராதி அமைத்தது போன்று விளங்கும் மேற் கோளகராதி ஒன்றையும் சேர்த்திருக்கலாம்.

### நூலாசிரியர்

நூலாசிரியர் சேரர் மரபினர், சைவர் என்பதைச் சிறப்புப் பாயிரம் வழி அறிந்து கொள்வதைத் தவிர மேற்கொண்டு செய்திகள் ஒன்றும் உ. வே. சா. முகவுரையால் அறியக் கூடவில்லை. ஐயனாரிதனார் என்பது திருவிடைக் கழியைச் சார்ந்த குராஞ் சேரியிலுள்ள சாஸ்தாவின் பெயர். இப்படியே சாஸ்தாவின் பெயராக இது பலவிடத்தும் வழங்குகிறது, என்பது முகவுரையிலுள்ள அடிக்குறிப்பு. ஐயனாரிதனார் ஆரித கோத்திரத்தைச் சேர்ந்தவர் என்றெழுதினார் மு. இராகவையங்கார் (Some aspects of Kerala and Tamil Literature P. 46, 1973)

இலக்கிய வரலாற்றாசிரியர் மு. அருணாசலம் புறப் பொருள் வெண்பாமாலை பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்று ஓரிடத்தில் எழுதினார் (தமிழிலக்கிய வரலாறு-15 ஆம் நூற்றாண்டு (1969) பக். 120)- பின்னர் அது ஒன்பதாம் நூற்றாண்டு என்று சான்றுகள் கொண்டு அவரே நிறுவியுள்ளார் (தமிழ் இலக்கிய வரலாறு-9-ஆம் நூற்றாண்டு (1975) பக். 248-287). மேலும் ஆசிரியர் வாழ்ந்த இடம், சமயம் பற்றியும் மு. அருணாசலம் விரிவாக ஆராய்ந்துள்ள பகுதிகள் புறப்பொருள் வெண்பாமாலைப் பதிப்பில் இடம் பெறத்தக்கன.

### நூலாராய்ச்சி

புறப் பொருள் வெண்பாமாலை நூல் நுவல் பொருள், பன்னிருபடலத்திற்கும் இதற்குமுள்ள தொடர்பு,இதற்கும் தொல்

காப்பியத்திற்குமுள்ள ஒற்றுமை வேற்றுமைகள், நூலிற் கண்ட சிறப்புச் செய்திகள், உரை முதலியவற்றை மிகவும் விரிவாக மு. அருணாசலம் தமது ஒன்பதாம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றுள் விளக்கியிருக்கும் பகுதிகள், புறப் பொருள் வெண்பாமாலைப் பதிப்பில் இடம் பெற வேண்டியவைகளாகும்.

## உரையாசிரியர், உரையியல்பு

புறப்பொருள் வெண்பா மாலை உரையாசிரியர் சாமுண்டி தேவ நாயகர் என்பதை இரா. இராகவையங்கார் ஆராய்ச்சியால் (செந்தமிழ் முதற்றொகுதி பக். 45-46). அறிந்த விவரத்தைத் தம் முகவுரையில் குறித்து ஒரு பத்தி அளவில் சுருங்கத் தெளிவாய் எழுதிச் சென்றனர்.

சாமுண்டி தேவநாயகர் காலம், வரலாறு பற்றிச் சாசனம் வழி ஆராய்ந்த செய்திகளைப் பேராசிரியர் மு. இராகவையங்கார் விரிவாக எழுதியுள்ளார். (பார்க்க:சாசனத் தமிழ்க்கவி சரிதம் (1961-மூன்றாம் பதிப்பு). பக். 99-104).

உரையாசிரியருடைய சரியான பெயர் செயங்கொண்ட சோழ மண்டலத்து மாகறல் நாட்டு மாகறல் ஊரங்கிழார் சாமுண்டி தேவ நாயகர் என்றும், ஊரங்கிழார் என்பது குடிப் பெயர் என்றும் திருவேகம்ப முடையான் தெய்வநாயகன் என்ற வேறு பெயர்களும் அவருக்கு உண்டென்றும், இவர் சைவராயினும் திருமால் கோயிலில் சந்தி விளக்கெரிக்கத்தானம் செய்துள்ளார் என்றும், அவர்காலம் கி. பி. 13-ஆம் நூற்றாண்டினிடைப் பகுதி என்றும், அக்காலத்தே மாகறலூரில் தமிழ் வளம்பெற்றிருந்தது என்றும் ஊரங்கிழார் என்ற குடிப்பெயர் நாய்கர் என்ற வணிக மரபைச் சுட்டுவதாகலாம் என்றும் விளக்கமாக மு. இராகவையங்கார் சான்றுகளுடன் எழுதியிருப்பது [1958] இங்கு நினைக்கத்தக்கது. ஊரான் கிழார் என்பது தொண்டை மண்டல வேளாளரின் கோத்திரப் பெயர்களுள் ஒன்று என்று தெரிகிறது [அபிதான சிந்தாமணி. 1517]. அய்யரவர்களே இவ்வுரையாசிரியர் வேளாண்மரபினர் என்றெழுதுவது நினைக்கத்தக்கது.

மு. அருணாசலம் அவர்கள் புறப்பொருள் வெண்பாமாலை 13-ஆம் நூற்றாண்டென்று கொண்டதன் அடிப்படையில் இவ்வுரையாசிரியரைப் பதினைந்தாம் நூற்றாண்டென்று கொண்டார் [தமிழ்இலக்கியவரலாறு 15-ஆம் நூற்றாண்டு [1975] பக். 115-120]. ஆனால் அவரே பின் புறப்பொருள் வெண்பா

மாலையின் காலம் ஒன்பதென்று பின்பு கண்டதால், உரையாசிரியர் காலம் பற்றிய அவர் கருத்து முன்னுக்குப்பின் முரணாகிவிடுகிறது. மு. இராகவையங்கார் சான்றுகளுடன் நிறுவியுள்ள கருத்தை மு. அருணாசலம் அவர்கள் பார்க்கவில்லை என்று தோன்றுகிறது. உரையியல்பு பற்றிய மு. அருணாசலம் கருத்துக்கள் நோக்கத்தக்கன [தமிழ் இலக்கிய வரலாறு 15-ஆம் நூற்றாண்டு [1969]. பக். 115-120; 9-ஆம் நூற்றாண்டு [1975] பக். 279-280).

## உ. வே. சா. பதிப்பிற்குப் பின்

உ. வே. சா. பதிப்புக்கள் வெளிவந்தபின் புறப் பொருள் ஆராய்ச்சியில் பலர் ஈடுபடத் தொடங்கினர். உ. வே. சா மாணவராகிய ந.சிவப்பிரகாசக்குருக்கள் புறப்பொருள் வெண்பா மாலை மூலம் மட்டும் பஞ்சலட்ணசமூலம் [1927] என்ற நூலில் வெளியிட்டுளளார். மணி. திருநாவுக்கரசு முதலியார் அக்ஷய வருடத்தில் புறப் பொருள் வெண்பாமாலை, மூலம் மட்டும் வெளியிட்டுள்ளார். டி. என். அப்பனையங்கார் என்பவர் ‘வெண்பாமாலையாராய்ச்சி’ என்ற தலைப்பில் செந்தமிழில் [28, 10[1929] : 413—420; 28, 11 : 449—456; 28, 12 : 497—504, 29, 1 [1930] : 21-24; 29, 2 : 49-56; 29, 4 : 127-134; 29, 7, 231-242] புறப் பொருள் வெண்பாமாலை, தொல்காப்பியத்திலிருந்து வேறுபடுமாற்றை ஆராய்கிறார்.சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் பொ. வே. சோமசுந்தரனாரைக் கொண்டு புதிய உரை ஒன்றை எழுதி வெளியிட்டனர் [முதற்பதிப்பு 1955, பின் பதிப்புக்கள் 1960, 1964, 1967, 1969]புறப் பொருள் வெண்பா மாலைக்குப் புலியூர்க் கேசிகன் தெளிவுரையும் [முதற்பதிப்பு 1963, இரண்டாம் பதிப்பு 1970] மூன்றாம் பதிப்பு 1981] வெளி வந்துள்ளது. அண்ணமலைப் பல்கலைக்கழகம் புறப்பொருள் வெண்பாமாலையை [1985] சுப. இராமநாதனைக் கொண்டு பதிப்பித்து வெளியிட்டுள்ளது. ஸ்ரீ. சி. கந்தையா பிள்ளை புறப் பொருள் விளக்கம் என்று உரைநடையில் பொருளை விளக்கி நூலை வெளியிட்டுள்ளார். [ஒற்றுமை ஆபீஸ் சென்னை, 1936 பக். VIII + 104].

இலங்கையைச் சேர்ந்த புலவர் நா. சிவபாத சுந்தரம் புறப் பொருள் வெண்பாமாலையாராய்ச்சி என்ற நூல் எழுதியுள்ளார் [வெளியீடு : வட்டுக் கோட்டைத் தொகுதித் தமிழ்ச் சங்கம், இலங்கை, 1972, பக். 30+484]. இதில் புறப்பொருள் வெண்பா மாலையைச் சமூகவியல், அரசியல், பொருளியல், புவியியல், சமயவியல் அடிப்படையில் ஆராய்வதாக ஆசிரியர் கூறுகிறார். தொல்காப்பியம் மற்றும் புறப்பாடல்களின் பின்னணியில்

இந்நூற்கருத்துக்கள் விளக்கிக் கூறப்படுகின்றன. ஆராய்ச்சி யுடன் புனைவு நெறி இதில் தலைதூக்கி நிற்கிறது எனலாம். போப்பையர் புறப்பொருள் வெண்பாமாலைப் பகுதிகள் சிலவற்றை மொழி பெயர்த்துள்ளார்.

கலாநிதி க. கைலாசபதி [Tamil Heroic poetry, London, Oxford, 1968], டாக்டர் சுந்தரமூர்த்தி [Early Literary Theories in Tamil, சர்வோதய இலக்கியப்பண்ணை, மதுரை, 1974], டாக்டர் நா. ஜெயராமன் [சங்க இலக்கியத்தில் பாடாண்திணை, மதுரை, 1975], தமிழண்ணல் [சங்க இலக்கிய ஒப்பீடு, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1974] முதலியவர்கள் தம் நூலகத்துப் புறப்பொருள் உள்ளிட்ட கருத்துக்களை ஆராய்கின்றனர்.

சுந்தர மகாலிங்கனார் எழுதிய புறத்திணை விருந்து [சேகர் பதிப்பகம், சென்னை, 1977] என்ற நூலிலும், இராம கிருஷ்ணனின் புறத்திணைவளர்ச்சி [சங்ககாலம் முதல் கி. பி. 12-ஆம் நூற்றாண்டு வரை, [அச்சிடப் படாத அறிஞர் பட்ட ஆய்வேடு, மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம், 1976] என்ற ஆய்வேட்டிலும் தொல்காப்பியப் புறத்திணைச் செய்திகளும், புறப்பொருள் வெண்பாமாலைச் செய்திகளும் ஒப்பிட்டு ஆராயப் படுகின்றன. செல்வி. இந்திரா மனுவல் தனது தமிழில்-தொல் காப்பியத்தில் இலக்கியக் கொள்கை (அச்சிடப்படாத அறிஞர் பட்ட ஆய்வேடு, கேரளப் பல்கலைக்கழகம்; [1984] என்ற ஆய்வேட்டில் புறப்பொருள் பற்றி வரலாற்று முறையில் நன்கு ஆராய்ந் துள்ளார் [பக். 31-32; 826-851]. இவை எல்லாம் உ. வே. சா. பதிப்புக்களால் ஏற்பட்ட பயன்களாகும்.

## இனிச் செய்யத்தக்கன

உ. வே. சா. அவர்கள் தமக்குக்கிடைத்த ஒன்பது பிரதிகளைக் கொண்டு சுமார் 153 பாடவேறுபாடுகளைத் தொகுத்து மூலபாட ஆய்வுசெய்து புறப்பொருள் வெண்பா மாலையை வெளியிட்டுள்ளார். அய்யரவர்கள் நோக்கியனவும் நோக்காதனவுமாகிய எல்லாப் படிகளையும் மீண்டும் ஒப்பு நோக்கி முறையாக மூலபாட ஆய்வுசெய்து ஒரு செம்பதிப்பு வெளியிடலாம். அதில் மூலம், உரை இரண்டிற்கும் தனித்தனியே சொல்லடைவும் சொற் பொருளும், பொருளடைவும் முழுமை யாகத் தொகுத்தமைக்கலாம்; ஒப்புமைப் பகுதிகளைத் தொகுத் துக் கொடுக்கலாம்.

# 5. நன்னூல்-மயிலைநாதர் உரைப் பதிப்பு

பவணந்தி முனிவர் இயற்றிய நன்னூலுக்கு [கி. பி. 13] ஏறத்தாழ நாற்பத்து நான்கு உரைகள் எழுந்துள்ளன (க. ப. அறவாணன், எழுநூறு ஆண்டுகளில் நன்னூல் [1977 பக். 89] அவற்றில் இன்றுகிடைக்கும் உரைகளில் காலத்தால் முற்பட்டது· மயிலைநாதர் உரையே [கி. பி, 14]. இவ்வுரையே நன்னூலுக்கு முதன் முதல் எழுந்த உரை என்று கொள்ளப்படுகிறது· நன்னூலுக்குச் சங்கர நமச்சிவாயர் உரை எழுந்தபின்னர் மயிலை நாதர் உரைப் பயிற்சிக்குன்றிவிட்டது என்று தோன்றுகிறது.

இதற்கு மயிலைநாதர் உரைக்கெழுந்த மறுப்புக்களும் திறனாய்வுகளும் காரணமாக இருந்திருக்கலாம். 'விதிகளில் சில சில வெளிப்படாவாயின் உபலக்கணத்தினை ஓர்ந்தே உணர்க' [இலக்கணக்கொத்து : 8 :3-4 உரை] என்ற பகுதியில் உபலக்கணம் உணராது மயிலைநாதர் 'அஇஉம் முதற்றனிவரிற் சுட்டே; [நன்னூல் : 65] என்பதற்குப் பொருள் எழுதி விட்டார் என்றும்· 'சேற்று நிலத்தில் கவிழ்ந்த பால் தேன் நெய் முதலியனவும் சேறானற்போல நன்னூல் சூத்திரமும் அவ்வுரையுடனே கலந்து குற்றப்பட்டது என்க' எனவும் சுவாமிநாத தேசிகர் பெயர் குறிப்பிடாது மயிலை நாதரையும் அவர் உரையையும் கண்டிப் பார். இவ்வாறு மயிலைநாதர் உரையில் நிறைவு கொள்ளா மையினாலேயே சுவாமிநாத தேசிகர் தம் மாணாக்கராகிய சங்கர நமச்சி வாயரைக் கொண்டு புதியஉரை ஒன்றைச் செய்வித் தனர் என்பர்.

சுவாமி நாத தேசிகர் கண்டிப்பது மயிலை நாதர் உரையை அன்று; அது வேறொரு சமண உரை என்று வாதிப்பார் அறவாணன் [மேற் சுட்டியநூல் பக். 99-100]. அறவாணன் குறிப்பது போன்று சுவாமிநாத தேசிகர் எவ்விடத்தும் நன்னூ

லுக்குச் சமண உரை உண்டு என்று கூறவில்லை. நன்னூலுக்குச் சமண உரை உண்டு; அது சரியானதன்று என்பது கன்னபரம்பரைச் செய்தி என்று உ. வே. சா. தெளிவாக எழுதியுள்ளார் [நன்னூல் மயிலைநாதர் உரை முகவுரை பக். 11] எனவே சமண உரை என்பதால் மயிலைநாதரைச் சுவாமி நாததேசிகர் கண்டிக்க வில்லை என்பது தெளிவு.

அடுத்து சுவாமி நாததேசிகர் கண்டிப்பது மயிலை நாதர் உரையே என்பதற்கு ஆதாரம், சுவாமி நாத தேசிகர் கண்டிக்கும் உரைப்பகுதி மயிலைநாதர் உரையில் காணப்படுவதாகும். மயிலை நாதர் உரையால் சூத்திரப் பொருளைப் பிறழ உணர்ந்து நன்னூலுக்குப் பின்னூலாகிய இலக்கண விளக்கம் சூத்திரத்தை மாற்றியமைத்ததையும் பெயர் குறிப்பிடாது கண்டிக்கிறார் சுவாமி நாத தேசிகர். மேலும் சிவஞான முனிவர் கண்டனத்தை இலக்கண விளக்கச் சூறாவளியிலும் காணலாம்.

உ. வே. சா. 1918-இல் மயிலைநாதர் உரையை வெளியிடும் வரை நன்னூலை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த சாமுவேல் பிள்ளைக்கும், பவானந்தம் பிள்ளைக்கும் சமணர் உரை உண்டு என்பது மட்டும் தெரியும். அது கிடைக்கவில்லை என நினைத்தார் சாமுவேல் பிள்ளை, பவானந்தம் பிள்ளை, சுவாமிநாத தேசிகரின் கண்டனப் பகுதி இலக்கண விளக்க உரையை (மட்டும்) குறித்தாகக் கொண்டது, மயிலைநாதர் உரைப்பகுதியை அறியாததால் போலும் என்று தோன்றுகிறது. (நன்னூல் ச. பவானந்தம் பிள்ளை உரைப் பதிப்பு, மாக்மில்லன் அண்டு கம்பெனி, லிமிட்டெட், சென்னை, 1922. முன்னுரை பக். XVII)

பவானந்தம் பிள்ளை நன்னூலுக்கு மயிலைநாதர் சங்கர நமச்சிவாயர், இராமானுஜக் கவிராயர் முதலிய உரையாசிரியர்களைப்பின்பற்றி எழுதிய உரையின் முன்னுரையில் (1922) மயிலை நாதரைச் சமணர் என்றும் அவர் உரை ஆதி உரை என்றும் கூறி "இவர் (சங்கர நமச்சிவாயர்) மயிலைநாதர் உரையிற் பல பகுதிகளைப் பிறர் மத மாகக் கூறிக் கண்டிக்கிறார். ஆயினும் மயிலைநாதர் பெயரை எக்காரணத்தாலோ சிறிதும் வெளிக்காட்டாது போயினர்" (பக். XVI) என்று எழுதிச் செல்கிறார்,

சங்கர நமச்சிவாயர் பிற உரைகளை எழுபது இடங்களில் கண்டிப்பதில் ஏறத்தாழ இருபத்தைந்து இடங்களில் மயிலைநாதர் உரையை மனதுட் கொண்டு மறுப்பதாக உள்ளதாக அறவாணனே கூறுகிறார் (மேற் சுட்டிய நூல், பக். 348-349).

அவர், சங்கரநமச்சிவாயர் மயிலைநாதர் உரையை ஏற்றுப் போற்றுவதாகக் கூறும் (நன்னூல், சங்கரநமச்சிவாயர் உரை. 323) எடுத்துக் காட்டிலும் (மேற் சுட்டிய நூல் பக். 350), மயிலைநாதர் மேற் கோள் காட்டிய அகத்தியனார் நூற்பாவைக் காட்டினாரே ஒழிய வேறொன்றும் வெளிப்படக் குறித்தாரில்லை. எனவே தெளிவற்ற ஒரு எடுத்துக் காட்டை, "மயிலைநாதர் உரைக்கு எதிராக எழுதப்பட்டது சங்கர நமச்சிவாயர் உரை என்பார் எண்ணிப் பார்க்கத் தக்க இன்றியமையாக் குறிப்புக்களுள் இஃது ஒன்று" (ஷெ 350) என்று குறிப்பிடுவது மிகைப்படக் கூறலாம். அறவாணன் வேறு சமண உரை ஒன்றுண்டு என்று கூறி ஒரு ஏட்டுச் சுவடியைக் குறிப்பதைத் தவிர உறுதியான சான்று எதை யும் காட்டவில்லை. (ஷெ 99). மேலும் மயிலை நாதர் உரை சமண உரையன்று; மயிலை நாதர் சைவரே என்பனவற்றிற்கு அவர் காட்டும் காரணங்களும் பொருத்தமானவை அல்ல. அவை பற்றி இங்கு விரிவாக ஆராய்வது மற்றொன்று விரித்த லாக அமையுமாதலால் அது செய்ய முனையவில்லை,

இது எவ்வாறாயினும், இலக்கணக் கொத்துரையிற் கண்ட மயிலை நாதர் உரை குறித்த மறைமுகமான திறனாய்வுக் குறிப்பே அய்யரவர்களை மயிலைநாதர் உரைச் சுவடியைத் தேடிக் கண்டு பிடிக்கச் செய்தது என்பதை அய்யரவர்களே வெளிப்படையாகக் குறிப்பிடுகிறார்கள் (நன்னூல்-சங்கர நமச்சி வாயர் உரை, முதற்பதிப்பு, 1925, முன்னுரை, பக். 20). அய்யரவர் கட்கு முன்பே 1896-இல் மயிலை நாதர் உரையைப் பழைய உரை என்று குறிப்பிட்டு அதிலிருந்து சில பகுதிகளை அடிக்குறிப்பாகத் தேவையான இடங்களில் தம் நன்னூல் உரைப் பதிப்பில் தந்துள் ளார் சடகோபராமானுஜாச்சாரியர் (க. ப. அறவாணன், மேற் சுட்டிய நூல்-பக். 234).

## மயிலை நாதர்-உரைப்பதிப்பு

மறக்கப்பட்டு, மறைந்துகிடந்த நன்னூல் மயிலை நாதர் உரையை முதலில் பதிப்பித்தவர் அய்யரவர்களே என்பதை அவர் முகவுரையே உணர்த்தும்.

"......நன்னூலுக்கு முதலிற் செய்யப் பெற்றதும் இலக்கண விளக்கவுரை, மேற்கூறிய விருத்தியுரை முதலியவற்றிற்கு ஆதாரமாகவுள்ளதுமான இந்த மயிலை நாதருரை, சில நூற் றாண்டுகளாகப் படிப்பாரும், படிப்பிப்பாருமின்றிப் பெயர் வழக்கமு மற்றுக்கிடந்தமையாலும், சில சில பகுதிகள் பிற்காலத் தவர்களால் மறுக்கப்பட்டிருப்பினும் தமிழ் நாட்டின் பழைய

நிலைமையையும் அக்காலத்துப் புலவர்களுடைய கோட்பாடுகளை யும் இவை போன்ற அரிய பலவற்றையும் தெரிவித்தலாலும் இதனைப் பதிப்பிக்கத் துணிந்தேன்.'' **நன்னூல்—மயிலை நாதருரை**

[முகவுரை பக். 1]

## பதிப்பு வரலாறு

இந்நூற் பதிப்பு வரலாறு பற்றி அய்யரவர்கள் கூறுவன வாவன:

''இவ்வுரையைப் பெரும்பாலும் உபயோகித்துக் கொண் டோர் இதன் பெருமையைத் தெரியாவிடினும் இதன் கருத்துக் களை மறுக்குமிடங்களுள் ஒன்றிலேனும் இவ்வுரையாசிரியர் பெயரை எழுதியிருப்பின், நன்னூலுக்கு மயிலை நாதருரையென ஒன்றுண்டென்பதாவது தெரிந்திருக்கும்; ஆயினும், ''நன் னூலுக்குச் சைனருரையென்று ஒன்றுண்டு; அது பயனற்றது'' என்ற ஒரு செய்தி மட்டும் கன்ன பரம்பரையில் வழங்கி வந்தது; இவ்வுரை ஏட்டுப் பிரதிகளுள் மிகப் பழையவான சிலவற்றின் தலைப்பில், ''மயிலை நாதருரை'' என்பது காணப்பட்டது; அங்ஙனம் காணப்படாதிருப்பின், இக்காலத்தில் இஃது இன்னா ருடைய உரையென்று தெரிந்து கொள்ளுதற்கே இடமிராது.

சிவகங்கையைச் சார்ந்த மிதிலைப்பட்டியென்னும் ஊரில் இருந்த ஸ்ரீஅழகிய சிற்றம் பலக் கவிராயரவர்கள் வீட்டில் 1886-ஆம் வருஷத்தில் முதன் முறை இவ்வுரையைப் பெற்றுப் படித்துப் பார்த்தபொழுது, ''சனகை'' என்பதற்கு, ''சனநாதபுரம்'' [பக்கம், கஅ] என்று பொருளெழுதியிருந்ததையும், ''முன்னோர் மொழி பொருளே'' [பக். ச] என்பது தனிச் சூத்திரமாகக் காட்டப்படாமல் மேற்கோளாகக் காட்டப் பெற்றிருந்ததையும், 'தோன்றா தோற்றி' [பக். கரு] என்பது முதலிய இரண்டு சூத்திரங்களும் பனம்பாரமென்று தெரி வித்திருந்ததையும், யாப்பருங்கல விருத்தியுரை, காரிகையுரைகளில் விளங்காமற் கிடந்த ''ஒங்கெழின் முதலாக், குன்று கூதிர்'' [பக். கரு ரு-ச] என்பதை முதனினைப்பாகக் காட்டி அதிற் குறிப் பிட்ட செய்யுட்களை முறையாகப் பின்னர்த் தெரிவித்திருந் ததையும், ''எப்பொருளைச் சொலின்'' [பக் உசாஉ] என்னுஞ் சூத்திரவுரையில் மரபுப் பெயர்கள் பலவற்றை மிகச் செவ்வை யாக விளங்கச் செய்திருந்ததையும், ''விதந்த மொழியினம் வேறுஞ் செப்பும்'' [பக். உஎச] என்பது பரிமாணமென்றிருந் ததையும், ''அறிவருளாசை'' [பக். ருOச] என்பதில் அறிவு முதலிய ஒவ்வொன்றற்கும் மேற்கோள் காட்டி விளக்கியிருந்

தனதயும், இன்னும் இவை போன்ற பிறவற்றையுங் கண்டு வியப்புற்று, இதனை வாங்கி வந்து படித்துப் பார்க்கையில் இடையிடையே சில சில ஏடுகள் தவறியிருந்தமை எனக்குத் தெரிந்தது; பின்பு முற்றும் படித்துப் பார்க்கக் கருதிப் பிரதிகளைத் தேடுகையில் திருவாவடுதுறையாதீனம் முதலிய இடங்களிலிருந்து பழைய ஏட்டுப் பிரதிகள் பல கிடைத்தன. அவற்றால் முதற் பிரதியிலிருந்த குறைகளெல்லாம் ஒருவாறு தீர்ந்தன. ஷை முகவுரை பக். II-III.

## உதவிய பிரதிகள்

"இவ்வுரைப் பரிசோதனைக்குக் கருவியாக இருந்த பிரதிகள் 15; முற்றுமுள்ளவை 6; அபூர்த்தியானவை 9. அவை வருமாறு:-

| | | |
|---|---|---|
| திருவாவடுதுறை யாதீனத்துப் புத்தக சாலைப் | பிரதி | 3 |
| சென்னை இராசாங்கத்துக் கையெழுத்துப் புத்தக சாலை | ,, | 1 |
| மதுரைத் தமிழ்ச் சங்கத்து | ,, | 3 |
| மிதிலைப்பட்டி ஸ்ரீ அழகிய சிற்றம் பலக் கவிராயரவர்கள் | ,, | 1 |
| ஆழ்வார் திருநகரி ஸ்ரீ தே. லக்ஷ்மண கவிராயரவர்கள் | ,, | 1 |
| திருநெல்வேலி ம-া-ா-ஸ்ரீ கவிராஜ ஈசுவர மூர்த்தியா பிள்ளையவர்கள் | ,, | 1 |
| திருநெல்வேலி இந்து காலேஜ் தமிழ்ப் பண்டிதர் ம-ா-ா-ஸ்ரீ சொர்ணம் பிள்ளையவர்கள் * | ,, | 1 |
| சிதம்பரம் சைவப்பிரகாச வித்தியாசாலைத் தருமபரி பாலகர் ம-ா-ா-ஸ்ரீ பொன்னம்பலம் பிள்ளையவர்கள் | பிரதி | 1 |
| சென்னைச் சைவ வித்தியானுபாலனயந் திரசாலைத் தலைவர் ம-ா-ா-ஸ்ரீ சாமிநாத பண்டிதரவர்கள் | ,, | 1 |
| திரிசிரபுரம் நாஷனல் ஹைஸ்கூல் வித்துவான் ஸ்ரீமத் உ. வே. A. M. அப்பு சடகோபராமானுஜாசாரியரவர்கள் | ,, | 1 |

---

* இஃது ஆழ்வார் திருநகரி, ஸ்ரீ அரங்கநாத கவிராயரவர்களால் எழுதப் பெற்றது; இதனை ஸேது ஸம்ஸ்தான வித்துவான் ஸ்ரீமத். உ. வே. ரா. இராகவையங்காரவர்கள் வருவித்து உபகரித்தார்கள்.

காஞ்சிபுரம் ம-ா-ா-ஸ்ரீ ம. தெய்வசிகாமணி
முதலியாரவர்கள் ,, 1
—ஷை. முகவுரை பக். V-VI

## நூலமைப்பு

நன்னூல் மயிலை நாதர் உரை முதற்பதிப்பில் உ. வே. சா. அவர்கள் பதிப்பின் முத்திரைகளாக விளங்கக் கூடிய சுருக்க விளக்கம், நூலாராய்ச்சி, நூலாசிரியர், உரையாசிரியர் வரலாறு பலவகை அகராதிகள் முதலிய பல பண்புகளும் இடம் பெற்றுள்ளது அய்யரவர்கள் பதிப்புத் துறையில் பெற்ற அனுபவ முதிர்ச்சியைக் காட்டுகிறது. இப்பதிப்பை வெளியிடும் போது அய்யரவர்கள் வயது 63. இப்பதிப்பு அய்யரவர்களின் முப்பத்தைந்தாவது நூலாகும்.

இந்நூல் வெளியானதற்கு அடுத்த ஆண்டு அதாவது 1919இல் அய்யரவர்கள் அரசு வேலையிலிருந்து ஓய்வு பெற்றார்கள். அறுபது வயதில் அரசு ஓய்வு கொடுக்கு முன்னே பணி நிலையானதும் ஆய்விற்கும் பணிக்கும் தாமே ஓய்வு கொடுத்து விட்டு, தம் வயது ஒன்றின் துணை கொண்டே பதவி உயர்வும் தலைமைப் பொறுப்புகளும் பெற்று வாழத் தெரிந்து விட்ட இன்றைய தலைமுறையைப் பார்க்க அய்யரவர்கள் 'வாழத் தெரியாதவர்தான்'. ஆனால் அவர் வாழத் தெரியாமையால் தமிழ் வாழ்ந்தது-தமிழிலக்கியம், இலக்கணம், ஆராய்ச்சி எல்லாம் வாழ்ந்தன. இதற்காக அய்யரவர்களுக்குத் தமிழர்கள் ஆண்டாண்டு கடன்பட்டுக் கிடக்கிறார்கள். அய்யரவர்கள் வாழ்க்கை இன்றைய இளைய தமிழர்க்கும், இளைய பாரதத்துக்கும் பணி ஓய்வு பெற்ற முதியவர்களுக்கும் என்றென்றும் வழிகாட்டும் ஒளி விளக்காகத் திகழ்கிறது.

## முதற் பக்கம்

'பவணந்தி முனிவரியற்றிய நன்னூல் மூலமும் மயிலைநாதருரையும் இவை சென்னை பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப் பண்டிதராகிய உத்தமதானபுரம் வே. சாமிநாதையரால் பல பிரதிகளைக் கொண்டு பரிசோதித்து, நூதனமாக எழுதிய பலவகைக் குறிப்புக்களுடன், சென்னை. வைஜயந்தி அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப் பெற்றன. 1918 copy right Registered விலை 3-2-0 என்று முதற்பக்கம் காணப்படுகிறது. இரண்டாம் பக்கம்: Madras Title and preface printed at the commercial press and the Indexes printed at the presidency press.

நூல் டெமி ⅛ அளவில் அச்சிடப்பட்டுள்ளது. மொத்தப் பக்கம் XIV+312+52.

## உள்ளுறை

இப்புத்தகத்திலடங்கியவை என்ற தலைப்பில் நூலுள்ளுறை கீழ்க்கண்டவாறு கொடுக்கப்பட்டுள்ளது. நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற் குறிப்பகராதி



## சுருக்க விளக்கம்

இப்புத்தகத்துள்ள நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற் குறிப்பகராதியில் 60 நூல் முதலியவற்றின் சுருக்க விளக்கம் காணப்படுகிறது.

## முகவுரை

முகவுரையின் முகப்பில் ''ஆதியிற்றமிழ்நூல்...'' என்று தொடங்கும் பாடலும், அடுத்துச் ''சந்தனப் பொதிய...'' எனத் தொடங்கும் பாடலும் மேற்கோள் குறிக்குள்ளும், அதனடுத்து ''இமிழ்திரை வரைப்பின்...'' என்று தொடங்கும் பாடலும் அமைக்கப்பட்டுள்ளன. மேலே காட்டிய மூன்றாம் பாடல் சங்கர நமச்சிவாயர் உரைப்பதிலும் பலவேறுபாடுகளுடன் காணப் படுகின்றது. இது அய்யரவர்கள் இயற்றிய பாடல் என்று தோன்றுகிறது.

## முகவுரைச் செய்திகள்

மயிலைநாதர் உரையின் சிறப்பு அதன் பெயர் அறிந்த வரலாறு, ஏடு பார்த்த வரலாறு, ஏடு கொடுத்து உதவியோர்,

பதிப்பித்த முறையும் நூலுள்ளுறையும், பதிப்பிற்கு உடனிருந்தும் பொருள் கொடுத்தும் உதவியோர், உதவிய பிரதிகள், அவையடக்கம், கடவுள் வணக்கம் ஆகியவை முன்னுரையில் அடங்கியுள்ளன.

## பதிப்பித்த முறையும் நூலுள்ளுறையும்

பதிப்பித்த முறையையும் நூலுள்ளுறையையும் அய்யரவர்கள் சொற்களிலேயே பார்க்கலாம்.

> "மூலம், உரை, மேற்கோள் முதலியவற்றிற் காணப்பட்ட பிரதி பேதங்களை உரிய இடங்களில் அமைத்தும், மேற்கோள்களுள் விளங்கியவற்றைப் புலப்படுத்தியும், பத்துப்பாட்டு, சீவகசிந்தாமணி போன்ற உரைபெற்ற நூல்களிலிருந்து இவ்வுரையாசிரியர் எடுத்துக் காட்டிய மேற்கோள்களுட் சிலசில பகுதிகள் அவ்வுரைக் கருத்துக்கு வேறுபட்டிருந்தும் பண்டைக்காலத்து வழங்கிய பாடத்தைத் தெரிவித்தற் பொருட்டு உள்ளவாறே காட்டியும் பதிப்பிக்கலானேன்.

சில சூத்திரங்களின் பாடங்கள் இக்காலத்து வழங்குகிற பாடங்களுக்கு வேறாகத் தோற்றும்; அவை இவ்வுரைக்கு ஏற்பப் பழைய பிரதிகளிற் காணப்பட்டனவென்று கொள்க. அவற்றுட் சில மிகவும் நயமானவை.

உரையிற் சில வாக்கியங்களும் சில மேற்கோள்களும் சந்தேகத்திற்கு இடமாக இருந்தும் பிரதிகளின் சிதைவு வேறுபாடு முதலியவற்றால் உரையாசிரியருடைய கருத்து விளங்காதது பற்றி அவற்றைத் திருத்திப் பதிப்பித்தற்கு என் மனம் துணியவில்லை; ஆனாலும் நாளடைவில் அவற்றின் உண்மை விளங்கலாம்.

சில சொற்கள் பிரதிகளிற் பலவாறாகக் காணப்பட்டமையாலும் பிழையென்று தோற்றாமையாலும் அவை இருந்தவாறே காட்டப்பெற்றன; அவற்றுட் சில வருமாறு:

அவிநயம், அவினயம், அவினையம்; புறநடை, புறனடை; குருசில், குரிசில்; பருதி, பரிதி.

பழைய பிரதிகள் சிலவற்றில் உயிரும் உயிர்மெய்யுமாகிய ஈகார ஏகார ஐகாரங்களின் பின் யகரம் எழுதப்பெற்றும் இப்போது வழங்குகிற ஏகரம் மேல்விலங்கு பெற்றும் காணப்பட்டன. இந்நூலில், "எய்து மெகர மொகர மெய்புள்ளி"

(சூ. 97) என்றதற்கு ஏற்ப உயிரும் உயிர்மெய்யுமாகிய எகர ஒகரங்கள் புள்ளியுடன் சில பிரதிகளில் வரையப் பெற்றிருந்தன; உயிர் எகர ஒகரங்கள் பண்டைக்காலத்துப் புள்ளி பெற்று வழங்கியதை* "நேரிழையார் கூந்தலினோர் புள்ளிபெற நீண் மரமா, நீர் நிலையோர் புள்ளி பெற நெருப்பாம்", "வாமணிமே கலையார்" (பக். ௫௫) என்னும் வெண்பாக்களும் உயிர்மெய் எகர ஒகரங்கள் புள்ளிபெற்று வழங்கியதை † "நெய்கொண்டெ னெட்கொண்டெ னெற்கொண்டென் கொட்ட் கொண்டென், செய்கொண்டென் செம்பொன் கொண்டென்" என்னும் பிந்துமதி உதாரணச் செய்யுளும் விளக்கும்.

சில அன்பர்கள் விரும்பியபடி இந்நூற் சூத்திரங்கள் விளங்குதற் பொருட்டுச் சந்திபிரித்தே பதிப்பிக்கப்பெற்றன.

சில மேற்கோள்களை வசனமென்றாவது செய்யுளென்றாவது இவ்வுரையில் நிச்சயிக்கக் கூடவில்லை; இக்காலத்து வழங்காத சில மொழிகளுக்கும் சில வாக்கியங்களுக்கும் பொருள் புலப்பட வில்லை.

"உவர்க் கடலன்ன...... கொள்வாயே" (பக்-௯௪) என்னும் பகுதி ஓரே பாடலாக வேறிடத்திற் காணப்பெற்றும் இதில் இடையிடையே பிரித்துக் குறிப்புரை எழுதப்பட்டிருந்தமையின், அவ்வாறே பதிப்பிக்க நேர்ந்தது; இதுபோல்வன சில.

இப்புத்தகத்தின் பின்னுள்ள அகராதியில் இந்நூல் மூலம், உரை, மேற்கோள் என்பவற்றிற் கண்ட அரிய மொழிகளும் விஷயங்களும் சிறிய வாக்கியங்களும் சேர்க்கப்பட்டுள்ளன. விரிவஞ்சி எல்லாச் சொற்களுக்கும் பொருளெழுதவில்லை; இந்தப் புத்தகத்தைக்கொண்டு வேறு நூல்களையும் அவற்றைக் கொண்டு இதனையும் ஆராய்ந்து உண்மை காணுதற்குக் கருவியாகவே இவ்வகராதி எழுதப்பெற்றது" முன்னுரை III-IV.

## மூல பாடத்திறனாய்வும் பாடவேறுபாடும்

'மேலே கண்ட முன்னுரைப் பகுதியிலிருந்து மூல பாடத் திறனாய்வில் அய்யரவர்கள் மேற்கொண்ட கொள்கைகளைக் கீழ்க்கண்டவாறு தொகுத்துச் சொல்லலாம் :

1. மூலம், உரை, மேற்கோள் முதலியவற்றில் காணப்பட்ட பாடவேறுபாடுகளை அவ்வவ்விடத்தில் அமைத்தல்.

---

* தண்டியலங்காரம், மாத்திரைச் சுருக்கமேற்கோள்; கூந்தல் ஓதி, மரம் ஓதி; நீர் நிலை ஏரி, நெருப்பு எரி.

† யா-வி. ஒழிபியலுரையிற்கண்ட மேற்கோள்

2. நூலின் மூல பாடத்தை, உரையாசிரியரின் உரையை ஒட்டி முடிவு செய்தல்; அவ்வாறு கொண்ட பாடங்கள் இக்காலத்து வழங்குகின்ற பாடங்களினும் வேறாக உள்ளன, எனினும் அவை மயிலைநாதர் கொண்ட பாடங்கள் ஆதலால் அதை அவ்வாறே கொடுத்தது தக்கதேயாம்.

3. உரை பெற்ற பத்துப்பாட்டு, சீவகசிந்தாமணி முதலிய நூல்களிலிருந்து காட்டப் பெற்ற மேற்கோள்களிலும், மூல நூல் உரையாசிரியர் கொண்ட பாடத்திலிருந்து, மயிலைநாதர் கொண்ட வேறுபட்ட பாடங்களை அவ்வாறே அமைத்துள்ளார். அதுவும் தக்க முறையே. ஆனால் அவை எவையென்று சுட்டவில்லை. அவற்றைத் தொகுத்துத் தந்திருக்கலாம்.

4. பிரதிகளில் பலவாறாகக் காணப்பட்ட சில சொற்களை இருந்தவாறே அமைத்துள்ளது பாராட்டத்தக்கது. (எ.டு. அவிநயம், அவிளயம், அவினையம், பருதி, பரிதி). இவை அக்கால வட்டார வழக்கு, உச்சரிப்பு, எழுதும் முறை முதலியன பற்றி அறியத்துணை செய்யும்.

பாட வேறுபாடுகள் எப் படிகளைச் சேர்ந்தது என்று கண்டு பிடிக்கத்தக்க விதத்தில்-சுருக்க முறையில் பாட வேறுபாடு களுடன் அவை காணப்படும் படிகளுக்கு எண்ணிட்டுச் சுருக்க முறையில் குறித்திருந்தால், வட்டார வழக்கு, வட்டார எழுத்து வேறுபாடு முதலியவற்றின் பின்னணியில் ஆராய வசதியாக இருந்திருக்கும். அவ்வாறு அய்யரவர்களே 8 இடங்களில் அடிக் குறிப்புக்கள் அமைத்துள்ளார், அவையாவன:

சூத். 18. உரை:

'ஆற்றொழுக்கு' என்பது முதலாக, 'முடித்துப் போமியை பினது' என்பது இறுதியாகவுள்ள பகுதிகள் சில பிரதி களில் இல்லை,

சூத். 40:

ஆசாற் சார்ந்தமை வரக் கேட்டல்-இவ்வடி சில பிரதி களில் இல்லை.

## சிறப்புப்பாயிரம் உரை

'இதன் பின், இருவகைப் பாயிரமும் ஒரு வகையான் முடிந்தன' என்னும் தொடர் மொழியொன்று, சில பிரதிகளிற் காணப்படுகின்றது.

சூத். 66 உரை முடிபு:

இதன் பின் ''ஐ ஔ இ உச் செறிய (சூத். 70)'' என்னும் சூத்திரம் சில பிரதிகளில் வரையப் பெற்றுள்ளது.

சூத். 89 உரை:

அஃகாமை (வெஃகாமை, அஃகி, வெஃகி அஃகோ என்பன பிற உயிர்களோடும் வந்தன) முதலிய ஐந்தும் சில பிரதிகளில் இல்லை.

சூத். 124:

'அம்முனிகர மாய்த மென்றிவை, எய்தின்' என மூலமும் 'அகரமுன் இகரமும் ஆய்தமும் வரின்' என உரையும், 'அ இ வனம் ஐவனம், கஃசு கைசு என உதாரணமும் மிதிலைப்பட்டி ஸ்ரீ அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள் வீட்டுப் பிரதியிலும் வேறு மூன்று பழைய பிரதிகளிலும் காணப்பட்டன.

சூத். 158 உரை:

இதன் பின், 'சில விகாரமா முயர்திணை' எனவே பிற வீறுகள் முன் உயர்திணையிடத்துச் சில விகாரமா மெனக் கொள்க. அவை-என்பது சில பிரதிகளிற் காணப் பெறுகின்றது.

சூத். 236:

''லனமுன் றனவும் ளணமுன் டணவும்'' எனப் பாடமும் அதற்கேற்ப உரையும் உதாரணங்களும் பழம் பிரதிகள் பலவற்றில் காணப்படுகின்றன.

சூத். 387 உரை:

பொரி, குழ, களப மென்றவற்றிற்கு ஒரு பிரதியிலும் உதாரணம் கிடைத்திலது.

இத்தகைய ஆராய்ச்சிக் குறிப்புக்கள் பிற்காலப் பதிப்பாளர்க்கும், நூலாராய்ச்சி செய்வார்க்கும் மிகுந்த துணை செய்வனவாகும்.

## பாட வேறுபாடுகள்

பதினைந்து ஏட்டுச் சுவடியிலிருந்தும் அய்யரவர்கள் தொகுத்துச் சுட்டியிருக்கும் பாட வேறுபாடுகள் 1384 (இரண்டாம் பதிப்பில் 1378) ஆகும். இவற்றின் மூலத்தின் பாட

வேறுபாடுகள் 126 (இரண்டாம் பதிப்பில் 120) உரையின் பாட வேறுபாடுகள் 1258. இப்பாட வேறுபாடுகள் அவ்வச் சூத்திரத்தின் உரையின் இறுதியில் வரிசை எண்ணிட்டு அமைக்கப்பட்டுள்ளன.

மயிலைநாதர் உரையோடு கூடிய நன்னூலுக்கு இத்தனை எண்ணிக்கையில் காணப்படும் பாட வேறுபாடு ஏற்படக் காரணம், சுமார் அறுநூறாண்டு கால இடைவெளியில் நன்னூல் மயிலைநாதர் உரை பல விடங்களிலும் பலராலும் கற்கப்பட்டு வந்ததே எனலாம்.

## நூல் பதிப்பிற்கு உதவியவர்கள்

நூற்பதிப்பிற்கு வேண்டிய சுவடிகள் கொடுத்தும் தருவித்தும் உதவியவர் அப்போது திருவாவடுதுறை ஆதீன கர்த்தராக விளங்கிய ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகரவர்கள், நூற்பதிப்பிற்குதவியவர்களுக்குப் பொருளுதவி செய்து ஆதரித்தவர் ஸ்ரீசேது சமஸ்தானாதிபதிகளும் மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவர்களும் சென்னைச் சட்ட நிருபண சபை அங்கத்தினர்களுமான கௌரவம் பொருந்திய ம-ா-ா-ஸ்ரீ பா. இராஜ ராஜேசுவர சேதுபதி மகாராஜா அவர்களாவர்.

இந்நூலை ஆராய்ச்சி செய்யுங் காலத்தும் பதிப்பிக்குங் காலத்தும் உடனிருந்து ஒப்பு-நோக்குதல் முதலிய உதவி செய்து வந்தவர்கள் மயிலாப்பூர் பி. எஸ். ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் பிரஹ்மஸ்ரீ இ. வை. அனந்தராமையரவர்களும், சென்னை இராசாங்கத்துக் கையெழுத்துப் புத்தகசாலைத் தமிழ்ப் பண்டிதர் சிரஞ்சீவி ம. வே. துரைசாமி ஐயரும் ஆவர்.

திரு. இ. வை. அனந்தராமையர் உதவியை நினைவு கூரும் முகவுரை அடிக்குறிப்பில் இவர் இதுவரை அகப்படாமலிருந்த பழமொழியின் முதற் செய்யுளைக் கண்டு பிடித்தவர் என்ற அருஞ் செய்தியைச் சுட்டி, மேலும் 285-ஆம் பக்கம் பார்க்க என்று எழுதிச் செல்லுகிறார்கள் அய்யரவர்கள். அது நன்னூல் 418-ஆம் நூற்பா அடிக்குறிப்பாகும். அந்நூற்பாவில் மேற்கோளாக வரும் 'அரிதவித்து' என்று தொடங்கும் பழமொழி முதல் பாடலைப் பற்றிய அடிக்குறிப்பில்,

> ''இதுவரையிற் கிடைத்து வந்த பழமொழிப் பிரதிகளிலெல்லாம் முதற் செய்யுள் காணப்படவேயில்லை; உரை மட்டுமேயுள்ளது. இந்தப் பகுதி பதிப்பிக்கப் பெற்று வருங்காலத்தில், இச்செய்யுளைக் கண்டவுடன் மிக்க வியப்படைந்து, உரை நடையிற் பதிந்திருந்த ஞாபகத்தைக் கொண்டே ''இந்த வெண்பா பழமொழியின்

முதற் செய்யுளாக இருத்தல் வேண்டும்'' என்று அன்பர்-பிரஹ்மஸ்ரீ, இ. வை. அநந்தராமையரவர்கள் சொன்னார்கள்.''

என்று எழுதுகிறார் உ. வே. சா.

இந்த எடுத்துக் காட்டிலிருந்து உ. வே. சாவின் உள்ளம்—அல்லது ஆளுமை பற்றிய சிறப்பான இரண்டு கருத்துக்களை நாம் தெரிந்து கொள்ளலாம். ஒன்று தினைத்துணை நன்றி செய்யினும் பனைத்துணையாகக் கொள்ளும் பண்பு. இப் பண்பை அவருடைய என் சரித்திரம் முதலிய நூல்களிலும், தாம் பதிப்பித்த நூல் முகவுரைகளிலும், அவர் வாழ்க்கை நிகழ்ச்சிகளிலும் (எ.டு) தம் வீட்டிற்குத் தமக்கு வேலை செய்து வைத்த தியாகராசச் செட்டியார் பெயர் வைத்தது முதலியவை) காணலாம். பொது வாழ்விலும் குறிப்பாக அறிவுத் துறைகளிலும் நன்றி பாராட்டும் மரபு அற்று வரும் இன்றைய சூழலில் உ. வே. சா. அவர்களுடைய உயர்ந்த பண்பை நாம் நினைந்து மகிழ்ந்து பாராட்டாமல் இருக்க முடியாது.

அடுத்தது ஆய்வாளன் ஒருவன் அறிவுத் துறையில் ஒரு புதுமையைக் கண்டு பிடிக்கும்போது ஏற்படும் மனக்கிளர்ச்சியையும் மன நிறைவையும் இந்நிகழ்ச்சி உள்ளவாறு காட்டுகிறது. பழமொழியின் முதற் பாடல் கிடைக்காது வருத்தமுற்றிருந்த உ. வே. சா. வைப் போன்ற ஆய்வுள்ளம் படைத்தோரே ஒரு பாடலைப் புதிதாகக் கண்டு இத்தகைய உள்ளக் கிளர்ச்சியையும் இன்பத்தையும் அடைய முடியும். மற்றவர்களுக்கு இது வெறும் சாதாரண நிகழ்ச்சியாக இருக்கலாம். இத்தகைய இன்பமூட்டும் தருணங்கள் — ஆய்வாளர்க்கு மிக அரிதாகவே ஏற்படும். எனவே தான் உ. வே. சா. அதற்குச் சிறப்புக் கொடுத்து முன்னுரையிலும் நூலினகத்தும் ஈரிடங்களில் எடுத்துச் சுட்டுகிறார். ஆனால் இதன் சிறப்பை உணராது மயிலைநாதருரையை இரண்டாம் பதிப்பாக வெளியிட்டவர்கள் இவ்விரண்டு அடிக் குறிப்புக்களையும் அறவே நீக்கி இருப்பது மிகவும் வருந்தத் தக்கது —இது அன்னோர் அய்யரவர்களுக்குச் செய்த நன்றிக் கேடாகும் என்றே கூறலாம்.

## நூலின் முன்னால் அமைக்கப்பட்டுள்ள பிற பகுதிகள்

1. நூலாசிரியர் வரலாறு (பக். vii - xii) 2. நூல் பக். xii - xvi, 3. உரையாசிரியர் வரலாறு [பக். xvii - xxii], 4. சீயகங்கன் வரலாறு [பக். xxiii], 5. பரிசோதனைக் குறிப்பு [பக். xxiv]

## நூலாசிரியர் வரலாறு

நன்னூலாசிரியர் பவணந்தியின் சமயம், துறவு, ஊர் நூலியற்றக் காரணம், நூலியற்றிய முறை, சிறப்புக்கள், காலம் முதலிய செய்திகள் தக்க இலக்கிய கல்வெட்டுச் சான்றுகளால் தெளிவாகவும் விளக்கமாகவும் எழுதப்பட்டுள்ளன. இவற்றிற்கு திரு. டி. ஏ. கோபிநாதராயர், திரு. தி. அ. முத்துசாமிக் கோனார் ஆகியவர்களிடம் பெற்ற உதவிகளைத் தக்க இடங்களில் குறித்து நன்றி தெரிவித்து உள்ளார்கள்.

## நூல்

நன்னூலின் பொது இயல்பு, சிறப்பு, அமைப்பு, சூத்திரத் தொகை, அவற்றிற்கு மூலங்கள், பின்னோர் போற்றிய பெருமை, நூலின் சிறப்புச் செய்திகள், நன்னூலைப் பாராட்டும் பாடல்கள் முதலியன இப்பகுதியிலமைந்துள்ளன.

## உரையாசிரியர் வரலாறு

மயிலைநாதர் சைனர் என்பது, இவரை ஆதரித்தவர், இவர் உரையியல்புகள், காலம், உரையால் விளங்கிய செய்திகள், உரையாசிரியர் கொள்கைகள், உரையில் மேற்கோளாக வந்த இலக்கிய இலக்கணங்களின் பட்டியல் முதலியன இப்பகுதியில் இடம் பெறுகின்றன. இதில் பல பகுதிகளும் சிறந்த ஆராய்ச்சிக் குறிப்புக்களாக அமைந்துள்ளன.

## சீயகங்கன் வரலாறு

இப்பகுதி செந்தமிழில் [நான்காம் தொகுதி] வந்த டி. ஏ. கோபிநாதராயரவர்கள் நன்னூல் பற்றி எழுதிய பகுதி, நன்னூல் சிறப்புப்பாயிரம் முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டிருக்கிறது.

## பரிசோதனைக் குறிப்பு

என்ற பகுதியில் பின் செய்த சில மாற்றங்கள் கூறப்படுகின்றன.

## நூலமைப்பு

சூத்திரம் உரை, அதன் கீழ்ப் பிரதிபேதங்கள் வெவ்வேறு அச்செழுத்துக்களில் அமைக்கப்பட்டுள்ளன — சூத்திரப் பொருளை விளக்கும் தலைப்புக்கள். எழுத்தியல் முடிய [126

வரை] மட்டுமே காணப்படுகின்றன. அதன் பின் உள்ள சூத்திரங்களுக்கு இல்லை. இது மூல ஏட்டிலிருந்ததா அல்லது அய்யரவர்கள் கொடுத்ததா என்று தெரியவில்லை.

## அடிக் குறிப்புக்கள்

அவ்வப் பக்கங்களில் அடிக் குறிப்பாகக் காணப்படுவன வற்றில் 1. மேற்கோள் விளக்கம் 2. ஒப்புமைப் பகுதிகள் 3. பொருள், புணர்ச்சி பற்றிய குறிப்பு விளக்கம் 4. மூலப் படிகளின் இயல்பு பற்றிய செய்திகள் முதலியன அடங்கி உள்ளன.

## நூலின் பின்பகுதி

### அரும்பத முதலியவற்றின் அகராதி [பக். 1-41]

இதன் அமைப்பு பற்றி அய்யரவர்கள் கூறுவதாவது:

> ''இப்புத்தகத்தின் பின்னுள்ள அகராதியில் இந்நூல் மூலம், உரை, மேற்கோள் என்பவற்றிற் கண்ட அரிய மொழிகளும் விஷயங்களும் சிறிய வாக்கியங்களும் சேர்க்கப் பட்டுள்ளன. விரிவஞ்சி எல்லாச் சொற்களுக்கும் பொரு ளெழுதவில்லை, இந்த புத்தகத்தைக் கொண்டு வேறு நூல் களையும் அவற்றைக் கொண்டு இதனையும் ஆராய்ந்து உண்மை காணுவதற்குக் கருவியாகவே இவ்வகராதி எழுதப் பெற்றது.'' —முகவுரை பக். IV

இவ்வகராதி சொற்பொருள் குறிப்பகராதி, பொருளடைவு என்ற இரண்டு பண்புகளையும் கொண்டு விளங்குகிறது எனலாம். ஆனால் புறப்பொருள் வெண்பா மாலையிற் போலன்றி இங்கு மிகச் சில சொற்களுக்கே சொற்பொருள் எழுதப்பட்டுள்ளது. பொருளடைவு என்ற நிலையிலும் எல்லாக் கூறுகளும் இடம் பெறவில்லை. எடுத்துக்காட்டுச் சொற்கள் அனைத்தும் இடம் பெறவில்லை. எனவே இவ்வகராதி சொல் லடைவு அகராதி, பொருளடைவு அகராதி என்ற இரண்டு நிலையிலும் இன்னும் விரிவு பெறும் வாய்ப்புளது.

**மேற்கோள் விளக்க அகராதி** [பக். 42].—இது நூலினகத்துச் சுட்டப்படாமல் பின் விளங்கிய மேற்கோள்களின் அகராதி யாகும்.

**விளங்கா மேற்கோள் அகராதி** [பக். 43-47] என்ற பகுதியில் 367 விளங்கா மேற்கோள்களின் முதற்குறிப்பகராதி உள்ளது.

இறுதியில் நன்னூல் சூத்திர முதற்குறிப்பும் (பக். 48-51) ஒரு பக்கத்தில் பிழைதிருத்தமும் அமைந்துள்ளன.

## இரண்டாம் பதிப்பு

இரண்டாம் பதிப்பை அய்யரவர்களே வெளியிட எண்ணியும் வேறுபல வேலைகளால் அது நிறைவேறவில்லை. எனவே 1946-இல் அவர் மகன் சா. கலியாண சுந்தரையர் இரண்டாம் பதிப்பை வெளியிட்டார். அதில் செய்யப்பட்ட மாற்றங்களைக் கீழ்க் கண்டவாறு அவர் கூறுவார் :

''அவர்களுடைய கைப்புத்தகத்திலிருந்த குறிப்புக்களால், இப்பதிப்பில் ஆங்காங்கு சில திருத்தங்கள் அமைந்துள்ளன. விளங்கா மேற்கோள்களில் சில இப்போது விளங்கின. அரும்பத முதலியவற்றின் அகராதி விரிவடைந்துள்ளது.

முதற்பதிப்பில் அடிக்குறிப்பாக இருந்த ஆகரங்கள் இதில் உரிய இடங்களில் அங்கங்கே சேர்க்கப்பெற்றுள்ளன.

112-ஆம் பக்கத்துள்ள ''எழுபானிரண்டெழுத்து...'' என்னும் வெண்பாவால் பாயிரத்திலுள்ள 52 சூத்திரங்களும் பவணந்தி முனிவர் இயற்றியனவல்லவென்பது அறியப்படும். மயிலைநாதரே 51, 52-ஆம் சூத்திரங்களைப் பனம்பாரம். என்று கூறுவதாலும் இது வலியுறும்.

225-ஆம் பக்கத்தில் 'கரையாட என்பது' பிரதிபேதமாகக் காட்டப் பெற்றுள்ளது. அது பிரதி பேதமன்று. அதனை, 412-ஆம் சூத்திரத்தின் வரலாற்றின் ''கரையாழ......சுனை'' என்னும் தொடர் மொழிக்கு அடுத்தாற்போல் 'கரையாட'. என்று இருக்கவேண்டுமென்று இப்பால் தெரிந்தது அவ்வாறு அமைத்துக் கொள்ளும்படி அன்பர்களை வேண்டுகிறேன்.'' -நன்னூல்—மயிலைநாதர் உரை-இரண்டாம் பதிப்பு(1946)

## பிற மாற்றங்கள்

1. முதற் பக்கத்தில் சுவாமிநாதையருக்கு மகாமகோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி என்ற அடையும், அவர்கள் குமரர் எஸ். கலியாணசுந்தரையரால் சென்னை, கபீர் அச்சுக் கூடத்திற் பதிப்பிக்கப் பெற்றன, இரண்டாம் பதிப்பு விய்ய வருடம் கார்த்திகை மாதம் 1946, விலை 5-0-00 முதலியவையும் காணப்படுகின்றன.

2. உள்ளுறை இரண்டாம் பக்கத்தில் அமைகிறது. அதற்கு இப் புத்தகத்தில் அடங்கியவை என்ற தலைப்பே உள்ளது.

3. அடுத்து இப்புத்தகத்துள்ள நூற்பெயர் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி அமைகிறது. இதில் இப்போது 66 நூல் களின் சுருக்க விளக்கம் உள்ளது.

4. IV-ஆம் பக்கத்தில் குறிப்பு என்று எஸ். கலியாணசுந்தரையர் எழுதிய இரண்டாம் பதிப்பு முன்னுரை காணப்படுகிறது. அய்யரவர்களைப் போலவே இவரும் திருச்சிற்றம்பலம் என்று தலைப்பிட்டு 'வேதநாயகன்' என்ற தேவாரப் பாடலைக் கொடுத்துள்ளார்.

5. முகவுரை உ. வே. சா. முதற்பதிப்பில் எழுதியவாறே பெரும்பாலும் அச்சிடப்பட்டுள்ளது. அதில் முன்பு குறிப்பிட்டபடி இ. வை. அனந்தராமையர் பழமொழிப் பாடலைக் காட்டியமை பற்றிய நன்றிக்குறிப்பு நீக்கப் பட்டுள்ளது. இதோடு தொடர்புடைய 228-ஆம் பக்க அடிக் குறிப்பும் நீக்கப்பட்டு உள்ளது.

6. முன்பதிப்பிலிருந்த பரிசோதனைக் குறிப்பு, மேற்கோள் விளக்கம் ஆகியன நூலில் உரிய இடங்களில் திருத்தங்களாகச் சேர்க்கப்பட்டுள்ளன.

7. அய்யரவர்கள் முதற்பதிப்பில் காட்டிய பாடவேறுபாடுகள் அவ்வாறே காட்டப்படுகின்றன.

8. முன்பதிப்பிலிருந்தது போலன்றி, சூத்திர முதற்குறிப்பகராதி மூல நூலின் இறுதியில் வைக்கப்பட்டுள்ளது. அதன்பின்னர் விளங்கா மேற்கோள் அகராதியும், அரும்பத அகராதியும் வைக்கப்பட்டுள்ளன.

9. விளங்கா மேற்கோள்கள் 367 ஆக முதற்பதிப்பில் இருந்தது 353 ஆகக் குறைந்துள்ளது.

10. மேற்கோள்களின் ஆகரங்கள் அவ்வப்பக்கங்களில் அடிக் குறிப்பாக இருந்தது நூலகத்து உரிய இடங்களில் தடித்த எழுத்தில் அமைக்கப்பட்டுள்ளன.

11. அடிக்குறிப்பில் இருந்த பொருள் விளக்கக்குறிப்புக்கள் [எ.டு. சூத். 268] அரும்பத அகராதியில் சேர்க்கப் பெற்றுள்ளன. அதேபோன்று அடிக்குறிப்பிலும் அரும்பத அகராதியிலும் இருந்தனவற்றை, அடிக்குறிப்பிலிருந்து [எ.டு. சூத். 273] நீக்கிவிட்டார்கள்.

12. விளங்கா மேற்கோள்களில் பக்க எண்ணை மாற்றிச் சூத்திர எண்ணாக ஆக்கியுள்ளார்கள்.

## செய்யத்தக்கன

உ.வே.சா. அவர்கள் பதிப்பில் 15 சுவடிகளைப் பயன்படுத்தி 1379 பாடவேறுகளைத் தொகுத்து மூல பாட ஆய்வு மூலம் பாடத்தை உறுதி செய்துள்ளார் என்பதில் ஐயமில்லை. அய்யரவர்கள் பார்க்காதனவும், பார்த்தனவுமாகிய எல்லாச் சுவடிகளையும் தொகுத்து மீண்டும் மூலபாட ஆய்வு செய்து ஒரு செம்பதிப்பு வெளியிடலாம். இதில் அய்யரவர்கள் செய்துள்ள முறையை ஒட்டிப் புதிய ஆராய்ச்சிகளின் பின்னணியில் செய்யத்தக்க பிற மாற்றங்களும் உள்ளன. அய்யரவர்கள் தந்துள்ள அரும்பத அகராதியை இரண்டாகப் பிரித்து மூலத்திற்கும், உரைக்கும் ஒன்று பொருளுடன் கூடிய சொல்லடைவு அகராதியாகவும், பிறதொன்றைப் பொருளடைவாகவும் அமைக்கலாம். நூலினகத்து வரும் எடுத்துக் காட்டுக்கள், மேற்கோள்கள் முதலியனவற்றிற்கும் தனித் தனி அடைவு அமைக்கலாம். இதில் விளங்கா மேற்கோள் தனியாகவும், விளங்கும் மேற்கோள் தனியாகவும் அமைக்கலாம்.

அடுத்து மயிலைநாதர் பிறரைச் சுட்டுமிடங்கள் மயிலை நாதரைப் பிறர் மறுக்குமிடங்கள் [எ.டு. சங்கரநமச்சிவாயர்] முதலியவற்றை ஆங்காங்கே அடிக்குறிப்பாக அமைக்கலாம். சங்கரநமச்சிவாயர் மயிலைநாதர் உரையைக் குறிப்பிட்டும், மறுக்கும் இடங்களை எல்லாம் உ. வே. சா. அவர்கள் நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரைப்பதிப்பில் காட்டியுள்ளார்கள். அதை இதற்குப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

## உ. வே. சா. பதிப்பிற்குப்பின்

உ. வே. சா. மயிலைநாதர் உரை வெளி வந்த பின் பவானந்தம் பிள்ளை தமது நன்னூல் உரைக்கு [1922] அதைப் பயன்படுத்திக் கொண்டதாகக் குறிப்பிடுகிறார். உ. வே. சா. அவர்களே தம் சங்கரநமச்சிவாயர் உரைப்பதிப்பின் குறிப்புரைகளில் மயிலை நாதர் உரையைப் பல இடங்களில் சுட்டிக் காட்டுகிறார். தமிழில் மயிலைநாதர் உரைப் பயிற்சியும் ஆராய்ச்சியும் விரிவாக நடைபெறவில்லை என்றே தோன்றுகிறது.

க. ப. அறவாணனின் எழுநூறு ஆண்டுகளில் நன்னூல் [1979] என்ற நூலில் [பக். 89-115] மயிலை நாதர் உரை பற்றி ஆராய்

கிறார். மு. வை. அரவிந்தனின் **உரையாசிரியர்கள்** [1983, திருத்திய பதிப்பு] நூலிலும் மயிலைநாதர் உரை பற்றிய ஆராய்ச்சிஉண்டு [626-638]

கேரளப் பல்கலைக் கழகத்தில் திரு. பொன் விஜயகுமார் **நன்னூல் சொல்லடைவும் உரையாசிரியர் [மயிலைநாதர்] அகராதியும்** என்ற தலைப்பில், மயிலைநாதர் தரும் சொற்பொருள் முறையில் அகராதி தயாரித்துள்ளார். [முதுகலைப் பட்ட ஆய்வேடு, 1984, தமிழ்த் துறை, கேரளப் பல்கலைக் கழகம்]. இன்னும் ஓரிருவர் மயிலைநாதர் உரை ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளதாகத் தெரிகிறது.

# 6. நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரைப் பதிப்புக்கள்

## நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரை

நன்னூலுக்குப் பதினான்காம் நூற்றாண்டில் மயிலை நாதர் உரையும், பதினாறாம் நூற்றாண்டில் ஆண்டிப் புலவர் உரையும் தோன்றியபின் பதினேழாம் நூற்றாண்டில் தோன்றிய சங்கர நமச்சிவாயர் உரை பல வகைகளிலும் சிறப்புடையதாகும்.

மயிலை நாதர் உரைக்கு மறுப்புரையாகவும் மாற்றுரை யாகவும் எழுந்தது சங்கரநமச்சிவாயர் உரை எனலாம். இது பற்றி மயிலை நாதர் உரைப் பதிப்பு என்ற முந்தைய கட்டுரை யில் விரிவாக ஆராய்ந்துள்ளதால் மீண்டும் அதை விவரிக்க வில்லை. இது பற்றி அய்யரவர்கள் சான்றுகளுடன் எழுதியுள்ள பகுதிகளை மட்டும் சுட்டிக் காட்டலாம்.

''நன்னூற் சூத்திரங்களில் விருப்பும் மயிலை நாதருரை அந் நூலுக்கு ஏற்றவுரையன்றென்பது பற்றி அதன்பால் வெறுப்பு முள்ள தம் ஆசிரியர் சாமிநாத தேசிகர் "நன்னூலுக்குச் சிறந்த தோருரை நீர் செய்திடுக'' என்று பணித்தமையானும், கல்வி கேள்விகளிற் சிறப்புற்று, "முத்தமிழ்ப் புலமையும் முறையரசு ரிமையும் இத்தலத்தெய்திய இறைமகன்'' என்று பாராட்டப் படும் ஊற்றுமலை மருதப்பத் தேவருடைய வேண்டுகோளாலும் இந்நூலுக்கு மிக அழகிதாகிய ஓருரையை இவர் இயற்றுவாரா யினர். சாமிநாத தேசிகருக்கு அக்கருத்துக்களுண்மை, ''சேற்று நிலத்திற் கவிழ்ந்த பால் தேன் நெய் முதலியனவும் சேறானாற் போல நன்னூற் சூத்திரமும்* அவ்வுரையுடனே கலந்து குற்றப்

---

* மயிலை நாதருரையை உ. வே. சா. தேடிக் கண்டு பிடிக்கும்படிச் செய்தது இந்த வாக்கியமே.

பட்டதென்க;முன்னூலொழியப் பின்னூல் பலவினுள் நன்னூலார் தமக்கு எந்நூலாரும் இணையோவென்னுந் துணிவே மன்னுக; முன்னோரொழியப் பின்னோர் பலரினுளென்றலுமொன்று'' (இ. கொ. சூ. அ-உரை), ''அவனருளால்'' (பக். 2) என்பனவற்றாலும், மருதப்பத்தேவர் விரும்பினமை, ''நன்னூலுட் கருத்துலகோரறியவுரை செய்கவென'' (பக். ச) என்பது முதலிய மூன்று அருமைச் செய்யுட்களாலும் விளங்கும்.'' நான்னூல் சங்கரநமச்சிவாயர் உரை (1915) உரையாசிரியர் வரலாறு, பக். 20.

''இவர் மயிலை நாதருரையைப் பின்பற்றியவராக இருப்பினும் அவராற் புலப்படுத்தப்படாத அநேகங்கள இவருரையிற் காணப்படுகின்றன. பதசாரம் எழுதிச் செல்லுதலிலும் பொருளை நுட்பமாக அறிந்து தக்க ஆதாரங்காட்டி விளக்குதலிலும் உவமை காட்டலிலும் பிறவற்றிலும் இவ்வுரை அவ்வுரையைக்காட்டிலும் மேற்பட்டதென்று சொல்லலாம்; காரணம் அவருடைய காலத்திற்குப் பின்பு பறபல ஆசிரியர்கள் தோன்றி இயற்றித்தந்த நூல்கள், உரைகளின் பேருதவிதானென்று சொல்ல வேண்டும். இவருடைய உரையிற் சில பகுதிகள் சேனாவரைய முதலியவற்றைப் போற் சிறந்திருக்கின்றனவென்று சில சமயங்களில் ஆசிரியர்கள் சொல்லக் கேட்டிருக்கின்றேன்.''
— ஷை-பக். 21

சங்கர நமச்சிவாயருக்குப் பின் பதினெட்டாம் நூற்றாண்டில் சிவஞான முனிவரும், கூழங்கைத் தம்பிரானும் நன்னூலுக்கு உரை எழுதினர்.* பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழில் பதின்மூன்று உரைகளும் ஆங்கிலத்தில் ஐந்து உரைகளுமாகப் பதினெட்டு உரைகள் நன்னூலுக்குத் தோன்றியுள்ளன. ஏறத்தாழ அறுபதுக்கு மேற்பட்ட நன்னூற் பதிப்புக்கள் அச்சிடப்பட்டுள்ளன. (க. ப. அறவாணன், எழுநூறு ஆண்டுகளில் நன்னூல் 1977. பக். 179) இவை எல்லாம் சங்கர நமச்சிவாயர் உரையை ஏதோ ஒரு வகையில் ஆதாரமாகக் கொண்டே விளங்குகின்றன எனலாம். சங்கர நமச்சிவாயர் உரைச்சிறப்பை

* இதுவரை கிடைக்கவில்லை என்று கருதி வந்த இவ்வுரையை இலண்டன் பிரிட்டிசு நூலகத்திலிருந்து எடுத்து அச்சிட்டு வெளிப்படுத்தியுள்ளார் டாக்டர் அ. தாமோதரன் (நன்னூல் மூலமும் கூழங்கைத் தம்பிரான் உரையும், பிரான்சு ஸ்டெய்னர் ஃபெர்லாக், வீஸ்பாடன், மே. ஜெர்மனி, 1980).

விளக்க அய்யரவர்கள் கூறும் கருத்தை இங்கு நினைவுபடுத்தலாம்:

"வடநூற் கடலையும் தென்தமிழ்க் கடலையும் நிலை கண்டுணர்ந்த ஸ்ரீசிவஞான யோகிகள் இருமொழிக் கண்ணும் தாம் ஆராய்ந்தறிந்த அரிய விதிகளை அமைத்தற்குத்தக்க இடமென்று கொள்வாராயின் சங்கர நமச்சிவாயருடைய உரையின் பெருமையைக் கூறவல்லவன் யானோ?"

—நன்னூல் சங்கரநமச்சிவாயர் உரை (1925) பக். 22

## சங்கர நமச்சிவாயர் உரை ப்பதிப்புக்கள்

விசாகப் பெருமாளையர் 1839-இல் வெளியீட்ட நன்னூல் காண்டிகை உரை, "சங்கர நமச்சிவாயரால் செய்யப்பட்ட நன்னூல் விருத்தி உரையையும், சிவஞான முனிவரால் திருத்தம் செய்யப்பட்ட புத்தம் புத்துரையையும் சுருக்கி, சிறுவரும் புரிந்து கொள்ளும்படியாக, கருத்து, பதப்பொருள், எடுத்துக்காட்டு முதலானவற்றைக் கொண்டு செய்யப்பட்டது" என்பர். (க.ப அறவாணன் மேற்காட்டிய நூல் பக். 184) தில்லையம்பூர்ச் சந்திர சேகர கவிராஜ பண்டிதர் வெளியிட்ட (காலம் தெரியவில்லை 1871?) நன்னூல் மூலம்-சங்கரநமச்சிவாயர் சிவஞான முனிவர் விருத்தியுரையில் விசாகப் பெருமாளையர் செய்தபதவுரையும் அடங்கியது என்று காணப்படுகிறது. களத்தூர் வேதகிரி முதலியார் 1851-இல் வெளியிட்ட காண்டிகையுரையில் சங்கர நமச்சிவாயர் எழுதிச் சிவஞான முனிவர் புதுக்கிய விருத்தியுரைப் பகுதிகள் இடம் பெற்றுள்ளன. (க. ப. அறவாணன் மேற்காட்டிய நூல் பக். 203). ஆறுமுகநாவலர் அவர்களே சங்கரநமச்சிவாயர் செய்து சிவஞான முனிவர் திருத்திய விருத்தியுரையை 1851-இல் முதன் முதலாக அச்சிட்டு வெளியிட்டவர்கள்.* ஆனால் சங்கரநமச்சிவாயர் உரையை மட்டும்—சிவஞான முனிவர் செய்த திருத்தங்கள் இன்றித் தனியே முதன்முதலில் அச்சிட்டு வெளியிட்டவர் அய்யரவர்களே. இது நடந்தது 1925-இல் ஆனால் இப்பதிப்பு முயற்சிக்குரிய வித்து முன்பே போடப்பட்டிருந்தது.

## அய்யரவர்களும் சங்கர நமச்சிவாயர் உரைப்பதிப்புக்களும்

அய்யரவர்கள் திருவாவடுதுறை மகாசன்னிதானம் சுப்பிரமணிய தேசிகரவர்களிடம் நன்னூல் விருத்தியுரை பாடம் கேட்டபோது, தேசிகரவர்கள், சங்கரநமச்சிவாயர் உரை மட்டுமுள்ள ஏட்டுப் புத்தகத்தை அளித்து, சங்கரநமச்சிவாயர் உரையும் சிவஞானமுனிவர் செய்த திருத்தங்களும் கலந்து காணப்படும் விருத்தியுரை அச்சுப்படியுடன் ஒப்பிட்டுப்

* இதற்கு 1974 வரை பத்துப் பதிப்புக்கள் வந்துள்ளன.

படிக்குமாறு சொன்னார்கள். இவ்வாறு அய்யரவர்களுக்குச் சங்கரநமச்சிவாயர் உரை கிடைத்த வரலாற்றையும், அதோடு தொடர்புடைய நிகழ்ச்சிகளையும், பதிப்பித்த நோக்கத்தையும் சங்கரநமச்சிவாயர் உரை முன்னுரையில் விரிவாகக் கூறுவார்: அதுவருமாறு (இச்செய்திகள் என் சரித்திரத்திலும் விரிவாக உள்ளன. பார்க்க. பக். 40?-404; மேலும் பார்க்க: ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம் இரண்டாம் பாகம் 1940-இரண்டாம் பதிப்பு பக். 129-131).

''திருவாவடுதுறை யாதீனத்து மஹாவித்துவானாகிய திரிசிரபுரம் ஸ்ரீமீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பூதவுடலை நீத்த பின்பு அவர்களுடைய மாணாக்கர்கள் அவர்களை ஆதரித்து வந்தவர்களும் ஷெ ஆதீனத்து க சா-ஆம் பட்டத்து ஞானாசிரியராக விளங்கியவர்களுமான ஸ்ரீமத் சுப்பிரமணிப தேசிகரவர்கள் பால் தத்தம் தகுதிக்கேற்ப நூல்களைப் பாடங்கேட்டு வருவாராயினர். அவர்களுள் மேலகரம் ஸ்ரீசண்பகக் குற்றாலக் கவிராயரவர்களும் யானும் நன்னூல் விருத்தியுரையைப் படிக்க விரும்பிய பொழுது சுப்பிரமணிய தேசிகரவர்கள், ''விருத்தியுரை முதலிற் சங்கர நமச்சிவாயரால் இயற்றப்பட்டிருந்தது; அப்பாற் சிவஞான போதப்பேருரை (திராவிட மகாபாஷ்யம்) முதலியவற்றில் தம்மால் அமைக்கப் பெற்றுள்ள அரிய வடமொழி தென்மொழிப் பிரயோகங்களை எளிதிற் பிற்காலத்தவர்க்குப் புலப்படுத்த நினைந்து இலக்கணக் கொத்து, தொல்காப்பியச் சூத்திர விருத்தி, இலக்கண விளக்கச் சூறாவளியென்னும் நூல்களிலும் பிறவற்றிலு முள்ள முக்கியமான சிலவற்றை உரிய இடங்களிற் கூட்டியும் குறைத்தும் மாற்றியும் ஸ்ரீ சிவஞானயோகிகளால் இவ்வுரை செப்பம் செய்யப்பெற்று விருத்தியுரையென வழங்கலாயிற்று; இங்ஙனம் ஒருரைக்குப்பின் கூட்டியும் குறைத்தும் பிற்காலத்தார் விளக்கி எழுதியுள்ள உரைகளை வடமொழியிற் பரக்கக் காணலாம், இலக்கணக் கொத்து முதலிய மூன்றையும் முறையே படித்த பின்பு பாடங்கேட்டால்தான் விருத்தியுரை நன்கு புலப்படும். இங்கு இவ்வுரையைப் பாடங்கேட்கும் முறை இதுவே'' என்று அறிவுறுத்தி ஏட்டுப் பிரதியொன்றை வருவித்து. ''இது சங்கரநமச்சிவாயருரை மட்டுமுள்ள புத்தகம்; இதனையும் வைத்துக்கொண்டு ஒப்புநோக்கி விருத்தியுரை அச்சுப் புத்தகத்தில் இன்ன இன்ன பகுதிகள் சிவஞானயோகிகள் சேர்த்தவையென்பது புலப்படும்படி அடையாளஞ் செய்து படியுங்கள்'' என்று சொல்லி அப்புத்தகத்தை அளித்தார்கள். அவ்வண்ணமே ஒப்புநோக்கி, சிவஞானயோகிகள் சேர்த்தவற்றின்

முன் 'சி' என்ற அடையாளமும், ஏனைய இடங்களில் 'ச' என்ற அடையாளமும் விருத்தி யுரையில் அங்கங்கே செய்து வந்தோம்.

பாடஞ் சொல்லுகையில் அவர்கள் சங்கரநமச்சிவாயருடைய உரைநயங்களையும் சிவஞானயோகிகள் அங்கங்கே சேர்த்திருக்கும் பகுதிகளின் இன்றியமையாமையையும் அப்போதப்போது எங்களுக்கு மட்டுமேயன்றி அங்கே வரும் வடமொழி, தென் மொழிப் பண்டிதர்களுக்கும் எடுத்துக் கூறி விளங்கச் செய்து இன்புறுத்துவார்கள். இன்னோரன்ன நிகழ்ச்சிகள் அவர்கள் காலத்தில் ஓய்வின்றி நடைபெற்றதுண்டு. அவற்றுள் இவ்வுரையைப் பற்றி ஒன்றை மட்டும் இங்கே எடுத்துக் காட்டுவேன்:—

*பிள்ளையவர்கள் இயற்றிய திருவிடை மருதூருலாவைப் பற்றிப் பொறாமையால் பலவகையான புரளிகளை அங்கங்கே யுண்டாக்கி அவர்களுக்கும் அவர்களுடைய மாணாக்கர்கள் முதலியவர்களுக்கும் மிகுந்த மனவருத்தத்தை உண்டு பண்ணி அதனாற் பலராலும் மிக்க அவமதிப்பையடைந்த இருவர் எப்படியாவது தம் குறையைத் தீர்த்துக் கொள்ள வேண்டுமென்றெண்ணி அதற்கு உபாயம் பிள்ளையவர்களுடைய அன்பைப் பெறுவதானென்றும் அதனைப் பெறுதற்கு உபாயம் பாடங் கேட்பதாக அவர்கள் பாற் செல்வதுதானென்றும் தம்முள் நிச்சயித்துக் கொண்டு ஒருநாட் காலையிற் கையுறையேந்தி மிகுந்த வணக்கத்தோடு வர, சாந்தசிரோமணியாகிய பிள்ளையவர்கள் வந்தவர்களுடைய இயல்பை நன்றாக அறிந்திருந்தும் சிறிதும் வருத்தத்தைப் புலப்படுத்தாமல் அங்கீகரித்த மற்ற மாணாக்கர்களோடு சேர்த்து அவர்களுக்குப் பாடஞ் சொல்லி வந்தார்கள்; வருகையில் அவ்விருவர் செய்துள்ள தீங்குகளையெல்லாம் நினைந்து நினைந்து மனம் பொறாதவர்களாகிய மாணவர்களிற் சிலர் இடையிடையே வலிந்து கேள்விகளைக் கேட்டு அவ்விருவரையும் விழிக்கச் செய்து அடிக்கடி வருத்துவாராயினர்; என்ன சொல்லியும் அவர்கள் கேட்கவில்லை; அதனைக் கண்ட பிள்ளையவர்கள் ஒரு நாள் திடீரென்று தனியே சுப்பிரமணிய தேசிகரவர்களிடம் சென்று அதனை விண்ணப்பிக்க அவர்கள் உடனே பழைய மாணாக்கர்களை மட்டும் அழைப்பித்து நன்றாக விசாரித்துப் பல நியாயங்களை எடுத்து

* 'பிள்ளையவர்கள்' என்றது மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்களை, இது விருத்தியுரையப் பாடங்கேட்டதற்கு, ரு-வருடங்களுக்கு முன்பு நடைபெற்ற செய்தி.

மொழிந்ததன்றி, ''ஒருவன் தனக்குப் பரம விரோதியாக இருந்தாலும் தன்பால் வருவானாயின் அவனை ஏற்றுக் கொண்டு முன்னினும் நன்கு மதித்துப் பாராட்ட வேண்டு மென்பது பெரியோருடைய கொள்கை; இதனை அறியாமல் நீங்கள் வழுவியொழுகுவீர்களாயின் உங்களை மட்டு மன்றி உங்கள் ஆசிரியரையும் உலகம் அவமதிக்கும்; 'இணரெரி தோய்வன்ன வின்னா செயினும், புணரின் வெகுளாமை நன்று' என்னும் திருக்குறளை அறியீர்களோ? அதற்குச் சங்கர நமச் சிவாயரெழுதிய அருமையான உரையை நோக்குங்கள்'' என்று கூறி உடனே விருத்தியுரையில் அந்தப் பகுதியைப்(சூ. ௯சா0 உரை)படிப் பிக்கச் செய்து இடையிடையே வேண்டியவற்றையுஞ் சொல்லி விளங்கச் செய்தார்கள்; மாணாக்கர்கள் அவர்களுடைய முகமதி யினின்றும் தோன்றிய வசனாமுதத்தை அருந்தி மிகுந்த சாந்த முற்றுச் சென்று அவ்விருவரோடும் நட்புற்று மனங் கலந்து ஒழுகுவாராயினர். இதனைப் பார்த்துக் கொண்டேயிருந்த பிள்ளையவர்கள், ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரவர்களுக்கிருந்த ஒப்புயர் வற்ற கல்விப் பெருமையையும் பிறரை நல்வழிப் படுத்தற்குரிய சொல்லாற்றல் முதலியவற்றையுமெண்ணித் தம்முள் வியந்து மகிழ்ந்து மனமுருகி,

> ''சிந்தா மணியே செழுங்காம தேனுவே
> சந்தாபந் தீர்க்குந் தனிச்சுடரே-நந்தா
> வரமணியே கோமுத்தி வாழ்வே யருட்சுப்
> பிரமணிய தேசிகப்பெம் மானே.''

(சுப்பிரமணியதேசிகர் நெஞ்சு விடுதூது, ௯0அ-கூ.)

என்று பாராட்டிப் பணிந்து விடை பெற்றுச் சென்றார்கள். நிற்க,

அச்சிடப் பெற்று வழங்கும் நன்னூல் விருத்தியுரையில் இன்ன இன்ன பகுதி இன்னார் இன்னாரியற்றியதென்று விளங்காமை யாலும் ஒருவரியற்றியவை மற்றொருவராலியற்றப்பட்டன வாகத் தடுமாறுதல்களை அடையவுங் கூடுமாதலாலும் முதலாவ தாகிய சங்கர நமச்சிவாயருரை தனியே பதிப்பிக்கப் படுமாயின், அவருடைய ஆற்றல் தனியே நன்கு விளங்குமென்று சுப்பிரமணிய தேசிகரவர்கள் சொன்னதுமுண்டு. அதனால் இவ்வுரையைத் தனியே பதிப்பிக்கத் துணிந்தேன்.

பல வருடங்களுக்கு முன்னமேயே இப்பணியை நான் செய்ய வேண்டியவனாகவிருந்தும் மேற்குறித்த அவ்வேட்டுப் புத்த கத்தில் முதலேடு இல்லாமையாலும், பின்பு கிடைத்த சுவடிகளி

லும் அவ்வாறே அவ்வேடு காணப்படாமையாலும் அவ்வேடுள்ள பிரதியைப் பெற்ற பின்பே இம்முயற்சியை மேற்கொள்ள வேண்டுமென்றெண்ணித் தாமதித்து வந்தபொழுது, சமீபத்திற் காலஞ் சென்ற திருநெல்வேலிச் சொர்ணம் பிள்ளையென்பவராற் கிடைத்த ஆழ்வார் திருநகரி, அரங்கநாதகவிராயருடைய ஏட்டுப் பிரதியொன்றில் அவ்வேடு இருப்பக்கண்டு அதைப் பார்த்துப் பிரதி செய்து கொண்டும் ஏனைப் பாகங்களை ஒப்பிட்டும் ஒழுங்குபடுத்திக் கொண்டு அச்சிடலானேன்.'' நன்னூல்—சங்கர நமச்சிவாயர் உரை முன்னுரை பக். 2-5

அய்யரவர்கள் சங்கர நமச்சிவயர் உரையின் முதற்பதிப்பை 1925-இல் வெளியிட்டார்கள். இது அய்யரவர்களின் 38-ஆம் நூல் ஆகும். பின் இரண்டாம் பதிப்பை 1935-இல் வெளியிட்டார்கள். அதற்குப் பின் 1942-இல் ஒன்றும் 1953-இல் ஒன்றுமாக இரண்டு பதிப்புக்கள் அவர் மகன் சா. கலியாண சுந்தரையரால் வெளியிடப்பட்டுள்ளன.

## சங்கர நமச்சிவாயர் உரையில் அய்யரவர்களுக்கிருந்த ஈடுபாடும் அன்பும்

சங்கர நமச்சிவாயர் உரையின் முதற் பதிப்பு நிறைவேறுதற்கு முன்பு மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் பல அன்பர்கள் ஒரு மகாசபை கூட்டி அய்யரவர்களுக்கு ஒரு கிழி அளித்துச் சிறப்பித்தனர். அதுபோன்றே இரண்டாம் பதிப்பு வெளியாவதற்கு முன்பு தமிழ் வழங்கும் பல இடங்களிலும் சென்னையிலும் உள்ள அன்பர்கள் அய்யரவர்களின் எண்பதாம் பிராய நிறைவைக் கருதிப் பல வகையிற் பாராட்டி நிதியளித்தனர். (நன்னூல்-சங்கர நமச்சிவாயர் உரை, இரண்டாம் பதிப்பு, 1935 முகவுரை பக் X) இதனால் இந்நூலின் கண் அய்யரவர்கட்கு மிக்க ஈடுபாடு உண்டு (ஷை-சா. கலியாண சுந்தரையர் குறிப்பு. பக். II). அது மட்டுமின்றி அய்யரவர்களுடைய வாழ்வியல் நோக்கையும் பாதித்த நூல் இது என்பதை அவர் மகனே கீழ்க் கண்டவாறு கூறுவார்:

''அன்றி, என் தந்தையாரவர்கள் தமது வாழ்க்கையில், ''இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால், என்ன பயத்ததோ சால்பு'' என்னும் அருமைத் திருக்குறளின் கருத்தைத் தம் முக்கியமான கொள்கையாக வைத்துக் கொண்டவர்கள். இதற்குக் காரணம் ஸ்ரீ மேலகரம் சுப்பிரமணிய தேசிகரவர்கள், ஒரு சந்தர்ப்பத்தில் இந்நூலின் 360-ஆம் சூத்திரவுரையில் சங்கரநமச்சிவாயர், ''இணரெரி...நன்று'' என்னும் குறளுக்கு

அருமையாக எழுதியுள்ள பகுதியைச் சுட்டிக் காட்டி விளக்கிய தேயாகுமென்று அவர்கள் என்னிடம் அடிக்கடி சொல்லியதுண்டு இதனாலும் நன்னூலின் சங்கரநமச்சிவாயருரையில் அவர்களுக் கிருந்த தனியன்பு தெரியவரும்.'' டை.பக். 11.

இவ்வாறு நீண்டநெடுங்காலம் நினைந்து தம் கருத்தைப் பாதித்த நூலுக்குத் தனியாக ஒரு செம்பதிப்பு வெளிக்கொணர அய்யரவர்கள் முடிவு செய்தார்கள்.

## முதற்பதிப்பு

### நூலமைப்பு: முதற்பக்கம்

உ கணபதிதுணை பவணந்தி முனிவரியற்றிய **நன்னூல் மூலமும் சங்கரநமச்சிவாயருரையும்.** இவை சிதம்பரம் ஸ்ரீ மீனாக்ஷி தமிழ்க் காலேஜ் பிரின்ஸிபாலாகிய உத்தமதானபுரம் மஹா மஹோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி **வே. சாமிநாதையரால்** பரிசோதித்து நூதனமாக எழுதிய பலவகைக் குறிப்புக்களுடன் சென்னை: கமர்ஷியல் அச்சுக் கூடத்திற் பதிப்பிக்கப் பெற்றன. குரோதன ஞு புரட்டாசி மீ 1925, Copy right Registered விலை 2-0-0

### உள்ளுறை

இப்புத்தகத்திலடங்கியவை என்ற தலைப்பில் நூலுள்ளுறை கீழ்க்கண்டவாறு அமைகிறது:

## பொற்கிழியளிக்கப் பொருளுதவியோர்

உள்ளுறையைத் தொடர்ந்து அய்யரவர்களுக்கு 8.6.1925-இல் மதுரையில் பொற்கிழி அளித்தற்கு உதவிய மகோபகாரிகள் ஐம்பத்தைவரின் பெயர்கள் இரண்டு பக்கத்தில் அமைந்துள்ளன.

## முகவுரை

உ. கணபதி துணை, முகவுரை, திருச்சிற்றம்பலம், தேவாரம் 'நீதியை......உய்வனோ' என்று தொடங்கும் முன்னுரையில் கட்டுரை என்பதன் கீழ் 'அறமுதனான்கின்......நன்னூற் பெருமையை நவில்வார் யாரே?' என்ற பாடல் காணப்படுகிறது. இப்பாடல் சில பாடவேறுபாடுகளுடன் அய்யரவர்களின் நன்னூல் மயிலைநாதர் உரைப்பதிப்பு முன்னுரையிலும் காணப் படுகின்றது. இது அய்யரவர்கள் இயற்றிய பாடலாகத் தோன்றுகிறது.

முகவுரையில், நன்னூல் உரைகள் ஏழு பற்றிய குறிப்பு, சங்கர நமச்சிவாயர் உரை தனியே அய்யரவர்களுக்குக் கிடைத்ததும் பிறவுமாகிய வரலாறுகள், உரைப் பதிப்பின் நோக்கம், பிரதி உதவியோர், பதிப்பமைப்பு, உடனிருந்தும் பொருள் கொடுத்தும் உதவியோர், ஊக்குவித்தோர், 'அவையடக்கம் முதலியன அடங்கியுள்ளன. இறுதியில் சிதம்பரம், 28. 9. 25 என்று கையெழுத்திட்டுள்ளார் அய்யர்.

## நூற்பதிப்பிற்கு உதவிய பிரதிகள்

வழக்கமாக அய்யர் பதிப்புக்களில் காணப்படும், உதவிய பிரதிகள் பற்றிய பட்டியல் இதில் காணப்படவில்லை. எனினும் முகவுரையிலிருந்து 1. திருவாவடுதுறை மடத்துப் பிரதி, 2. திருநெல்வேலிச் சொர்ணம் பிள்ளை என்பவராற் கிடைத்த

ஆழ்வார் திருநகரி, அரங்கநாத கவிராயருடைய் ஏட்டுப் பிரதி என்ற இரண்டு ஏட்டுப் படிகள் பற்றி அறிய முடிகிறது. ஏனைய படிகளின் விவரம் தெரியவில்லை.

## ஏட்டின் நிலை

திருவாவடுதுறைப் பிரதியிலும் ஏனைப் பிரதிகளிலும் முதலேடு கிடைக்கவில்லை. ஆழ்வார் திருநகரி ஏட்டில் அது கிடைத்தது. மேலும் ஏட்டின் நிலை பற்றி அய்யரவர்கள் கூறுவதாவது:

''உரையிலும் மேற்கோள்களிலும் சில பகுதிகள் திருத்தப் படவேண்டிய நிலைமையிலிருந்தும் உரையாசிரியர் காலத்து வழங்கிய வண்ணம் புலப்பட வேண்டுமென்பதற்காகவே அவை திருத்தப்படவில்லை.

சில மேற்கோள்களை வசனமென்றாவது செய்யுளென் றாவது நிச்சயிக்கக் கூடவில்லை; அவை நாளடைவில் விளங்கலா மென்றெண்ணுகிறேன்.'' முகவுரை—பக். 6

## பாடவேறுபாடுகள்

பிரதிகளை ஒப்பிட்டுப் பாட வேறுபாடுகளை அவ்வப் பக்கத்தில் (பி-ம்) என்று எண்ணிட்டு அமைத்துள்ளார் அய்யர். சுமார் அறுநூறாண்டுப் பழமையுள்ள மயிலைநாதர் உரைக்கு முதற்பதிப்பில் 1384 பாட வேறுபாடுகளை அய்யர் காட்டி யுள்ளார். ஆனால் சுமார் 200 ஆண்டுப் பழமையுள்ள இவ் வுரையின் முதற் பதிப்பில் 74 பாட வேறுபாடுகள் (மூலத்தில் 41, உரையில் 33) காணப்படுகின்றன. இரண்டாம் பதிப்பில் 88 பாட வேறுபாடுகளைத் தொகுத்துள்ளார் அய்யர். அய்ய ரவர்கள் இரண்டாம் பதிப்பைப் பற்றிப் பின்பு பேசும்போது, அய்யரவர்கள் கொண்ட மூலபாடத்தையும் மற்றவர்கள் கொண்ட மூல பாடத்தையும் பற்றி விரிவாக ஆராயலாம்.

## நூல் முகப்பிலமையும் பிற பகுதிகள்

முகவுரைப் பகுதியைத் தொடர்ந்து நூலாசிரியர் வரலாறு, சீயகங்கன் வரலாறு ஆகியவை மயிலைநாதர் உரைப்பதிப்பில் கண்டபடியே சிற்சில மாற்றங்களுடன் காணப்படுகின்றன. பவணந்தி பற்றிய கொங்கு மண்டல சதகச் செய்யுள் தந்த தி. அ. முத்துசாமிக் கோனார் பற்றிய குறிப்பு இதில் இல்லை.

உரையாசிரியர் வரலாறு என்ற பகுதியில் சங்கரநமச்சிவாயர் வரலாறு, அவர் இவ்வுரை செய்யக் காரணம், உரையைச் செய்

வித்தவர், சங்கர நமச்சிவாயர் உரைச்சிறப்பு முதலியவை காணப்படுகின்றன. இறுதியில் ''ஆவியந்தென்றல்'' என்று தொடங்கும் திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணப் பாயிரச் செய்யுள் அமைகிறது.

## சுருக்க விளக்கம்

இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய நூற் பெயர்கள் முதலிய வற்றின் குறிப்பகராதியில் 96 சுருக்க விளக்கங்கள் காணப்படு கின்றன. அதன் அடிக்குறிப்பில் 'நூலுறுப்புக்களின் முதற் குறிப்புக்கள் விரிவஞ்சி விடுக்கப் பட்டன' என்ற செய்தி காணப் படுகின்றது.

## நூல் (பக். 1-252)

சூத்திரங்களின் தலைப்பில் அதன் கருத்தை விளக்கும் சொல்லோ தொடரோ அமைக்கப்பட்டுள்ளன. பிரதிபேதம், மேற்கோள்களின் ஆகரம், சில ஒப்புமைக் குறிப்புக்கள் முதலி யவை அவ்வப் பக்கத்தில் அடிக்குறிப்பாய் உள்ளன. சூத்திரமும் உரையும் வேறுவேறு அச்செழுத்தில் அச்சடிக்கப்பட்டுள்ளன. நூலின் பக்கங்கள் அராபிய எண்களில் உள்ளன. சூத்திர எண்கள் தமிழ் எண் முறையில் மொத்தத்தில் தொடர் எண்ணா கச் சூத்திரத்தின் இடதுபுறத்தும் இயலளவில் தொடர் எண்ணாக உரை இறுதி வலது கோடியிலும் அமைந்துள்ளன.

## இறுதிப் பகுதிகள்

சூத்திர முதற் குறிப்பகராதியில் சூத்திரங்கள் அமையும் பக்க எண்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இதை அடுத்து அமையும் பகுதிகள் பற்றி அய்யரவர்கள் முகவுரையில் கூறுவதாவது:

''அரும்பத முதலியவற்றின் அகராதி, விளங்கா மேற்கோள கராதி, குறிப்புரையென்பவை இப்புத்தகத்தினிறுதியில் முறையே சேர்க்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள், அரும்பத முதலியவற்றின் அகராதியில் மூலமும் உரையிலும் காணப்படும் அரும்பதங்களும் அருந்தொடர்களும் அரிய விஷயங்களும் பிறவும் தொகுக்கப் பெற்றுள்ளன; விரிவஞ்சி எல்லாச் சொற் களுக்கும் அதிற் பொருளெழுதவில்லை. இந்தப் புத்தகத்தைக் கொண்டு வேறு நூல்களையும் அவற்றைக் கொண்டு இதனையும் ஆராய்ந்து உண்மை காணுவதற்கு இவ்வகராதி கருவியாயிருக்கு மென்பது என் கருத்து; விளங்கா மேற்கோள்களுள் பின்னர் விளங்கியவை சில.

குறிப்புரையில், இவ்வுரையாசிரியரால் மறுக்கப்பட்டுள்ள பகுதிகள் இன்ன ஆசிரியர்களுடைய கொள்கைகளென்பதை அறிவித்தும் அரியவற்றைப் புலப்படுத்தியும் உதாரணமாகக் காட்டப்பட்டவற்றுள் மேற்கூறிய அகராதியிற் பொருளெழுதப் படாத கடினமான சொற்களுக்குப் பொருளெழுதியும் அரியவற்றிற்குப் பிரயோகங் காட்டியும் ஆங்காங்கு உரையில் எடுத்தாளப்பட்டுள்ள நன்னூற் சூத்திரங்களின் முற்பகுதிகளாக வந்துள்ளவற்றைச் சூத்திர முதற்குறிப்பகராதியால் தெரிந்து கொள்ளலாமென்று விடுத்துப் பிற்பகுதிகளுக்கு மட்டும் இடத்தைத் தெரிவித்தும் பதிப்பித்துள்ளேன்.''-முகவுரை பக்.5-6

விளங்கா மேற்கோளகராதியில் 206 விளங்கா மேற்கோள்கள் காணப்படுகின்றன. விளங்கா மேற்கோள்கள் பின்னர் விளங்கியவையும் பிற நூல்களில் மேற்கோளாய் அமைபவையும். தக்க குறிப்புக்களுடன் அமைக்கப்பட்டுள்ளன. குறிப்புரைப் பகுதி அரிய ஆராய்ச்சிக் கருத்துக்கள் அடங்கியதாகும்.

இந்நூலின் குறிப்புரை எழுதிய காலத்து உடனிருந்து வேண்டியவற்றை ஆராய்ந்து எழுதி உதவியவர் சிதம்பரம் ஸ்ரீ மீனாக்ஷி தமிழ்க் காலேஜ் தமிழ்ப் பண்டிதர் சமுகரங்கபுரம், சிரஞ்சீவி, வே. வேங்கடராஜுலு ரெட்டியாரவர்களாவார்.

## முதற்பதிப்புக் கைப் பிரதியில் அய்யரவர்கள் செய்து வைத்துள்ள திருத்தங்கள்

வே. சாமிநாதன் என்று பெயரெழுதிய அய்யரவர்களுடைய கைப்பிரதி ஒன்று உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தி லுள்ளது. அதில் அய்யரவர்கள் செய்யவேண்டிய திருத்தங்களை யும் சேர்க்கவேண்டிய குறிப்புக்களையும் எழுதி வைத்துள்ளார். அவற்றிலுள்ள குறிப்புக்களையும் இரண்டாம் பதிப்பையும் ஒப்பிட்டபோது சில குறிப்புக்கள் சேர்க்கப்பட்டிருப்பதையும் சில குறிப்புக்கள் சேர்க்காது விடப்பட்டுள்ளதையும், சில சொற்றொடர் முதலியன மாற்றிவிளக்கமாக எழுதப்பட்டுள்ளதை யும் காண நேர்ந்தது. அய்யரவர்கள் ஒன்றுக்கு மேற்பட்ட கைப் பிரதிகள் வைத்திருப்பார் என்று தோன்றுகிறது. மறுபதிப்பிற்கு அச்சுக்குக் கொடுக்குமுன் தம் கைப்பிரதிகளிலும் பிற இடங்களிலும் குறித்து வைத்துள்ளவைகளைத் தொகுத்து அச்சுக்கு ஒரு பிரதி தயாரித்திருப்பார் என்று தோன்றுகிறது. மறு அச்சுக்குள்ள படி கையெழுத்துப் படியா அல்லது முன் அச்சுப்படியே திருத்தப்பட்டதா என்று தெரியவில்லை. மேலும் முதற் பதிப்பிற்கு அவர் தயார் செய்தபடி, மற்றும் பதிப்பு

முயற்சியில் தயாரித்த படிகள், பணிகள் முதலியவற்றை ஒப்பு நோக்கி ஆராய்ந்தால் அய்யரவர்களின் வேலைமுறை பற்றித் தெளிவாகத் தெரிந்து கொள்ள இயலும்.

### சேர்க்கப்பட்ட குறிப்புக்கள்

சூத். 101 கஃஃஃறென்னும்
சுஃஃஃறென்னும்

சூத். 189 ...னகரவொற்று ரகர வொற்றாக இரண் டென்னுமெண்ணினது ணகர வொற்றும்...

### விளங்கா மேற்கோளகராதியில் பின்பு விளங்கிச் சேர்க்கப் பட்டவை

சூத். 172 சுறவக் கோட்டன்ன, நற். 19

சூத். 310. சேஎய், முருகு. 271

சூத். 395. தீத்தீத்தீ-தண்டி சூ. 104 (அய்யர் குறிப்பில் 'ஒரு வரொருவர் மேல்' தண்டி என்றே உள்ளது.)

சூத். 255. வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப தொல். 117 என்று குறிப்பில் உள்ளது. (இரண்டாம் பதிப்பில் தொல். செய். சூத். 110; பு. வெ. 226 என்று மாறியுள்ளது.)

### இடம் பெறாத குறிப்புக்கள்

சூத். 108. உரை... ''தானே ஈறாதலன்றிக் குற்றுயிர் அளபினா மீறாமென உம்மை கொடாதொழிந்தார், உயிர் கழிந்த வுடம்பை, ''படுமகன் கிடக்கை காணூஉ'' (புறநா. 271) என்றாற்போல. அறிகுறி மாத்திரையாய் நின்றதனை இங்ஙனம் குற்றுயிரென்றதன்றி அஃது ஒரெழுத்தன்றாகலின்'...என்ற பகுதி விருத்தியுரையில் இல்லை எனக் குறிப்பெழுதி வைத்துள்ளார் அய்யர். இக்குறிப்பு இரண்டாம், மூன்றாம் பதிப்புக்களில் இடம் பெறவில்லை. ஆறுமுக நாவலர் பதிப்பில் இப்பகுதி இல்லை. ஆனால் தில்லையம்பூர் சந்திரசேகர கவிராஜ பண்டிதரின் நன்னூற் பதிப்பில் இது காணப்படுகிறது. ச. தண்டபாணி தேசிகர், விருத்தியுரை ஏடுகளில் இப்பகுதி காணப்படுவதாகக் குறிப்பிடுவார்.

சூத். 336. மரபின-மயிலைநாதர் பாடம் 336... ஏவற்கண் வரும் எழுத்துப் பேறென்பதூஉம் அந்நிலை மரபின்

மெய்யென விதந்தமையின் அஃது அம்மொழியினுதி மெய்யன்றென்பதூஉம் பெற்றாம் என்பதை அந்நிலை மரபின் மெய்யென விதந்தமையின் அஃது அம்மொழியினாதி மெய்யன்றென்பதூ உம், ஏவற்கண் வரும் எழுத்துப் பேறென்பதூ உம் பெற்றாம் என்று எழுதிவைத்துள்ளார் அய்யர். இம் மாற்றம் பின் பதிப்புக்களில் செய்யப்படவில்லை.

## விளங்கா மேற்கோளகராதியில் பின் விளங்கியும் சேர்க்கப் படாதவை

சூத். 163. செல்வுழிச் செல்க, புறநா. 93

சூத். 378. மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா திருவாசகம்.

## குறிப்புரையில்-இரண்டாம் பதிப்பில் அடிக்குறிப்பில்

சூத். 145. என்றிசினோர்-சிவஞானபா. சூ. 1

## மாற்றம் பெற்ற குறிப்புக்கள்

சூத். 447. அடிக்குறிப்பு : நவீன ஆராய்ச்சியாளர் எறும்புக்குக் கண்ணுண்டென்பர், என்ற குறிப்பு 449 சூத்திர அடிக் குறிப்பில்-கீழ்க்கண்டவாறு விரிவுபெற்றுள்ளது.

"4. ஒன்று முதல் ஐந்தறிவுவரை முறையே கூறப்பட்ட உயிர்களுக்குப் பிற அறிவுகளிற் சிலவும் பலவும் உண் டென்பது நவீன விஞ்ஞான சாஸ்திர ஆராய்ச்சியாளர் கொள்கை."

சூத். 460. உரை. அ. கு. 'சூடாமணியை உரையாசிரியர் கூறியது காலங் கருதாமையைப் புலப்படுத்துகிறது என்ற குறிப்பு,

'பிங்கலத்தை மட்டும் மயிலை நாதர் கூறினார் சூடாமணியை இங்கே கூறியது உரையாசிரியர் கருத்தாகக் கொள்க, நூலாசிரியர் காலத்திற்கு அந்நூல் பிற்பட்டதாகலின்'—

என மாறியுள்ளது. சூத்திர அடைவுப் பாடல்களின் கீழ்க்குறிப் பில் சிறப்புப்பாயிரம் பொதுப் பாயிரச் சூத்திரங்களைத் தள்ளி எண்ண வேண்டும் என்று எழுதி வைத்துள்ளார். இது விரிவான குறிப்பாக அடுத்த பதிப்பில் மாற்றம் பெறுகிறது.

இதை ஒத்த பல குறிப்புக்களை ஒப்பு நோக்கினால் அய்யர வர்கள் பதிப்பு முயற்சிகள் பற்றி இன்னும் பல கருத்துக்கள் வெளியாகக் கூடும்.

## இரண்டாம் பதிப்பு

முதற்பக்கம் : முதற் பக்கத்தில் அய்யரவர்கள் மீனாட்சி கல்லூரிப் பிரின்சிபாலாக இருந்த செய்தி இல்லை. நூல் சென்னை லா ஜர்னல் அச்சுக் கூடத்திற் பதிப்பிக்கப் பெற்றது. பில வருடம் பங்குனி மாதம், 1935. விலை 3-0-0 மொத்தப் பக்கம் XXXVI + 528. உள்ளுறையில் பிழையும் திருத்தமும் இரண்டாவ தாகக் கொடுக்கப்பட்டுள்ளது. அது போன்று அரும்பத முதலியவற்றின் அகராதி விளங்கா மேற்கோள் அகராதிப் பின் இறுதியில் வைக்கப்பட்டுள்ளது.

## முகவுரை

இரண்டாம் பதிப்பிற்கு 4.4.1935 'தியாகராஜ விலாசம்,' திருவேட்டீசுவரம் பேட்டை' என்ற முகவரியிட்டு ஒரு முன் னுரை எழுதியுள்ளார் அய்யரவர்கள். முதற்பதிப்பு முன்னு ரையே தக்க மாற்றங்களுடன் இரண்டாம் பதிப்பு முன்னுரை யாக அமைகிறது.

முகவுரையில் திருச்சிற்றம்பலம் என்ற சொல் கட்டுரை என்ப தற்கு மேலும் இரண்டாம் முறை அமைக்கப்பட்டுள்ளது.

முகவுரையின் அகத்துப் பிள்ளையவர்கள் என்பது—ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் என மாற்றப் பட்டது. அதற்குத் தக அடிக்குறிப்பு நீக்கப்பட்டு ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம், இரண்டாம் பாகம், பக்கம் 129-130 பார்க்க என அமைக்கப்பட்டுள்ளது. (மூன்றாம் பதிப்பில் பக்கம் 129-130 என்பது நீக்கப்பட்டுள்ளது.)

ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரை வியந்து பிள்ளையவர்கள் பாடிய வெண்பா இம்முகவுரையில் நீக்கப்பட்டுள்ளது. நூலமைப்பில் செய்த மாற்றத்திற்கேற்பச் சொற்றொடர்கள் முன்பின் மாற்றி யும் கூட்டியும் குறைத்தும் அமைக்கப்பட்டுள்ளன.

இப்பதிப்பில் செய்த மாற்றங்களை அய்யரவர்கள் கீழ்க் கண்டவாறு உரைப்பார்:

''முதற்பதிப்பைக் காட்டிலும் இப்பதிப்பில் அமைத்த திருத்தங்களும் சேர்த்த விஷயங்களும் பல பிரதிபேதங்களும் உரையிலுள்ள மேற்கோள்களுள் இடம் விளங்கியவையும் முதற்பதிப்பில் தனியே பதிப்பிக்கபெற்ற குறிப்புரைகளும் இப்பதிப்பில் அவ்வப்பக்கங்களில் உரிய இடங்களில் அடிக் குறிப்புக்களாகவே சேர்க்கப்பட்டுள்ளன. அக்குறிப்புக்களில் இவ்வுரையாசிரியரால் மறுக்கப்பட்டுள்ள பகுதிகள் இன்ன இன்ன ஆசிரியர்களுடைய கொள்கைகளென்பதை அறிவித்தும் உதாரணமாகக் காட்டப்பட்டவற்றுள் மேற்கூறிய அகராதியிற் பொருளெழுதப்படாத கடினமான சொற்களுக்குப் பொருளெழுதியும் அரியவற்றிற்குப் பிரயோகங்காட்டியும் உள்ளேன். படிப்பவர்களுடைய அனுகூலத்தை எண்ணி இப்பதிப்பின் மூலமும் உரையும் பெரிய எழுத்திற் பதிப்பிக்கப்பெற்றன.

—இரண்டாம் பதிப்பு (1935) முகவுரை, பக். IX-X

முதற்பதிப்பில் அய்யரவர்களுக்குப் பொருளுதவி, முதலியன செய்தவர்களுக்குத் தனித்தனியாக நன்றி கூறிச் சில மேற்கோள் பாடல்களும் சேர்த்திருந்தார். அவற்றை எல்லாம் நீக்கி இப் பதிப்பில் சுருங்கிய முறையில் பொதுவாக நன்றி கூறியுள்ளார் அய்யர்.

**நூலாசிரியர் வரலாறு** என்ற தலைப்பு **பவணந்தி முனிவர் வரலாறு** என்று மாற்றப்பட்டுள்ளது. செய்திகளில் மிகுதியானப் மாற்றம் இல்லை. **சீயகங்கன் வரலாறு** என்னும் பகுதியில் அவன் தந்தை பெயர் சோழேந்த்ர சிம்ஹனென்ற விவரம் சேர்க்கப் பட்டுள்ளது. **நூல்** என்பதன் கீழுள்ள கட்டுரையில் **தமிழ் விடுதூதுச்** செய்யுளும், **சிரகிரிக் கோவைச்** செய்யுளும் சேர்க்கப் பட்டுள்ளன.

**உரையாசிரியர் வரலாறு**: என்பது சங்கர நமச்சிவாயர் வரலாறு என்று மாற்றப் பட்டுள்ளது. சங்கர நமச்சிவாயர் கல்வியாற்றய பகுதி சற்று மாற்றம் பெற்றுள்ளது. சங்கர நமச்சிவாயர் உரை பற்றிய ஆராய்ச்சியை விரிவாக்கி **உரை ஆராய்ச்சி** என்று அமைத் துள்ளார் அய்யரவர்கள். அதில், தொல்காப்பியம், திருக் கோவையார், 'சைவசிகாமணி; வடமொழியறிவு, உவமைகள், நீதிகளும் அரிய செய்திகளும் சான்றோர்பாலுள்ள மதிப்பு ஆகிய துணைத்தலைப்புக்களின் கீழ் சங்கர நமச்சிவாயரின் புலமைத் திறத்தையும், உரைத் திறத்தையும் வரிவாக ஆராய்ந்துள்ளார் அய்யரவர்கள்.

## நூலமைப்பு

முதற்பதிப்பைவிட இப்பதிப்பில் மூலமும் உரையும் பெரிய எழுத்திற் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. முதற்பதிப்பில் இறுதியி லமைந்த குறிப்புரைகள் அவ்வப்பக்கங்களில் அடிக்குறிப்புக் களாக, பிரதிபேதம், மேற்கோள் விளக்கங்களுடன் சேர்த்து அமைக்கப்பட்டுள்ளன.

## பாட வேறுபாடுகள்

முதற்பதிப்பில் 74 பாட வேறுபாடுகள் காட்டப்பட்டுள்ளன. இரண்டாம் பதிப்பில் அது 88 ஆகும்; புதிய ஏட்டுச் சுவடிகளைப் பார்த்ததாகத் தெரியவில்லை. சில இடங்களில் மயிலை நாதர் கொண்ட பாடங்களும் (5, 19, 207, 397, மேலும் பார்க்க 442) காட்டப்படுகின்றன. அய்யரவர்கள் சங்கர நமச்சிவாயர் உரை மட்டுமிருந்த ஏடுகளில் கண்ட பாட வேறுபாடுகளை மட்டும் தொகுத்துத் தந்திருப்பதாகத் தோன்றுகிறது. (அல்லது சங்கர நமச்சிவாயர் உரை மட்டுமிருந்த ஏட்டுச் சுவடிகளில் கண்ட வற்றை மூலபாடமாகக் கொண்டு, விருத்தியுரை ஏடுகள். பதிப்புக்களில் கண்டவற்றைப் பாடவேறு பாடாகக் கொடுத் தாரா என்பது விளங்கவில்லை). சங்கர நமச்சிவாயர் உரையும் சிவஞான முனிவர் திருத்தமும் அடங்கிய விருத்தியுரை ஆறுமுக நாவலர், தில்லையம்பூர் சந்திரசேகர கவிராச பண்டிதர் முதலியோரால் அய்யரவர்களுக்கு முன்பே பதிப்பிக்கப் பெற் றுள்ளது. இவற்றை ஒப்பிட்டுப் பார்த்த போது, சில இடங் களில் அய்யரவர்கள் கொண்ட மூலபாடம் வேறாகவும், மற்ற வர்கள் கொண்ட மூலபாடம் வேறாகவும் காணப்படுகின்றது இதற்குச் சிவஞான முனிவரின் திருத்தங்களும் அவர் கொண்ட பாடங்களும் காரணமாக அமைந்தனவா அல்லது வேறு என்ன காரணம் என்பது ஆராய்ச்சிக்குரியதாகும். இதற்கு விருத்தியுரை உள்ள சுவடிகள், சங்கரநமச்சிவாயர் உரை மட்டுமுள்ள சுவடி கள் எனத் தொகுத்து வைத்துக்கொண்டு ஆராய்வது இன்றிய மையாததாகும். நன்னூல் விருத்தியுரையை மட்டும் ஆராய்ந்து ச. தண்டபாணி தேசிகர் ஒரு பதிப்பு வெளியிட்டுள்ளார். இவற்றை எல்லாம் வைத்து ஒவ்வொருவரும் கொண்ட மூல பாடத்தில் வேறுபாடு கண்ட இடங்களை மட்டும் இங்குத் தொகுத்துத்தந்துள்ளேன்.

| வரிசை எண் | சூத்திர எண் | அய்யர் கொண்டமூல பாடம் | அய்யர் காட்டிய பாட வேறுபாடு | 1. ஆறுமுக நாவலர் 2. தில்லையம்பூர் சந்திர சேகர கவிராசபண்டிதர் 3. ச. தண்டபாணிதேசிகர் ஆகியோர் கொண்ட மூல பாடம் |
|---|---|---|---|---|
| 1 | 1 உரை | புகுந்தவர் | புகுந்தோர் | புகுந்தார் |
| 2 | 23 | பிறர்நூலானும் | புறநூலானும் பிறநூலானும் (மூன்றாம் பதிப்பு) | பிறநூலானும் |
| 3 | 91 உரை | வாழியவென்னெஞ்சு | வாழியநெஞ்சு | வாழியநெஞ்சு |
| 4 | 91 உரை | கூறினாரன்றே குறியே | கூறினார் அன்றேற் குறி...குறியே (மூன்றாம் பதிப்பு) | என்றார், இங்ஙனம் ஒலி பற்றிக் கூறும் வகையால் இருவர்க்கும் கருத்து ஒன்றேயாயினும், குறியே யென்றது......... |
| 5 | 92 உரை | நெஞ்சமிலைக்காண் | நெஞ்சமிலைகாண் | நெஞ்சமிலை காண |
| 6 | 92 உரை | பிறமகள் | குறமகள் | பிறமகள் |
| 7 | 95 | அளவொழி | அளபொழி | அளபொழி |
| 8 | 101 உரை | கஃஃஃறென்னும் (முதற்பதிப்பு) கஃஃஃறென்னும் சுஃஃஃறென்னும் (இரண்டாம் பதிப்பு) | கல்லென்னும் | கஃஃஃறென்னும் சுஃஃஃறென்னும் |
| 9 | 103 உரை | வீழி | வீளி | வீளி |
| 10 | 124 உரை | தார்புரவி | தார்ப்புரவி | 1: தாரப்புரவி 2: தார்ப்புரவி 3. தாரப்புரவி |
| 11 | 125 உரை | ஐகார ஔகாரம் போலிசைத்தலானும் | ஐகாரம் போலிசைத்தலானும் | சிவஞான முனிவர் உரைவேறு |

| | | | | |
|---|---|---|---|---|
| 12 | 129 உரை | புசி | பொசி | புசி |
| 13 | 137 உரை | கடந்தான் | கிடந்தான் | கிடந்தான் |
| 14 | 166 உரை | பூ | பழம் | பழம் |
| 15 | 173 உரை | உடம்பொடு (முதற்பதிப்பு<br>உடம்படு (இரண்டாம் பதிப்பு) | உடம்படு<br>உடம்பொடு | 1. உடம்பொடு<br>2. உடம்பாடு<br>3. உடம்பெடு |
| 16 | 194 உரை | நிலைமொழிக்கும் | வருமொழிக்கும் | நிலைமொழிக்கு |
| 17 | 290 உரை | சூவர்வாய் (குறுந். 300) (இரண்டாம் பதிப்பு | கிளவி | கிளவி |
| 18 | 290 உரை | கீழைத்தடி.மேலைத்தடி (இரண்டாம் பதிப்பு) | கீழத்தடி<br>மேலத்தடி | கீழைத்தடி,<br>மேலைத்தடி |
| 19 | 295 உரை | நிலைப்பானும் (நாலடி. 248) | நிறுப்பானும் | நிறுப்பானும் |
| 20 | 302 உரை | செல்வாய் | சொல்லாய் | செல்லாய் |
| 21 | 305 உரை | களிறவன் | களிறன்னான் | களிறன்னான் |
| 22 | 307 உரை | இரண்டாம் பதிப்பு<br>ஆடூஉ கூறாய்<br>பிதா கூறாய்<br>விளகொடியை | <br>ஆடூஉக்கூறாய்<br>பிதாக் கூறாய்<br>விளக்கொடியை | <br>ஆடூஉக்கூறாய்<br>பிதாக்கூறாய்<br>விளக்கொடியை |
| 23 | 307 உரை | அய்யாவோ | ஐயாவோ | ஐயாவோ |
| 24 | 307 உரை | எமக்கீங்கருள் | எமக்கருள் | எமக்கருள் |
| 25 | 320 உரை | காரியமாகிய | காரியமாக | காரியமாகிய |
| 26 | 336 உரை | மரபின் (இரண்டாம் பதிப்பு) | மரபின (மயிலைநாதர் பாடம்) | மரபின் |
| 27 | 344 உரை | காந்தளஞ் சிலம்பிற் சிறுகுடி.<br>காந்தள்வேலிச் சிறுகுடி - குறுந்தொகை 100இல் கண்ட மூல பாடம் | ... | காந்தளஞ்சிலம்பிற்சிறுகுடி. |
| 28 | 351 உரை | விளிப்பது பயிலுங் குறும்பர்<br>துந்துமியொடு இளிப்பயிரிமிருங் | ... | 1, 2 விளிப்பது பயிலுங்<br>குறும்பர் துந்துபியொடு |

| | | | | |
|---|---|---|---|---|
| | | குறும்பரந்தூம்பொடு, மலை படுகடாம் + 7இல் கண்ட மூலபாடம் | — | 3........துந்துபியொடு |
| 29 | 353 உரை | மன்றநகூஉப் பெயர்ந்தோளே | மன்னென நகூஉப் பெயர்ந்தோளே (அகம் 248: 16) கழகப் பதிப்பு | 1. மன்நகூப் பெயர்ந்தோளே<br>2, 3 மன்றநகூஉப் பெயர்ந்தோளே |
| 30 | 360 உரை | மிகவும் விசைத்தது | மிகவுமிசைத்தது | மிகவுமிசைத்தது |
| 31 | 392 உரை | புகுதக<br>சீவக சிந்தாமணிப் (2122) பாடமும் இதுவே. ஆனால் நச்சினார்க்கினியர் புகுதுக என உரை எழுதி ஒரு சொல் விழுக்காடு என்பார். | புகுதுக | 1, 2 புகுதுக<br>3. புகுதக |
| 32 | 412 | மற்றய | மற்றைய | மற்றைய |

இவ்வொப்பீட்டிற்கு ஆதாரமான பதிப்புக்கள்: ஆறுமுக நாவலரின் நன்னூல் மூலமும் விருத்தி உரையும் (பத்தாம் பதிப்பு 1974); தில்லையம்பூர்ச் சந்திர சேகர கவிராஜ பண்டிதர் பதிப்பித்த (ஆண்டு தெரியவில்லை 1871? விருத்தியுரை; ச. தண்டபாணி தேசிகரின் விருத்தியுரை (இரண்டம் பதிப்பு 1971).

மேலே கண்ட எடுத்துக்காட்டுக்களில் அய்யரவர்கள் கொண்ட மூலபாடம் மற்ற மூவர் கொண்டதினும் வேறாய் இருப்பதைக் காணலாம். மற்ற மூவரும் கொண்ட மூலபாடம் பெரும்பான்மை ஒன்றாக உள்ளது. மேற்கோட் செய்யுட்களில் மூலநூல்கள் காணப்படுவதினும் வேறான பாடங்கள் காணப்படுவதையும் நோக்குக.

## அடிக்குறிப்புக்கள்

அடிக்குறிப்பில் பிரதிபேதம் போக, மேற்கோள்களின் ஆகரமும், முதற்பதிப்பில் குறிப்புரையில் அமைந்த செய்திகளும் அமைந்துள்ளன. இரண்டாம் பதிப்பில் இவற்றின் எண்ணிக்கை 1348 (நூலின் முகவுரை முதலியவற்றில் அமையும் அடிக்குறிப்புக்கள் வேறு 20 ஆகும்) மூன்றாம் பதிப்பில் மேற்கோள்களின் ஆகரங்களை நூலினகத்தே அமைத்துவிட்டனர். குறிப்புரைச் செய்திகள் மட்டுமே அடிக்குறிப்பாக அமைந்துள்ளன. இத்தகைய அடிக்குறிப்புக்களின் எண்ணிக்கை மட்டுமே 723 ஆகும். இதிலிருந்து சங்கரநமச்சிவாயர் உரைக்குக் கொடுக்கப்பட்டுள்ள குறிப்புரைகளின் விரிவு விளங்கும். மேலும் நன்னூல் மயிலைநாதர் உரைக்குரிய குறிப்புரை அடிக்குறிப்புக்களை ஒப்பு நோக்கும் போதும் இவ்வுரைக்கு எழுதப்பட்ட அடிக்குறிப்புக்களின் விரிவும் சிறப்பும் நன்கு விளங்கும்.

## நூலின் பிற்பகுதிகள்

முன்பே குறிப்பிட்டபடி விளங்கா மேற்கோளகராதி, அரும்பத முதலியவற்றின் அகராதிக்கு முன்பு வைக்கப்பட்டுள்ளது. ''முதற்பதிப்பில் காட்டப்பட்ட விளங்கா மேற்கோள்களிற் சில பின்பு நாளடைவில் விளங்கின. இப்பதிப்பிலும் அப்பால் விளங்கிய சிலவற்றிற்கு இடமும் வேறு சிலவற்றிற்குப் பிற உரையாசிரியர்களால் எடுத்தாளப்பட்ட இடமும் மேற்படி அகராதியிற் காட்டப்பட்டுள்ளன.'' என்பார் அய்யர் (இரண்டாம் பதிப்பு முகவுரை) அரும்பதம் முதலியவற்றின் அகராதியில் பெரிய மாறறங்கள் செய்யவில்லை. எல்லா அகராதிகளிலும் வருமிடங்கள் பக்க எண்களிலேயே காட்டப்பட்டுள்ளன,

## மூன்றாம் பதிப்பு

நன்னூல் சங்கரநமச்சிவாயரின் உரை மூன்றாம் பதிப்பு அய்யரவர்கள் காலமான பின் 1942 இல் (சித்திரபானு வருடம் மார்கழி மாதம்) அய்யரவர்கள் குமாரர், திரு. எஸ். கலியாண சுந்தர ஐயரால் கபீர் அச்சுக் கூடத்திற் பதிப்பித்து வெளியிடப் பெற்றது. அவரே ஒரு குறிப்பும் (24-12-42) எழுதியுள்ளார்.

## நூலமைப்பு

உள்ளுறை பகுதியும், சுருக்க விளக்கமும் நூலின் தொடக்கத்திலேயே அமைக்கப்பட்டுள்ளன. உள்ளுறையில் நூலின் உறுப்புக்கள் வரிசை எண்ணிட்டு அமைக்கப்பட்டுள்ளன. முன் பதிப்புக்களில் இருந்த தமிழ் எண்கள் அராபிய எண்களாக எல்லா இடங்களிலும் மாற்றப்பட்டுள்ளன. முகவுரை முதலிய பகுதிகள் அப்படியே அச்சிடப்பட்டுள்ளன. மூன்றாம் பதிப்பில் கீழே கண்ட இரு முக்கிய மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன:

1. முந்திய பதிப்பில் அடிக்குறிப்பாக இருந்த ஆகரங்களிற் பெரும்பாலான அங்கங்கேஉரிய இடங்களிற் சேர்க்கப் பெற்றுள்ளன. இதன் காரணமாக முன் பதிப்பில் சுமார் 1350 ஆக இருந்த அடிக்குறிப்புக்கள் 723 ஆகக் குறைந்துள்ளன.

2. அரும்பத முதலியவற்றின் அகராதியிலும் விளங்கா மேற்கோளகராதியிலும் முன்பு காட்டப்பட்ட எண்கள் பக்க எண்களாக இருந்தன. இப்போது அவை, சூத்திரங்கள், அவற்றின் உரைகள் ஆகியவற்றின் எண்களைக் குறிப்பிடுகின்றன.

இப்பதிப்பில் பின்னும் விளங்கிய மேற்கோள்களும் உள. முதற் பதிப்பில் 206 விளங்கா மேற்கோள்கள் இருந்தவை இதில் 174 ஆகக் குறைந்துள்ளன.

## கலியாண சுந்தர அய்யர் கைப் பிரதி

மூன்றாம் பதிப்பிற்கு அய்யரவர்களின் இரண்டாம் பதிப்புக் கைப் பிரதி பயன்பட்டதா என்பது தெரியவில்லை. ஆனால் திரு. கலியாணசுந்தர அய்யரின் கைப்பிரதி என்று தோன்றுகிற இரண்டாம் பதிப்புப்படி ஒன்று உ. வே. சா. நூல் நிலையத்தில் உள்ளது. அதில் மேலே குறிப்பிடும் மாற்றங்கள் கையெழுத்தில் திருத்தி எழுதப்பட்டுள்ளன. அதிலுள்ள குறிப்புக்களை எழுதியவர்கள் யார் என்று தெரியவில்லை. எனினும் அவற்றிற் கண்ட

ஒரு சில புதிய குறிப்புக்கள் மூன்றாம் பதிப்பிற் சேர்க்கப் பட்டுள்ளன.

## சேர்க்கப் பெற்ற குறிப்புக்கள்

சூத். 401. குறுங்கூலி = பறிக்குங் கூலி

சூத் 422. இனி என்பது இப்பொழுது என்னும் காலப் பொருளிலும் வரும், "பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்." (குறள்: 1083)

இன்னும் சேர்க்கப் பெறாத சில குறிப்புக்களும் காணப் பட்டன. எனவே அய்யரவர்களும், அவர் துணைவர்களும் பிறரும் பயன்படுத்திய கை பிரதிகளையும் சேகரித்துப் பதிப் பாராய்ச்சிக்குப் பயன்படுத்துவது வேண்டப் படுவதாகும். குறிப் பாக அய்யரவர்கள் நூலுக்குப் புதிய பதிப்புக்கள் வெளியிடுபவர்கள் இதைக் கவனத்தில் கொள்வது நல்லது.

## நான்காம் பதிப்பு

இது 1953-ஆம் ஆண்டு வெளி வந்துள்ளது. இதுவே இறுதி யாக வந்த பதிப்பு-இதன் மேல் ஸ்ரீதியாகராச விலாச வெளியீடு என்பது காணப்படுகிறது. இது மூன்றாம் பதிப்பின் மறு பதிப் பாக உள்ளது. வேறு குறிப்பிடத்தக்க மாற்றங்களில்லை.

## இனிச் செய்ய வேண்டியவை

அய்யரவர்கள் பார்த்தனவும் பாராதனவும் ஆகிய சங்கர நமச்சிவாயர் உரை ஏடுகளைத் திரட்டி அய்யரவர்கள் பதிப்பை இனியும் செம்மைப்படுத்த வேண்டியுள்ளதா எனப் பார்க்கலாம். கேரளப் பல்கலைக்கழகச் சுவடி நூலகத்திலும் பிற இடங்களிலும் பல, சங்கர நமச்சிவாயர் உரைப்படிகள் காணப்படுகின்றன. இவற்றை எல்லாந் திரட்டி ஆராயலாம்.

நன்னூல் முழுமைக்கும் சங்கர நமச்சிவாயர் பொருள் வழி அகராதி தயாரிக்கலாம். பின் அவர் உரைக்கு ஒரு பொருளடை வும் முழுமையாகத் தயாரிக்கலாம். விளங்கா மேற்கோளகராதி போன்றே விளங்கும் மேற்கோளகராதி, எடுத்துக் காட்டுக்களின் அகராதி முதலியன தொகுக்கலாம். ஒப்புமைப் பகுதிகள் முத லியவற்றில் இனியும் விடுபட்டவை இருந்தால் தொகுக்கலாம்.

## அய்யரவர்கள் பதிப்பிற்குப்பின்

நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரையின் பதிப்புக்கள் நான் காம், விருத்தியுரைக்குப் பல பதிப்புக்களும் வெளியாகிய பின்பும்

இது பற்றிய குறிப்பிடத்தக்க ஆராய்ச்சிகள் நடந்திருப்பதாகக் கூற இயலாது. திரு. ச. தண்டபாணி தேசிகரின் நன்னூல் விருத் தியுரைப் பதிப்பு (முதற் பதிப்பு 1957) அய்யரவர்கள் பதிப்பை நன்குப் பயன்படுத்தியுள்ளது. இதில் சிவஞான முனிவர் புதுக் கிச் சேர்த்த பகுதிகளைத் தனியாகப் பிரித்துக் காட்டுகிறார் தேசிகர். மு. வை. அரவிந்தனின், உரையாசிரியர்கள் பற்றி நூல் (முதற் பதிப்பு 1968, திருத்திய பதிப்பு 1983) சங்கர நமச்சிவாயர் பற்றிச் சிறிதே ஆராய்கிறது (பக். 639-643). எழுநூறு ஆண்டுகளில் நன்னூல் (1977) என்ற தமது நூலில் க. ப அறவாணன் சங்கரநமச்சிவாயர் உரையைச் சற்றுவிரிவாக ஆராய்கிறார் (பக். 123-151). இதற்கும் அய்யரவர்கள் பதிப்பே அடிப்படை. நன்னூற் சூத்திரங்களுக்குச் சங்கரநமச்சிவாயர் தரும் பொருளை, நன்னூல் சொல்லடைவும் சங்கரநமச்சிவாயர் அகராதியும் என்ற தலைப்பில் தொகுத்து முதுகலை ஆய்வேடாகக் கேரளப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த செல்வி. ஜாஸ்மின் 1984-இல் வழங்கியுள்ளார்.

இவை தவிர நன்னூல், சங்கரநமச்சிவாயர் உரை, சிவஞான முனிவர் செய்த திருத்தங்கள் முதலியன செவ்வையாக ஆராயப் படவில்லை எனலாம். சங்கரநமச்சிவாயரும் தொல்காப்பியரும், சங்கரநமச்சிவாயரும் மயிலைநாதரும், சங்கரநமச்சிவாயரும் சிவஞான முனிவரும், சங்கரநமச்சிவாயரும் சுவாமிநாத தேசிகரும், சங்கரநமச்சிவாயரும் பிற்கால நன்னூல் உரை யாசிரியர்களும், சங்கரநமச்சிவாயரின் இலக்கணக் கோட்பாடு என்று பல நிலைகளில் சங்கரநமச்சிவாயர் உரைத்திறனை மதிப்பீடு செய்யலாம்.

# 7. தமிழ்நெறி விளக்கப் பதிப்புக்கள்

தமிழ்நெறி விளக்கம் என்பது, விளக்கம் என்ற பெயர் அமைக்கப்பெற்ற நூல்களாகிய அகப்பொருள் விளக்கம், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், என்பன போல, தமிழ் நெறியைக் கூறும் ஓர் இலக்கண நூலாகும். உண்மை விளக்கம், நீதி நெறி விளக்கம், என்ற சமய இலக்கிய நூல்களும் இவ்வாறு பெயர் பெற்றிருந்தன. தமிழ்நெறி விளக்கம் என்பது, தமிழினது ஒழுகலாற்றை விளக்கும் விளக்குப்போன்ற நூலென்னும் பொருளுடையது என்று பொருள் கொண்டு இது தமிழ் நூற்பரப்பை—தமிழ் இலக்கண நெறியை—எழுத்து—சொல்—பொருள் யாப்பு என்ற பொருள்களை எடுத்துரைப்பது என்று கொண்டார் உ.வே.சா. ஆனால் மு. அருணாசலம் (தமிழ் இலக்கிய வரலாறு 9-ஆம் நூற்றாண்டு - பாகம் 1 பக். 233; 1975) தமிழ் என்பதற்கு அகப்பொருள் இலக்கணம் என்று கொண்டு இது அகப்பொருளிலக்கணம் மட்டும் கூறுவது என்பார்.

இப்போது இந்நூலிற் கிடைப்பவை அகப்பொருளைப் பற்றிக் கூறும் பகுதியாகிய 25 சூத்திரங்களே. அவற்றுள்ளும் 25-ஆவது சூத்திர உரையிற் பிற்பகுதி கிடைக்கவில்லை. இவ்விருபத்தைந்து சூத்திரங்களில் இந்நூல் ஆசிரியர் வகுத்துக் கொண்ட அகப்பொருள் இலக்கணம் முடிவுபெறுகிறது. இந்நூல் இறையனார் களவியலை அடியொற்றிச் செல்கிறது. களவியற் காரிகை (கி.பி. 14) என்ற நூல் தமிழ்நெறி விளக்கத்தை அடியொற்றிச் செல்கிறது. இம்மூன்றும் ஒரு நெறியை ஓட்டின என்று தோன்றுகிறது. எனவே தமிழ் அகப்பொருள் இலக்கண வரலாற்றில் இந்நூல் மிகவும் சிறப்பிடம் பெறுகிறது. அத்தோடு இது பல புதுமைகளைக் கொண்டதாகவும் விளங்குகிறது. இதன் சிறப்பியல்பை உ. வே. சா. கீழ்க்கண்டவாறு உரைப்பார் :

"இத்தமிழ் நெறி விளக்கத்தின் அகப்பொருட் பகுதிக்கும் வேறு அகப்பொருளிலக்கண நூல்களுக்கும் வேறுபாடுகள் பல உண்டு. இந்நூல் களவுக்கு முன் கைக்கிளையைக் கூறவில்லை. களவின் பகுதியாகப் பெரும்பாலோரால் அமைக்கப்படும் அறத் தொடு நிலை, உடன் போக்கு என்னும் இரண்டையும் இந்நூல் கற்பினுள் அமைக்கின்றது. தொல்காப்பியத்தில் கூற்றிற்குரிய வருள் ஒருவராகச் சொல்லப்படாத, தலைவனுடைய நற்றாயின் கூற்றொன்று இதிற்காணப்படுகிறது. அங்கங்கே அருகிக் காணப் படும் சில துறைகளுக்கு இதில் இலக்கணமும் இலக்கியமும் உள்ளன (மேற். 41, 96, 108).

இந்நூலாசிரியர் பொருளியலை அகம், புறம், அகப்புறமென மூன்றாகப்பகுத்துக்கூறி, பின் அகப்பொருளின் வகையாகிய முதல் கரு உரியென்னும் மூன்றை உணர்த்துகின்றார். கருப் பொருளின் வகையாகச் சூத்திரத்திற் கூறப்படுவன தெய்வம், மானிடம், தொழில், உணவு, இசை, விலங்கு என்பன. ஏனையவை 'பிறவும்' என்பதனாற் கொள்ளக்கிடக்கின்றன. தெய்வக்கருப்பொருள் கூறும் பொழுது பாலைக்கு இரவியை அமைக்கின்றர்;

'ஞாயிற்றைத் தெய்வமாக்கி அவனிற்றோன்றிய மழை யினையும் காற்றினையும் அத்தெய்வப் பகுதியாக்கிக் கூறுப (தொல். அகத். 5, ந.) என நச்சினார்க்கினியர் சுட்டும் ஆசிரியருள் இவரும் ஒருவரென்றே கொள்ளத்தகும். இறையனாரகப் பொருள் உரையாசிரியரும், இத்தகைய ஒரு சாரார் கொள் கையை எடுத்துக் கூறுவர்."—தமிழ் நெறிவிளக்கம் (1937) முகவுரை VII-VIII

களவு கந்தருவ மணத்தோடொப்பது என்று கூறும் இந் நூலாசிரியர் களவொழுக்கததை இயற்கைப் புணர்ச்சி (7), பாங்கற் கூட்டம் (12), தோழியிற் கூட்டத்துப் பகற்குறி (32) இரவுக்குறி (15), வரைவு கடாதல் (8), உடன் போக்கு வலித்தல் (7) என்னும் ஆறு பிரிவாகப் பிரித்து அதை 81-இற்கும் மேற் பட்ட துறைகளாகவும், கற்பொழுக்கத்தை அறத்தொடு நிலை (17), உடன் செலவு (15), சேயிடைப் பிரிவு [14], ஆயிடைப் பிரிவு (8) என்னும் நான்காகப் பிரித்து 54-இற்கு மேற்பட்ட துறைகளாகவும் அமைக்கின்றார். இந்நூலுள் குறுந்தொகை, ஐங்குறுநூறு, சிற்றட்டகம் என்னும் நூல்களிலுள்ளனவும் ஆசிரியரே இயற்றியிருக்கக் கூடியனவுமான பாடல்கள் மேற் கோள்களாகக் காணப்படுகின்றன.

நூலையும் உரையையும் மேற்கோள் பாடல்களையும் ஒருவரே செய்திருப்பார் என்று தோன்றுகிறது. எடுத்துக்காட்டுப் பாடல்கள் எல்லாம், ஆசிரியப் பாடல்களே.

இந்நூற் பாடல்கள் பின் வந்த உரையாசிரியர் பலராலும் ஆளப்பெற்றுள்ளன. காலமுறைப்படி சொல்வதானால் இறையனார் களவியலுரை (10 ஆம் நூற்றாண்டு), யாப்பருங் கல விருத்தியுரை, சிலப்பதிகார அரும்பதவுரை, தொல்காப்பிய இளம் பூரணம் (11 நூ.) பேராசிரியம், நம்பியகப் பொருள் விளக்கம் (13நூ), தொல்காப்பிய நச்சினார்க்கினியம், களவியற் காரிகையுரை (14நூ) ஆகிய உரைகளுள் இந்நூற் பாடல்களைக் காணலாம். இன்னும் பிற்காலத்தே சிதம்பரப் பாட்டியல் (16நூ) முதலான நூலுரைகள் இதன் பாடல்களைக் காட்டுகின்றன. எல்லா உரையாசிரியர்களும் ஒருமை பன்மை மயக்கத்துக்கு மேற்கோளாகக் காட்டும் 'ஏவல் இளையர் தாய் வயிறு கரிக்கும் இன்னா அருஞ்சுரம்' என்ற வரி இந்நூலில் உள்ளது (பாடல் 154)''. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு 9-ஆம் நூற்றாண்டு பாகம் 1, பக். 242-243.

இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இந்நூலில் வழுத்தூர் மதிதரர் என்பவர் பெயர் மூன்றிடங்களில் வருகிறது. வழுத்தூரென்னும் பெயருடைய ஊரொன்று தஞ்சை மாவட்டத்தில் ஐயம் பேட்டைக்கு வடக்கே குடமுருட்டி யாற்றின் தென் கரையில் உள்ளது. அங்கு வாழ்ந்திருந்த மதிதரர் இந்நூலாசிரியரின் ஆசிரியராக இருக்கக் கூடும்.

இந்நூலின் காலம் கி. பி. 9-ஆம் நூற்றாண்டென்பார் மு. அருணாசலம் (ஷை நூல் பக். 243).

இத்தகைய நூலின் ஒரே ஏட்டுப் பிரதிதான் அய்யரவர்கள் கைக்குக் கிடைத்தது. அதை அவர் பதிப்பித்த வரலாற்றைக் கீழ்க் கண்டவாறு உரைப்பார்:

''இந்நூலின் ஏட்டுப் பிரதியொன்று பல வருஷங்களுக்கு முன், பவானி போர்டு ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர், ம-ா-ா-ஸ்ரீ குமாரசாமிப்பிள்ளை அவர்களிடமிருந்து கிடைத்தது. இதன் முற்பகுதியும் பிற்பகுதியும் கிடைக்குமோவென்று பல இடங்களுக்குச் சென்று தேடியும் கிடைக்கவில்லை; இருக்கும் பகுதியும் பயன்படாமற்போமேயென்றஞ்சி இந்த அளவிலேயே இதனை வெளியிட எண்ணிச் சென்ற ஆவணியில் பதிப்பிக்கத் தொடங்கி இனேன். ''தள்ளாப் பொருளியல் பிற் றண்டமிழ்'' [பரிபாடல்] என்று நல்லிசைப் புலவரால் தள்ளத்தகாததாகச் சிறப்பிக்கப்

பெறும் அகப்பொருட் பகுதியேனும் தமிழ் நாட்டில் அழியாது இருந்தது குறித்துத் திருவருளைச் சிந்திக்கின்றேன்.

இதனைத் தம் பத்திரிகையில் வெளியிட்ட 'கலைமகள்' அதிபர் ம-ா-ா ஸ்ரீ ரா. நாராயணசாமி ஐயரவர்களுடைய பேரன்பை என்றும் மறவேன்.'' தமிழ்நெறி விளக்கம் முதற் பதிப்பு முகவுரை பக். XII.

## முதற் பதிப்பு

தமிழ் நெறி விளக்கம் முதலில் கலைமகளில் பிற்சேர்க்கை யாகத் தொகுதி: 10 பகுதி 56 (தாது வருடம் ஆவணி மாதம்-1936 ஆகஸ்டு) முதல், தொகுதி 11 பகுதி 63 (தாது வருடம் பங்குனி மாதம் 1937 மார்ச்சு இதழ்) வரை ஏழு பகுதிகளாக வெளியாகியுள்ளது. அதன் விவரம் வருமாறு:

| எண் | பக்கம் | | வெளியான இதழ் தொகுதி | பகுதி | ஆண்டு |
|---|---|---|---|---|---|
| 1. | பொருளியல் | 1 - 8 | 10 | 56 | தாது வருடம் ஆவணி - ஆகஸ்ட் 1936 |
| 2. | ,, | 9 - 16 | ,, | 57 | ஷை, புரட்டாசி |
| 3. | ,, | 17 - 24 | ,, | 58 | ஷை, ஐப்பசி |
| 4. | ,, | 25 - 32 | ,, | 59 | ஷை, கார்த்திகை |
| 5. | ,, | 33 - 40 | ,, | 60 | ஷை, மார்கழி |
| 6. | ,, | 41 - 57 | 11 | 61? | தை - ஜனவரி 1937(?) |
| 7. | முன்னுரை | I - XII | ,, | 63? | பங்குனி, மார்ச்சு 1937 |

இவற்றைத் தனியாகத் தொகுத்து நூல்வடிவில் 1937 மார்ச்சு மாதத்தின் பின் வெளியிட்டு உள்ளார்கள்.

## முதல் பதிப்பு

கலைமகளில் பிற்சேர்க்கையாக வந்ததே முதற் பதிப்பாகத் தனியாகக் கட்டிடம் கட்டி வெளியிட்டதால்-கட்டிடம் கட்டிய நூலை முதற் பதிப்பு எனலாம்.
முதற்பக்கம் : கீழ்க்கண்டவாறு அமைகிறது. கலைமகள் வெளியீடு—என உ கணபதி துணை,
தமிழ் நெறி விளக்கம் பொருளியல் (பழைய உரையுடன்) பதிப்பாசிரியர் : மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதையர், சென்னை லா ஜர்னல் அச்சுக்

கூட்டம், மயிலாப்பூர், தாதுஹு பங்குனி மீ 1937 All Rights Reserved. விலை எட்டு அணா.

பொருளடக்கம் : 1. முகவுரை V-VII 2. தமிழ் நெறி விளக்கம்-பொருளியல் 1-54; பொருளின் வகை...1, அகப்பொருள்...1; ஐந்திணையின் இடம்...2, ஐந்திணையின் பெரும்பொழுது...2; சிறுபொழுது...2, கருப் பொருள்...3; தெய்வம்...3; மக்கள்...4, செயல்...4; உணவு...5; இசை...5; மரம் முதலியன...6; உரிப் பொருள்...6; களவு...7 க. இயற்கைப் புணர்ச்சி...10; உ. பாங்கற் கூட்டம்...12; ங. தோழியிற் கூட்டம்—பகற்குறி...15; ச. தோழியிற் கூட்டம்—இரவுக்குறி...24; ரு. வரைவு கடாதல்...31, சா. உடன் போக்கு வலித்தல்...34; கற்பு...36; க. அறத்தொடு நிலை...36; உ. உடன் செலவு...42; ங. சேயிடைப்பிரிவு...47; ச. ஆயிடைப் பிரிவு...52; 3. சூத்திர முதற்குறிப்பகராதி...55; 4. மேற்கோட் செய்யுண் முதற்குறிப்பகராதி...55; 5. பிழையும் திருத்தமும்...58.

## முகவுரை

நூற்பெயர் விளக்கம், நூல் நுவல்பொருள், தமிழிலக்கண நூல்களுள் அக இலக்கணம் கூறும் நூல்கள், தமிழ்நெறி விளக்கத்தின் சிறப்பியல்புகள், தமிழ்நெறி விளக்கம் மேற்கோளாகவும் பிறவாறும் இடம்பெறும் நூல்கள், இந்நூலில் அமையும் மேற்கோட் பாடல்களின் இயல்புகள், இந்நூலுள் வழுத்தூர் மதிதரர் பற்றிய ஆராய்ச்சி, ஏடுகிடைத்த வரலாறு, அச்சிட்ட வரலாறு, உதவியோர் முதலிய செய்திகள் அய்யரவர்கள் முகவுரையால் அறியக்கிடக்கின்றன.

## நூல்

நூற்பாக்களின் பொருளை விளக்கும் சொல்லோ தொடரோ நூற்பாக்களின் மேல் தலைப்பாக அமைக்கப்பட்டுள்ளன. தொடர்ந்து உரை அமைகிறது. நூற்பாக்களுக்கு 18 வரை அராபிய எண்ணும் எஞ்சியவற்றிற்குத் தமிழ் எண்ணும் கொடுக்கப்பட்டுள்ளன.

## மேற்கோள் பாடல்கள்

இடம் விளங்கியவை நூலினகத்தே ஆகரத்துடன் கொடுக்கப் பட்டுள்ளன. இடம் விளங்கா 172 செய்யுட்களுக்கு வலதுபுறம் தொடர்ந்து தனி எண்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இவை தொகுக்கப்பட்டு இறுதியில் அகராதியாகவும் கொடுக்கப் பட்டுள்ளன.

## பாடவேறுபாடு

ஒரே ஏட்டுச்சுவடியை வைத்து இந்நூலை வெளியிட்டதால் பாடவேறுபாடுகள் கொடுக்க இயலவில்லை. எனினும் நான்கிடங்களில் (பக். 11, 15, 42, 53) இதில் மேற்கோளாக வரும் பாடல்கள் பிற நூல்களில் வேறுபாடத்துடன் காணப்படுவதை (பி-ம்) என்று அமைத்துள்ளார்.

## அடிக்குறிப்புக்கள்

சில சொற்பொருள் விளக்கம், மேற்கோளாட்சி ஒப்புமைப் பகுதி செய்தி விளக்கம் என்ற நிலையில் 118 அடிக் குறிப்புக்கள் ஆராய்ச்சி நுட்பத்துடன் அமைக்கப்பட்டுள்ளன. இவற்றைக் குறிப்புரை என்பர் இரண்டாம் பதிப்பு வெளியிட்டார். இறுதியில் சூத்திர முதற்குறிப்பகராதி, பிழை திருத்தத்துடன் நூல் முற்றுப்பெறுகிறது. அய்யரவர்கள் நூற்பதிப்புக்களின் தனி இயல்பாயுள்ள அரும்பத முதலியவற்றின் அகராதி இதில் காணப்படாதது குறிப்பிடத்தக்கது.

## இரண்டாம் பதிப்பு

இந்நூலின் இரண்டாம் பதிப்பை வேறு எந்தவித மாற்றமுமின்றி அப்படியே அய்யரவர்கள் மகன் திரு. எஸ். கலியாண சுந்தரையர் 10-12-47-இல் வெளியிட்டுள்ளார்கள். இதுவே இறுதியாக வந்த பதிப்பு.

## மதிப்பீடு

முன்பே குறிப்பிட்டபடி இந்நூல் அய்யரவர்களின் எண்பத்திரண்டாம் வயதில் வெளியான நூல். குறுந்தொகையும் இக்காலத்தில் வெளியானது. அய்யரவர்கள் இறுதிக்காலத்தில் வெளியிட்ட நூல்கள் பற்றி வையாபுரிப்பிள்ளையவர்கள் கூறும் கருத்து இங்கு நினைக்கத்தக்கது.

''ஐயர் இறுதிவரை தமிழின் பொருட்டுத் தம் காலத்தை முழுதும் பயன்படுத்தி வந்தனர். என்றாலும், இவர் தாமாக முழுப் பொறுப்பையும் ஏற்று நன்றாக உழைத்து வந்தது, சுமார் 1930 வரை என்றுதான் சொல்லவேண்டும். இதற்குப் பின் தளர்ச்சி மேலீட்டினால் ஐயர் தமது சிஷ்யர்களையே முற்றும் நம்பிவிட வேண்டியதாயிற்று. இதனால், முன் பதிப்பித்த நூல்களின் செம்மைப்பாடு பின் வெளிவந்தனவற்றுள் இல்லை. இதற்கு உதாரணமாகக் குறுந்தொகைப் பதிப்பைக் கூறலாம் இதன் கண்ணே பாட நிச்சயத்திலும், பொருளுணர்ச்சியிலும்

பிழைகள் பல உள்ளன என்பது தமிழறிஞர்கள் நன்கு உணர்ந்ததே.''—தமிழ்ச் சுடர்மணிகள் (1968)

தமிழ்நெறி விளக்கத்தில் அரும்பத அகராதி, முன்னுரையில் பொருளாராய்ச்சி, கால ஆராய்ச்சி முதலியன காணப் படாமைக்குச் ச. வையாபுரிப்பிள்ளையவர்கள் கூறும் காரணங் கள் பொருத்தமானவை ஆகக்கூடும்.

தமிழ்நெறி விளக்க ஏட்டுச்சுவடிகள் வேறு எங்கும் இருப்ப தாகத் தெரியவில்லை. இனிமேல் ஏதாவது கிடைத்தால் பாட வேறுபாட்டுடன் கூடிய பதிப்பு வெளிவருவது இயலக்கூடியதே.

## அய்யரவர்கள் பதிப்புக்குப்பின்

தமிழ்நெறி விளக்கத்தின் காலம் முதலியவற்றை ஆராய்ந்து திரு. மு. அருணாசலம் தமது ஒன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு முதற்பாகத்தில் (1975) விரிவாக எழுதி உள்ளார். (பக். 232-248). இந்நூல் கூறும் அகப்பொருளின் சிறப்புக்களை ஒப்பிட்டு விரிவாக ஆராய்ந்து செல்வி இந்திரா மனுவேல் தமிழில் தொல்காப்பியத்தில் இலக்கியக்கொள்கைகள் என்ற தமது கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை முனைவர் பட்ட ஆய்வேட்டில் (1984) விளக்கியுள்ளார் (பக். 551-553 முதலியன).

# 8. தொகுப்புரை

கணிதத்தைப் போன்ற நுணுக்கம் வாய்ந்த இலக்கணத் துறையில் அய்யரவர்கள் செவ்வையான பயிற்சி பெற்றுத் தேர்ந்த புலவராக விளங்கியதோடன்றி நான்கு இலக்கண நூல்களைப் பதிப்பித்தும் தந்துள்ளார்கள். அவை நான்கேயாயினும் அவற்றில் அவரின் பதிப்பு முறைகளும் ஆராய்ச்சி மாண்புகளும் நன்கு மிளிர்வதைப் பார்க்கிறோம்.

## அய்யர் பதிப்புக்கள்

அய்யரவர்கள் தமது நாற்பதாம் அகவையில் புறப் பொருள் வெண்பாமாலையை வெளியிடத் தொடங்கியதிலிருந்து தம் எண்பத்திரண்டாம் அகவை வரை நான்கு இலக்கண நூல்களுக்கும் எட்டுப் பதிப்புக்கள் வெளியிட்டுள்ளார்கள். அவற்றில் மூன்று நூல்கள் அவர்களின் அறுபதாம் அகவைக்குப்பின் வெளியானவை என்பது குறிப்பிடத்தக்கது. அவற்றில் புறப்பொருள் வெண்பாமாலைக்கு மட்டும் அய்யரவர்கள் வெளியிட்ட பதிப்பு நான்கு ஆகும். அதன் முதற்பதிப்பு வந்து இருபதாண்டுக்குப் பின்னரே இரண்டாம் பதிப்பு வெளியாயிற்று. அதன் ஏனைய பதிப்புக்களுக்கு இடையே இருந்த இடைவெளி பத்தாண்டாகும். சங்கர நமச்சிவாயர் உரைப் பதிப்புக்களுக்கு இடையேயும் சுமார் பத்தாண்டு இடைவெளி இருந்தது. (மேலும் பார்க்க: 3- உ. வே. சா. இலக்கணப் பதிப்புக்கள் என்ற கட்டுரை)

புறப் பொருள் வெண்பா மாலையின் முதற் பதிப்பு வெளியாகிச் சுமார் இருபத்திரண்டு ஆண்டுகட்குப் பின் நன்னூல் மயிலை நாதர் உரையையும், அதன் பின் ஏழாண்டிற்குப் பின் நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரையையும் இன்னும் பதினோராண்டிற்குப்பின் தமிழ் நெறி விளக்கத்தையும் அய்யரவர்கள்

வெளியிட்டார்கள். அய்யரவர்களின் பன்னிரண்டாவது நூலாகப் புறப் பொருள் வெண்பாமாலையும் முப்பத்தை தாவது நூலாக நன்னூல் மயிலை நாதர் உரையும், முப்பத்தெட்டாம் நூலாக நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரையும், எழுபத்தொன்றாம் நூலாகத் தமிழ் நெறி விளக்கமும் வெளியாகியுள்ளன. (மு. கோ. இராமன், டாக்டர் உ. வே. சாமிநாதையர், தற்காலத் தமிழ் முன்னோடிகள். பக். 44-68). இவற்றை நோக்கும் போது அய்யரவர்களின் இடையறாப் பதிப்பு முயற்சியையும், அதில் இலக்கண நூல் பதிப்பும் பெரும் இடத்தை வகித்திருந்தது என்பதையும் உணரலாம். இவற்றில் எல்லாம் பதிப்புத்தோறும் செப்பமும் ஆக்கமும் பெருகி வந்ததைப் பார்த்து நாம் வியக்காமல் இருக்க முடியாது.

அய்யரவர்களுக்குப் பின் புறப்பொருள் வெண்பா மாலைக்கு ஐந்து பதிப்புக்களும், நன்னூல் சங்கரநமச்சிவாயா உரைக்கு இரண்டும், நன்னூல் மயிலைநாதர் உரைக்கும் தமிழ் நெறி விளக்கத்திற்கும் ஒரொன்றும் வெளியாகி உள்ளன. இது ஒரு வகையில் உ. வே. சா. விட்டுச் சென்ற பதிப்புப் பணி இடையறாது நடந்து வந்ததைக் குறிக்கிறது. எனினும் அண்மைக் காலத்தில் அய்யரவர்கள் பதிப்புக்கள் கிடைப்பது அரிதாகி விட்டது. தொடர்ந்து பதிப்பிக்கும் முயற்சிகள் மிகுதியாகக் காணப்படவில்லை. அண்மையில் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் குறுந்தொகையை மறுபதிப்பாக வெளியிட்டுள்ளது. நாம் தொடர்ந்து உ. வே. சா. வெளியிட்ட நூல்களுக்கு மறுபதிப்புக்கள் வெளியிட வேண்டும். இதைத் தனியார் செய்து பொருளீட்டுவதை விட உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தினர், தமிழ்ப் பல்கலைக் கழகத்தினர் போன்றவர்கள் தமிழ்த் தொண்டாகக் கருதிச் செய்யலாம். அவ்வாறு அமையும் மறுபதிப்புக்களில் புதிய மூல பாட ஆராய்ச்சி, நூலாராய்ச்சி முதலியவற்றால் வெளியாகியுள்ள செய்திகளைப் பின்னிணைப்பாகக் கொடுக்கலாம். உ. வே. சா. பதிப்புக்களினும் பெரிதும் செப்பமடைந்த ஆராய்ச்சிப் பதிப்புக்கள் வெளியாகும் வரை (அதற்கு வாய்ப்புண்டா?) உ. வே. சா. பதிப்புக்களுக்கு மறு பதிப்புக்கள் வெளி வந்து கொண்டே இருக்க வேண்டும்.

## அய்யர் பதிப்புக்களின அடிப்படைக் கொள்கைகள்

முன்பு விளக்கியது போன்று, முன்பு அச்சில் வராத நூல்களை வெளியிடுதல் (எ—டு. நன்னூல் மயிலை நாதர் உரை, தமிழ் நெறி விளக்கம்), முன்பு அச்சில் வந்து செப்பம் பெறாத நூல்களை வெளியிடல் (எ—டு. புறப்பொருள் வெண்பா மாலை),

ஆராய்ச்சிக்குக் கருவியாகப் புது முறையில் வெளியிடல் (எ—டு: சங்கரநமச்சிவாயர் உரை) முதலியவை அய்யரவர்கள் பதிப்புக் களின் அடிப்படைக் கொள்கைகள் என்று தோன்றுகிறது. எனவே ஒவ்வோர் நூல் வெளியீட்டிற்கும் ஒரு தக்க அடிப்படைக் காரணமிருந்தது எனலாம்.

## ஏடு தேடுதல் : அடிப்படை ஏடுகள்

அய்யரவர்கள் எந்த நூலையும் அவசரக் கோலம் அள்ளித் தெளித்தாற்போல் வெளியிடுவதில்லை. தமக்கு நிறைவு வரும் வரை வெளியிட வேண்டிய நூலின் ஏட்டுப் படிகள் பலவற்றைப் பொறுமையாகப் பல காலம் தேடுவார். புறப் பொருள் வெண்பா மாலையையும், மயிலைநாதர் உரையையும் வெளி யிடப் பல ஏட்டுச் சுவடிகளையும் தொகுத்து வந்தார். அது போன்றே சங்கரநமச்சிவாயர் உரையைப் பாடம் கேட்டபோது தோன்றிய எண்ணத்தை நிறைவேற்ற அதன் முதல் ஏடு கிடைக் கும் வரை காத்திருந்தார். இதற்கு எடுத்துக் கொண்ட காலம் ஐம்பதாண்டுகளுக்கும் மேல்! அது போன்றுதான் தமிழ் நெறி விளக்கப் பதிப்பும். எப்பொழுதோ கிடைத்த ஏட்டை வைத்துக் கொண்டு வேறுபடி கிடைக்குமா எனக் காத்திருந்து பார்த்து விட்டு வேறு ஏடு கிடைக்காததால் ஓர் ஏட்டை வைத்துக் கொண்டு வெளியிடத் துணிந்தார். புறப் பொருள் வெண்பா மாலைக்கு அவர் பயன்படுத்திய ஏடுகள் 9. நன்னூல் மயிலை நாதர் உரைக்குப் பயனாய ஏடுகள் 15. நன்னூல் சங்கரநமச்சி வாயர் உரைக்கு அடிப்படையான ஏடுகள் 2; தமிழ் நெறி விளக் கத்திற்கு உதவிய ஏடு ஒன்று மட்டுமே.

## மூல பாட ஆய்வு

பல ஏட்டுச்சுவடிகளையும் பார்த்துப் பாட வேறுபாடுகளைத் திரட்டி, மூல பாட ஆய்வு செய்வது என்பது எவ்வளவு முயற்சி யும் காலமும் பிடிக்கக் கூடியது, அலுப்புத் தருவது என்பது அதில் ஈடுபட்டார்க்கே புலனாகும். எடுத்த எடுப்பில் செய்து முடிக்கக் கூடியதன்று இது. இதற்குப் பொறுமை, இடையறா முயற்சி, உழைப்பு, இவை தேவை. மேலும் ஆய்விலே இன்பம் காணும் உண்மை தேடுவார்க்கே இது சாத்தியமாகக் கூடியது. அய்யரவர் களுக்கு இவை எல்லாம் இருந்ததாலேயே அவர் இறவாத தமிழ் நூல்களைப் பதிப்பிக்க முடிந்தது.

பாட வேறுபாடுகள் என்பனவற்றிற்கு அளவில்லை. அய்யர வர்களே சிந்தாமணிப் பதிப்புப் பற்றிக் கூறுகையில் ''பாடபேதக் கட்டுக்குக் கரை காணவே முடியவில்லை'' என்பார். (என் சரித்.

திரம் பக். 559). அவற்றில் மூல பாட நிச்சயம் என்பது மிகவும் கடினமானது; தடுமாற்றம் தரக்கூடியது. மூல பாட நிச்சயித்திற்கு அய்யரவர்கள் அறிவியல் முறையையே மேற்கொண்டார். மூல பாடத்தை, உரையை ஒட்டியும் பிற இடங்களில் மேற்கோள்களாக வருவதை ஒப்பிட்டும் இன்னும் பல வழிகளிலும் அய்யரவர்கள் முடிவு செய்தார்கள். சில இடங்களில் மூல நூலில் இருப்பதை விட இலக்கண மேற்கோள்களில் வேறு பாடம் காணப்படின் அவற்றைத் திருத்தாது அப்படியே கொடுப்பதும் உண்டு (நன்னூல்-மயிலை நாதர் உரை முன்னுரை பக். 111).

நன்னூல் மயிலை நாதர் உரையில் மட்டும் 1384 பாட வேறுபாடுகளையும் புறப்பொருள் வெண்பா மாலையில் 149 பாட வேறுபாடுகளையும், நன்னூல் சங்கரநமச்சிவாயர் உரையில் 88 பாட வேறுபாடுகளையும் தமிழ் நெறி விளக்கத்தில் 4 பாட வேறுபாடுகளையும் அய்யரவர்கள் தொகுத்துக் கொடுத்துள்ளார்கள். இதற்குப் பின்னணியில் இருந்த ஒழுங்கையும் உழைப்பையும் நினைத்துப் பார்க்கவே வியப்பாக உள்ளது. மூல பாட ஆய்வு முதலியவற்றில் அய்யரவர்களுக்கு அலுப்புத் தட்டவில்லை. அவர் அவற்றில் இன்பமே கண்டார். சிந்தாமணிப் பதிப்புப் பற்றி அய்யர் கூறுவது இங்குக் குறிக்கத் தக்கது:

> ''இப்படித் தடுமாறித் தடுமாறிச் சிரமப்
> படுவதில் எனக்கு அலுப்புத் தோன்றவில்லை.
> மேலும், மேலும் உத்ஸாகமே உண்டாயிற்று.
> ஏதேனும் ஒரு மேற்கோளோ, ஒரு விஷயமோ,
> ஒரு பாடமோ தெரியாமல் மயங்கித் தவித்து
> நின்று பிறகு விளங்கினால் அதற்கு முன்பு
> பட்ட சிரமங்களெல்லாம் மறந்து போகும்
> பின்னும் பதின் மடங்கு ஊக்கம் ஏற்படும்.''
>
> — என் சரித்திரம் பக். 560

## நூல் பதிப்புக்கு முன்

மூல பாட ஆய்வோடு பதிப்புக்குரிய பணிகள் முற்றுப் பெறுவதில்லை. மூல ஏடுகளில் சூத்திரம்,உரை, மேற் கோள் என்று வேறுபாடுகளின்றி ஒரே மாதிரியாகக் காணப்படும். சீர் பிரிப்பு சந்தி பிரிப்பு இருக்கா; நிறுத்தக் குறிகள் பத்தி பிரிப்பு முதலியன காணப்படா.

அய்யரவர்கள்மூலத்தையும்உரையையும்தனியாகப் பிரித்துத் தக்க நிறுத்தக் குறிகள் முதலியவற்றுடன் எழுதிக் கொள்வார்.

அதன் பின்னர் அவர் செய்து கொண்ட தயாரிப்புகளே அவர் பதிப்பின் செம்மைக்கு உதவின எனலாம்.

## அகராதிகள், அடிக்குறிப்புக்கள்: மேற்கோளின் ஆகரம் சுட்டல், ஒப்புமைப் பகுதிகள், செய்தி விளக்கம் முதலியன

**பலவிதமான அகராதிகள்:** அரும்பத அகராதி, விளங்கா மேற்கோள் அகராதி, முதலியவற்றைத் தயாரித்துக் கொண்ட பின்பே அய்யரவர்கள் ஒரு நூலைப் பதிப்பிக்கத் தொடங்குவார். இவ்வாறு அகராதி செய்யும் முறையைத் தேரழுந்தூர் இராஜ கோபாலாச்சாரி (என் சரித்திரம் பக். 665), கே. ஆர். துரைசாமி ஐயர் (ஷை - 723) முதலியவர்களிடமிருந்து தெரிந்து கொண்டதாக அய்யர் குறிப்பிடுவார். அது மட்டுமின்றி ஜி. யூ. போப்பின் நன்னூற் பதிப்பு (1857) முதலியவற்றில் காணப்பட்ட சொல்லகராதி (க்ளோசரி) முதலியனவற்றையும் அய்யரவர்கள் கண்டிருக்கக் கூடும். இது எவ்வாறாயினும் அகராதி தயாரித்து அதை எவ்வாறு தம் பதிப்பைச் செம்மையாக்க அய்யர் பயன்படுத்தினார் என்பதே முக்கியமான செய்தி. தாம் பதிப்பித்த நூல்களைக் கொண்டு வேறு நூல்களையும் அவற்றைக் கொண்டு இவற்றையும் ஆராய்ந்து உண்மை காணுதற்குக் கருவியாகவே இவ்வகராதிகளை அய்யர் தயாரித்தார் (நன்னூல் மயிலை நாதர் உரை முகவுரை பக். 11), அதனால் அய்யரவர்கள் தாம் பதிப்பிக்காத நூல்களுக்கும் அகராதிகள் தயாரித்தார் (பூ. சொல் விளங்கும் பெருமாள் — டாக்டர் உ. வே. சா. பதிப்புப்பணி ஓர் ஆய்வு — பக். 88) இவ்வகராதிகளின் பயன் பற்றி அய்யரவர்கள் கூறும் கருத்து இங்கு மேற்கோளாகக் காட்டத்தக்கது:

> "அக்காலத்தில் நான் செய்து வைத்துக் கொண்ட பல வகை அகராதிகளே இன்றும் எனக்கு மூல நிதியாக உதவுகின்றன. அவற்றைக் காணும்போது 'எவ்வளவு காலம் எவ்வளவு அன்பர்களுடைய உழைப்பு இவற்றில் சென்றிருக்கின்றன!' என்று எண்ணி வியப்புறுவேன். அவற்றின் அருமை பெருமையை அச்சிட்ட புத்தகங்களைப் படிப்பவர்கள் சிறிதும் அறியார். மிக உயர்ந்த அலங்காரமான மாளிகையைக் கண்டு அதன் அழகில் ஈடுபடுபவர்கள் அம்மாளிகை எந்த அஸ்திவாரத்தின் மேல் எழுப்பப்பட்டதென்பதைக் கவனிப்பதில்லை. மிகவும் ஜாக்கிரதையாகப் போட்ட அந்த அஸ்திவாரம் பூமிக்குள் மறைந்து கிடக்கின்றது." —என் சரித்திரம் பக். 726.

### அரும்பத அகராதி

அய்யரவர்கள் தயாரித்த அகராதிகளில் குறிப்பிடத்தக்கது அரும்பதம் முதலியவற்றின் அகராதி. புறப்பொருள் வெண்பா மாலை முதற் பதிப்பில் இதை இரண்டு மூன்றாகப் பிரித்து அமைத்திருந்தார். பின் பதிப்புக்களில் ஒன்றாக்கி விட்டார். நன்னூல் மயிலைநாதர் உரைப் பதிப்பு அரும்பத அகராதியில் பொருள் எழுதப்படவில்லை. நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரை அரும்பத அகராதியில் பொருள் எழுதப்பட்டுள்ளது. தமிழ் நெறி விளக்கத்தில் அரும்பத அகராதி இல்லை.

### அடிக்குறிப்புக்கள்

அய்யரவர்கள் பதிப்பின் சிறப்புக்களுள் ஒன்று அவற்றில் காணப்படும் அடிக்குறிப்புக்களாகும். அவ்வடிக் குறிப்புக்களில் நூல்களின் ஆகரம் சுட்டல், மேற்கோள் விளக்கம், ஒப்புமைப் பகுதிகள், கருத்து விளக்கங்கள் முதலியன காணப்படும்.

### ஆகரம் சுட்டல்: இடம் விளங்கா மேற்கோளகராதி

மூல நூல்களில் உரை எது மேற்கோள் எது என்று தெரியாது. முதன் முதலில் நூலினகத்து வரும் மேற்கோள்களை எல்லாம் இடஞ்சுட்டிப் பதிப்பித்தவர் அய்யரவர்களே எனலாம். அவ்வாறு இடம் விளங்காதனவற்றைத் தனியாகத் தொகுத்து இடம் விளங்கா மேற்கோள் அகராதி என அமைப்பார் அய்யர் பதிப்புத்தோறும் இடவிளக்கம் பெற்றவை இதிலிருந்து நீக்கப் படும்.

புறப் பொருள் வெண்பா மாலை முதற் பதிப்பில் 14 இடம் விளங்கா மேற்கோள்கள் இருந்தன; ஒன்பதாம் பதிப்பில் அவை 8; நன்னூல் மயிலை நாதர் உரை முதற் பதிப்பில் அவை 367. இரண்டாம் பதிப்பில் 335; நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரையின் முதற் பதிப்பில் அவை 206; மூன்றாம் பதிப்பில் அவை 174; தமிழ் நெறி விளக்கத்தில் அவை 172.

அய்யரவர்கள் பதிப்பில் இடம் விளங்கிய மேற்கோள்கள் எண்ணிக்கை நூற்றுக்கணக்கில் இருக்கும். ஆனால் அவற்றை அவர் தொகுத்து அகராதியாக்காமல் விட்டு விட்டார். மேற் கோளாராய்ச்சியில் தாம் ஈடுபட்டது பற்றிய அய்யர் கருத்து இங்குக் கருதத்தக்கது.

"இப்படி மேற்கோளாராய்ச்சியிலே சென்ற காலம் மிக அதிகம். பிரயோகங்களைத் தொகுத்து வகைப்படுத்துவ

திலே உண்டான சிரமம் எவ்வளவோ மிகுதியாக இருந்தாலும் ஒரு முறை பட்ட கஷ்டம் பல நூற்பதிப்புக்கு உபயோகமாக இருந்தது.'' என் சரித்திரம் பக். 726.

## மேற்கோள் விளக்கம்

அது போன்றே தாம் பதிப்பிக்கும் நூல் பகுதிகள், கருத்துக்கள், பிற நூல்களில் மேற்கோளாகவும் பிறவாறும் வருமிடங்களையும் சுட்டுவதும் அய்யர் பதிப்பின் சிறப்பாகும். இவை எல்லாம் அடிக்குறிப்புக்களாக அவ்வப் பக்கங்களில் அமையும். இதனுடன் ஒப்புமைப் பகுதிகளும், கருத்து விளக்கம் முதலிய பிற செய்திகளும் காணப்படும். இவற்றில் எல்லாம் தெளிவு கிடைக்கும் வரை காத்திருப்பது அய்யரவர்கள் பண்பாகும்.

புறப் பொருள் வெண்பா மாலை மூன்றாம் பதிப்பில் 113 மேற்கோள்கள், 100 ஒப்புமைப் பகுதிகள் காணப்படுகின்றன. நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரையின் இரண்டாம் பதிப்பில் 1368 அடிக்குறிப்புக்கள் காணப்படுகின்றன. அவற்றின் ஒப்புமைப் பகுதிகள், வேற்றுமைப் பகுதிகள் முதலிய குறிப்புரைகள் மட்டுமே 723 ஆகும். மயிலைநாதர் உரையில் இத்தகைய விரிவான அடிக்குறிப்புக்கள் இல்லை. அதில் மேற்கோள்களின் ஆகரங்களே மிகுதியும் காணப்படுகின்றன. தமிழ் நெறி விளக்கத்தில் 118 விரிவான அடிக்குறிப்புக்கள் உள்ளன. இவை எல்லாம் நுட்பமான நூலாராய்ச்சியின் விளைவு என்பதை விளக்கத் தேவையில்லை.

## சுருக்க விளக்கம்

அது போன்றே மேற்கோள் விளக்கத்திற்கு அய்யரவர்கள் சிறந்த சுருக்க முறையில் சுருக்க விளக்கங்கள் அமைத்து அதை ஒரே சீராக எல்லா இடத்தும் பயன்படுத்தினார். இது அவருடைய அறிவியற் செம்மையைப் புலப்படுத்துகிறது. அதை அவர் எடுத்துக் காட்டிய நூல்கள் முதலியவற்றின் முதற் குறிப் பகராதி என அழைத்தார். இது முதலில் 1918-இல் வெளியான நன்னூல் மயிலைநாதர் உரையில் காணப்படுகிறது. இதில் 60 நூல்களின் சுருக்க விளக்கங்கள் அகராதி முறையில் காணப்படுகின்றன.

பின்புறப் பொருள் வெண்பா மாலையின் மூன்றாம் பதிப்பில் (1924) இத்தகைய அகராதி ஒன்று சேர்க்கப் பெற்றுள்ளது. அதில் 72 நூல்களின் சுருக்க விளக்கங்கள் காணப்படுகின்றன. 1925 வெளியான நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரையில் 96 சுருக்க விளக்கங்கள் உள்ளன.

## முகவுரை, நூலாராய்ச்சி, உரையாராய்ச்சி முதலியன:

அய்யரவர்கள் பதிப்பில் அடுத்த சிறப்பியல்பு நூற்பதிப்பு வரலாறு, நூலாராய்ச்சி, ஆசிரியர், உரையாசிரியர் வரலாறு முதலியவற்றை விரிவாக ஆராய்ந்து எழுதுதலாகும். இவை பதிப்புத் தோறும் செப்பம் பெற்று வரும்.

புறப்பொருள் வெண்பா மாலை முதற் பதிப்பில் உரையாசிரியர் பெயர் தெரியவில்லை என எழுதினார்; பின் தெரிந்து கொண்ட செய்தியை எழுதி உரை பற்றியும் சற்றுவிரிவாகப்பின் வந்த பதிப்புக்களில் எழுதினார். நான்காம் பதிப்பில் பொருளமைப்புப் பற்றிய பகுதியை எழுதிச் சேர்த்தார். எனினும் இவை இன்னும் விரிவு பெறத் தக்கனவே. நன்னூல் மயிலைநாதர் உரை, சங்கர நமச்சிவாயர் உரை ஆகியவற்றில் இப்பகுதிகள் மிக விரிவாக உள்ளன. நன்னூல் நமச்சிவாயர் உரையின் இரண்டாம் பதிப்பில் உரையாராய்ச்சி பற்றிப் புதிதாக எழுதிச் சேர்த்துள்ளார். தமிழ் நெறி விளக்கத்தின் முன்னுரையிலேயே இவற்றை எல்லாம் ஒருவாறெழுதினார். அய்யரவர்களின் முகவுரை, நூலாராய்ச்சிப் பகுதிகள் ஆராய்ச்சிக் கருவூலங்களாம். அதனால்தான் அவற்றைக் கற்றாலேயே ஒருவர் பெரும் புலமை அடையமுடியும் என்று சிறப்பிப்பர் அறிஞர்.

## பிற செய்திகள்

அய்யரவர்கள் பதிப்பிலே முகவுரையிலே முதற்கண் திருச்சிற்றம்பலம் என்பதும் தொடர்ந்து ஒரு தேவாரம் அல்லது திருவாசகமும் இடம்பெறும். புறப் பொருள் வெண்பா மாலையின் மூன்றாம் பதிப்பிலிருந்து (1924) இவை காணப்படுகின்றன. தமிழ் நெறி விளக்கத்தில் இவை இல்லை.

அதுபோன்றே நூற்பதிப்பிற்கு ஏடுதந்தோர், உடனிருந்து உதவியோர், பொருளுதவி செய்தோர் முதலியோரை விடாது குறிப்பிட்டு நன்றி கூறும் பண்பையும் அய்யரவர்கள் பதிப்பில் பார்க்கலாம்.

## அச்சடிப்பு முறை

முன்பே குறிப்பிட்டபடி மூல ஏடுகளில் சூத்திரம், உரை, மேற்கோள் இவை வேறுபடுத்தப் பட்டிருக்கா; சீர்சந்தி பிரிப்புக் காணப்படா; பத்திப்பிரிப்பு இல்லை; மேற்கோட் குறிகள் இல்லை. தொடக்க காலத் தமிழ்ப் பதிப்பாசிரியர்கள் ஏட்டிலுள்ளதை அப்படியே எவ்வேறுபாடும் காட்டாது ஒரே அச்

செழுத்தில் அச்சடித்து விடுவர். தில்லையம்பூர் சந்திரசேகர கவிராஜ பண்டிதர் போன்றோர் பதிப்பித்த நூல்களைப் பார்த்தால் இது விளங்கும். ஆனால் அய்யரவர்கள் இதில் மிகுந்த கவனம் செலுத்தித் தம் நூலை அழகுற வெளியிட்டுள்ளதை அவர் நூல்களே காட்டுகின்றன.

பாடல்களைச் சீர்பிரித்து அச்சிடுவது மட்டுமின்றிச் சில இடங்களில் சந்தி பிரித்தும் (எ-டு. நன்னூல் மயிலைநாதர் உரை) அச்சிட்டதும் உண்டு. உரைகளிலும் விளக்கம், எடுத்துக் காட்டு இவைகளைத் தனித்தனிப் பத்தியாக அச்சிட்டுள்ள முறை மிகவும் சிறப்பாக அமைந்துள்ளது (எ.டு. புறப் பொருள் வெண்பா மாலை, நன்னூல் மயிலைநாதர் உரை). மேலும் அய்யரவர்கள் நிறுத்தக்குறிகளை மிகவும் தெளிவாகவும் சீராகவும் பின்பற்றும் முறையும் மிகவும் வியந்து போற்றத்தக்கதாக உள்ளது.

மூலத்தையும், உரையையும் வேறு வேறு எழுத்துக்களில் அச்சிடுவதைப் புறப்பொருள் வெண்பாமாலை முதற் பதிப்பிலும் நன்னூல் மயிலைநாதர் உரைப்பதிப்பிலும் நன்னூல் சங்கரநமச்சிவாயர் உரைப் பதிப்பிலும், தமிழ் நெறி விளக்கப் பதிப்பிலும் பார்க்கலாம். இதுவரை வெளிவந்த பதிப்புக்களில் புறப் பொருள் வெண்பாமாலை, நன்னூல் மயிலைநாதர் முதற் பதிப்புக்கள் முதலியவை வாசிப்போர் நோக்கில் மிகவும் வசதியாகவும் அழகாகவும் அமைந்துள்ளன எனலாம். இது போன்றே பிற பதிப்புக்களிலும் இத்துறையில் அய்யரவர்கள் கவனம் செலுத்தியுள்ளார்கள் (எ-டு. நன்னூல் சங்கரநமச்சிவாயர் உரை இரண்டாம் பதிப்பு) அச்சடிப்பு முறையில் அச்சகத்தார் அறிவுரைகளையும் அய்யர் ஏற்றுக் கொண்டுள்ளார் என்று தெரிகிறது. (என் சரித்திரம் பக். 580).

புறப் பொருள் வெண்பாமாலை முதற்பதிப்பில் சூத்திரம், கொளு, வெண்பா ஆகியவற்றை 10 பாயிண்ட் எழுத்திலும் உரையை 8 பாயிண்ட் எழுத்திலும், நன்னூல் மயிலைநாதர் உரையில் மூலத்தை 12 பாயிண்ட் தடித்த எழுத்திலும் உரையை 10 பாயிண்ட் எழுத்திலும், பாடபேதத்தை 8 பாயிண்ட் எழுத்திலும், நன்னூல் சங்கரநமச்சிவாயர் உரை முதற் பதிப்பில் மூலத்தை 12 பாயிண்டிலும், உரை, பாடபேதம் ஆகியவற்றை 8 பாயிண்ட்டிலும், தமிழ் நெறி விளக்கத்தின் மூலத்தை 12 பாயிண்டிலும், உரையை 10 பாயிண்டிலும், அடிக்குறிப்பை 8 பாயிண்டிலும் அச்சிட்டுள்ளார்.

மேலும் புறப்பொருள் வெண்பாமாலை முதற் பதிப்பு, தமிழ் நெறி விளக்க முதற் பதிப்பு முதலியவற்றில் ராயல் அளவ்வும்,

பிற பதிப்புக்களில் டெமி $\frac{1}{8}$ அளவையும் பின் பற்றியுள்ளதும் அடிப்படை ஆய்வு நூல்களுக்கான எடுப்பான தோற்றத்தைத் தருகின்றன; எனலாம். அய்யரவர்கள் பதிப்பில் காணப்படும் அச்சடிப்பு நுணுக்கங்கள் பற்றியெல்லாம் இன்னும் விரிவாக யாராவது ஆராயலாம்.

## அய்யரவர்களின் கைப்பிரதிகள்

அய்யரவர்கள் ஒரு பதிப்பை வெளியிட்டதுடன் அந் நூலாராய்ச்சியை விட்டுவிடுவதில்லை. தொடர்ந்து ஆராய்ந்து வருவது அவரியல்பு. அதனாலும் பிற நூலாராய்ச்சியாலும் அவ்வப்பொழுது கிடைத்த குறிப்புக்களைத் தம் கைப்பிரதியில் தொகுத்து வருவது அய்யர் பண்பு. இவையே அய்யரவர்களுக்கும், அவருக்குப் பின் வந்தோர்க்கும் புதிய செப்பங்களுக்கு அடிப்படையாய் அமைந்துள்ளன. ஆனால் இத்தகைய கைப் பிரதிக் குறிப்புக்கள் எல்லாம் முழுமையாகப் பின்னால் பயன் படுத்தப்பட்டுள்ளனவா என்பதில் ஐயம் எழுகிறது. எனவே உ. வே. சா. பதிப்புக்களில் ஆராய்ச்சி செய்வோரும் பதிப் பாசிரியர்களும் அய்யரின் கைப்பிரதிகளைக் கவனத்துடன் ஆராய வேண்டும்.

## அய்யரவர்களுக்குப் பின் வந்த பதிப்புக்கள்

அய்யரவர்களுக்குப் பின் வந்த பதிப்புக்களில் பலவற்றை அவர் மகன் திரு. எஸ். கலியாணசுந்தர அய்யர் வெளியிட்டுள் ளார். அவர் பெரும்பாலும் அய்யரவர்கள் பதிப்பித்தபடியே பதிப்பிப்பது வழக்கம். அவர் நூல் அச்சடிப்பு முறையில் மட்டும் சில திருத்தங்கள் செய்துள்ளார். அவற்றில் மேற்கோள்களின் ஆகரங்கள் அடிக்குறிப்பாய் வந்தனவற்றை நூலினகத்து அமைத்தது, அகராதிகளில் காணப்பட்ட பக்க எண்களை, மாற் றிச் சூத்திர எண்களாக மாற்றியது என்ற இரண்டும் குறிப்பிடத் தக்கன. அய்யரவர்கள் கைப்பிரதியில் இருந்த குறிப்புக்களையும் பிறர் சுட்டிக்காட்டிய குறிப்புக்களையும் தக்க இடங்களில் சேர்த்துள்ளதாகவும் அவர் குறிப்பிடுவார்.

இதுவரை அய்யரவர்கள் பதிப்புப் பணியின் ஒரு பகுதியை எடுத்துக் கொண்டு ஆராய்ந்து மதிப்பீடு செய்தோம். இது ஒரு எளிய முயற்சி! அய்யரவர்கள் பணியில் குறையை விட நிறையே மிகுதி. எனவே அய்யரவர்களைப் பற்றி நினைக்கும்போதெல் லாம் அவரின் மேன்மையே தமிழர்க்கு நினைவுக்கு வருகிறது. இவ்விடத்தில் தமிழகத்து மூதறிஞர் இராஜாஜி அவர்களின் புகழாரத்தை உ. வே. சா. அவர்களுக்குச் சூட்டி உரையை முடிப்போம்:

''மகத்தான, பெரிய காரியத்தை அவர் ஒருவரே 50, 60 வருஷ காலத்தில் செய்திருக்கிறார். இம்மாதிரி வேலையைப் பல்கலைக் கழகத்திடம் விட்டால் 2 கமிட்டிகள் போடுவார்கள். 10 பேர் ஒரு கமிட்டியில் இருக்க வேண்டும். அதற்காகக் காரியாலயம், சிப்பந்திகள், இதர செலவுகளாகும். அப்போதும் வேலை ஒரு மாதிரியாகத் தான் செய்து முடிக்கப்படும்.

ஆனால், அய்யரவர்களோ தாம் ஒருவராக, காகிதம் வண்டிச் செலவும், இதரர் தராமல், ஏடுகளைத் தாமே தலையில் சுமந்து வந்து வேலையைப் பூர்த்தி செய்துள்ளார். அச்சுப் பிழை அவர் நூலில் கிடையாது. பிரசுரகர்த்தாக்களிடம் விடாமல், தாமே பிரசுரித்து நூல்களைத் தம்மிடமே வைத்துக் கொண்டார்

இம்மாதிரி விழாக் கொண்டாடுவது மட்டும் போதாது. பழைய நூல்கள் அழியாமல் காப்பாற்றித் தந்தவர் அவர். தமிழ் நூல்களி உபபிரம்மா எனலாம் அவரை.

புத்தகங்களைத் தேரில் வைத்துச் சென்று விழாக்களைக் கொண்டாடுவது மட்டும் போதாது. அவற்றை உபயோகிக்க வேண்டும். விஷயம் தெரிந்து படிக்க வேண்டும்.''
இராஜாஜி; ஆதாரம்: டாக்டர் உ. வே. சாமிநாதய்யர், தொகுப்பு: முல்லை முத்தையா [1980] பக். 41-42.

# 9. உ. வே. சா. இலக்கணப் பதிப்புக்கள் ஒரு விளக்க நூலடைவு

## சாமிநாதய்யர், உ. வே.

1. சேரர் பரம்பரையினராகிய ஐயனாரிதனார் அருளிச் செய்த புறப் பொருள் வெண்பாமாலை மூலமும் உரையும், சென்னை: வெ. நா. ஜூபிலி அச்சுக்கூடம். 1895 முதற் பதிப்பு. மொ. பக். 6+13+155+23. விலை 1-8-0.

பொருளடக்கம்: 1. முகவுரை 2. அரும்பத அகராதி 3. இக்காலத்து அருகி வழங்குஞ் சொற்கள். 4. புறப்பொருள் வெண்பாமாலை 5. சூசீபத்திரம் 6. புறப்பொருள் வெண்பாமாலை மூலமும் உரையும் 7. சூத்திர முதற் குறிப்பகராதி 8. துறையகராதி 9. கொளுவின் முதற் குறிப்பகராதி 11. விஷய சூசிகை 12. இடம் விளங்கிய மேற்கோள்கள் 13. இடம் விளங்கா மேற்கோள்கள் 14. பிழையும் திருத்தமும்.

ஏழு பிரதிகளின் அடிப்படையில் பாண்டித்துரை தேவரின் விருப்பத்தின்படிப் பதிப்பிக்கப்பட்டது. 36 பாடபேதங்கள் காட்டப்பட்டுள்ளன. 'இந்நூலுரையாசிரியர் இன்னாரென்பது விளங்கவில்லை' என்று குறிப்பார் அய்யர்.

2. புறப் பொருள் வெண்பாமாலை வாகைப்படலம் பாடாண் படலம். சென்னைப் பல்கலைக் கழக 1908-ஆம் ஆண்டுத் தேர்வுப்பாடம். சென்னை: பிரஸிடென்சி பிரஸ். 1908 மொ. பக 54 விலை 6 அணா. பழைய உரையை ஒட்டிப் பதிப்பாசிரியர் எழுதிய உரையும் விளக்கக் குறிப்புக்களும் முகவுரையும் அடங்கியது. இடக்கர்ச் சொல் வந்துள்ள 15, 16. 21. 24, 41, 45, 46, 47, 49 பாடல்கள் விடப்பட்டுள்ளன.

3. புறப்பொருள் வெண்பாமாலை—வெட்சிப் படலம் முதல் காஞ்சிப் படலம் முடிய. தேர்வுப்பதிப்பு ஆண்டு முதலியன தெரிய வில்லை. முன்னதைப் போன்றது. மொ. பக். 4+68. 21, 73 வெண்பாக்களிலும் 78-ஆம் கொளுவிலும் அவையல் கிளவிகள் வந்திருத்தலின் படிக்கும் மாணவர்கள் இதை நீக்கிப்படித்துக் கொள்க என்பது ஆசிரியர் குறிப்பு.

4. ,, சென்னை: வைஜயந்தி அச்சுக்கூடம் 1915. இரண்டாம் பதிப்பு. மொ.பக். 8+216. விலை 1-8-0. உரையாசிரியர் சாமுண்டி தேவநாயகர் என்று குறிப்பு முகவுரையில் உள்ளது. நிறைய அடிக்குறிப்புக்களும் 41 பாடபேதங்களும் உள்ளன. முன்பதிப்பிலிருந்த பல அகராதிகளை ஒன்றாக்கி அரும்பத அகராதி எனப் பொருளுடன் விரிவாக்கியுள்ளார்.

5. ,, சென்னை: கமர்ஷியல் அச்சுக்கூடம் 1924. மூன்றாம் பதிப்பு. மொ. பக். 10+214. விலை 1-14-0. புதிய பிரதிகளால் உரைகிடைக்காத பகுதிகளுக்கு உரைகிடைத்தன. படலப்பிரிவுகளிலும் மாற்றங்கள். பாடபேதங்கள் 149. மேற்கோள்கள் (113), ஒப்புமைப் பகுதிகள் (100) மிகவும் விரிவு பெற்றுள்ளன. எடுத்துக்காட்டிய நூல்களின் முதற்குறிப்பகராதி புதியது; மொத்தம் 72 நூல்கள் காட்டப்பட்டுள்ளன. புதிய விரிவான முகவுரை. அதில் தேவாரத்தைத் தொடக்கத்தில் அமைத்தல். துறை, கொளு, வெண்பா, என்ற மூன்றையும் சேர்த்துத் தொடர் எண்கள் இடப்பட்டுள்ளன.

6. ,, சென்னை: கேசரி அச்சுக்கூடம். 1934 நான்காம்பதிப்பு. மொ. பக். xII+216. விலை 1-9-0. அய்யரவர்கள் காலத்தில் வந்த கடைசிப்பதிப்பு. முகவுரை விரிவு பெற்றுள்ளது; பொருளமைப்பு என்ற பகுதி எழுதிச் சேர்க்கப் பெற்றுள்ளது. பாடபேதங்கள்-153. தமிழ் எண்கள் அராபிய எண்களாக மாறியுள்ளன. சூத்திர அகராதி முதலியன சூத்திர முதற்குறிப்பகராதி என மாறியுள்ளன. நூல் முகப்பில் தியாகராஜ விலாச வெளியீடு என்பது உள்ளது.

7. ,, 1942 ஐந்தாம் பதிப்பு (நூல்பார்க்க இயலவில்லை)

8. ,, சென்னை: ஆந்திராபிரிண்டிங் ஹவுஸ் 1946. ஆறாம் பதிப்பு. மொ. பக். 24+212. எஸ். கலியாண சுந்தரையர் குறிப்பு என்ற சிறு முகவுரையுடன் முன்பதிப்பை ஒட்டி அப்படியே பதிப்பித்துள்ளார்.

9. ,, சென்னை: கபீர் அச்சுக்கூடம் 1950; ஏழாம் பதிப்பு. மொ. பக். xxv+209. விலை. 2-8-0. எஸ். கலியாணசுந்தரையர் பதிப்பு. அய்யரவர்கள் கைப்புத்தகத்தி லிருந்த புதியகுறிப்புக்கள் சேர்க்கப் பெற்றுள்ளன.

10. ,, சென்னை: கபீர் அச்சுக்கூடம், 1953. எட்டாம் பதிப்பு. விலை 2-8-0 மொ. பக். xxv+209+பிழை திருத்தம். எஸ். கலியாண சுந்தரையர் பதிப்பு. முன்பதிப்பைப் போன்றது.

11. ,, சென்னை: கபீர் அச்சுக்கூடம் 1963. ஒன்பதாம் பதிப்பு. மொ. பக். xxvi+209. விலை 2.50, இறுதியாக வந்த பதிப்பு. அவ்வப்பொழுது கிடைத்த குறிப்புக்கள் உரிய இடங்களில் இப்பதிப்பில் சேர்க்கப் பெற்றுள்ளன. க. சுப்பிரமணி யம் வெளியிட்டது. இடம் விளங்கா மேற் கோள்கள் 8.

12. நன்னூல் மூலமும் மயிலை நாதருரையும்: சென்னை: வைஜயந்தி அச்சுக் கூடம். 1918 முதற்பதிப்பு. மொ. பக். xxiv+312+52 விலை. 3-2-0.

பொருளடக்கம்: 1. நூற்பெயர் முதலியவற்றின் முதற்குறிப் பகராதி. 2. முகவுரை 3. நூலாசிரியர் வரலாறு 4. நூல். 5. உரை யாசிரியர் வரலாறு 6. சீயகங்கன் வரலாறு 7. பரிசோதனைக் குறிப்பு 8. நன்னூல் மயிலைநாதர்உரை. 9. அரும்பதமுதலிய வற்றின் அகராதி 10 மேற்கோள் விளக்க அகராதி 11. விளங்கா மேற்கோள் முதற்குறிப்பகராதி 12. நன்னூற் சூத்திர முதற்குறிப் பகராதி 13. பிழையும் திருத்தமும்.

உதவிய பிரதிகள் 15. காட்டிய பாடவேறுபாடுகள் 1384. உரையில் மட்டும் 1258 பாடவேறுபாடுகள். 60. நூல்களின் சுருக்க விளக்கம். 418-ஆம் நூற்பாவில் வரும் பழமொழிப் பாடலின் ஆகரம் கண்டு பிடித்தவர் இ. வை. அனந்தராமையர். நூலாசிரியர் வரலாறு காலம் முதலிய நூல் முகப்புச் செய்திகள், தக்கசான்றுகளைக் கொண்டு செய்த ஆராய்ச்சி நுட்பத்துடன் விளங்குகின்றன. சூத். 126 வரையே சூத்திரப் பொருளை விளக்கும் தலைப்புக்கள் உள்ளன. மேற்கோள்விளக்கம், ஒப்புமைப் பகுதிகள், ஏட்டின் நிலை முதலிய செய்திகள் அடிக் குறிப்புக்களாக உள்ளன. எனினும் சங்கர நமச்சிவாயர் உரைப் பதிப்பு போல, இவையும் மயிலை நாதரைப்பிறர் மறுக்கும் இடம் முதலியனவும் மிகுதியாகக் காட்டப்படவில்லை. விளங்கா மேற்கோள்கள் 367. அய்யரவர்கள் காலத்தில் வந்த ஒரே பதிப்பு.

13. சென்னை: கபீர் அச்சுக்கூடம் 1946. இரண்டாம் பதிப்பு. மொ. பக். xlv+300. விலை. 5-0-0 எஸ். கலியாண சுந்தர அய்யர் பதிப்பு. அய்யரவர்களுக்குப் பின் வந்த ஒரே பதிப்பு. அடிக்குறிப்பாக இருந்த ஆகரங்கள் நூலில் அவ்வவ்விடங்களில் சேர்க்கப்பெற்று உள்ளன. 60 நூல்களின் சுருக்க விளக்கம். அரும்பத அகராதி விரிவு பெற்று நூலிறுதியில் அமைகிறது. விளங்கா மேற்கோள்கள் 353. இ. வை. அனந்தராமையர் பழமொழிப்பாடலைக் கண்டு பிடித்தமை பற்றிய குறிப்பு இல்லை.

14. நன்னூல் மூலமும் சங்கர நமச்சிவாயர் உரையும்: சென்னை கமர்ஷியல் அச்சுக்கூடம். 1925 முதற்பதிப்பு. மொ. பக். 24+312, விலை 2-0-0.

பொருளடக்கம் : 1. முகவுரை 2. நூலாசிரியர் வரலாறு 3. சீயகங்கன் வரலாறு 4. நூல். 5. உரையாசிரியர் வரலாறு 6. நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி. 7. நன்னூல் மூலமும் சங்கரநமச்சிவாயர் உரையும் 8. நன்னூற் சூத்திர முதற்குறிப்பகராதி. 9. அரும்பத முதலியவற்றின் அகராதி. 10. விளங்கா மேற்கோளகராதி 11. குறிப்புரை 12. பிழையும் திருத்தமும்.

நன்னூலுக்குச் சங்கரநமச்சிவாயர் உரை மட்டுமுள்ள முதற் பதிப்பு. திருவாவடுதுறைப் பிரதியும், ஆழ்வார். திருநகரிப் பிரதியும் அடிப்படைப் பிரதிகள். பாடவேறுபாடுகள் 74 [உரையில் மட்டும் 33]. சுருக்க விளக்கங்கள் 96. முகவுரை விரிவானது. நூலாசிரியர், நூல், சீயகங்கன் வரலாறு முதலிய கட்டுரைகள் மயிலைநாதர் உரையில் உள்ளவையே. சூத்திரங்களின் தலைப்பில் கருத்தை விளக்கும் சொல்லோ தொடரோ நூல் முழுமைக்கும் உள்ளன. மேற் கோள்களின் ஆகரம் முதலியன அடிக்குறிப்பாய் உள்ளன. சூத்திர முதற்குறிப்பகராதி முதலியவற்றில் பக்க எண்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அரும்பத அகராதி விரிவானது. குறிப்புரையில் இவ்வுரையாசிரியரால் மறுக்கப்பட்டுள்ள கொள்கைகள் இன்னாருடையவை, ஒப்புமைப் பகுதிகள் முதலியன அமைகின்றன. விளங்கா மேற்கோள்கள் 206. அய்யரவர்கள் சிதம்பரம் மீனாட்சி கல்லூரியில் முதல்வராக இருந்தபோது வெளியானது. உதவியவர் வே. வேங்கடராஜுலு ரெட்டியார். இவ்வுரையில் அய்யரவர்களுக்கு ஈடுபாடும் அன்பும் உண்டு. இவர் வாழ்க்கை நோக்கைப் பாதித்த நூல் (இணர்எரி குறள்-308).

15. சென்னை: லா ஜர்னல் அச்சுக்கூடம் 1935. இரண்டாம் பதிப்பு. மொ. பக். xxvi+528. முதற்பதிப்பு முகவுரை மாற்றங்களுடன் இரண்டாம் பதிப்பு முகவுரையாக அமைகிறது. குறிப்புரைச் செய்திகள் முதலியன அவ்வப்பக்கத்தில் அடிக்குறிப்பாய் மாற்றப்பட்டுள்ளன. அடிக்குறிப்புக்களின் எண்ணிக்கை 1368. அவற்றில் குறிப்புரைச் செய்திகள் மட்டுமே 723 ஆகும். மயிலை நாதர் உரையை நோக்க இது விரிவானது. அரும்பத அகராதி நூலிறுதியில் அமைகிறது. சங்கரநமச்சிவாயர் உரைபற்றி ஓர் ஆராய்ச்சி புதியது. மூலமும் உரையும் பெரிய எழுத்தில் அச்சிடப்பட்டுள்ளன. மொத்தப் பாட வேறுபாடுகள் 88. அய்யர் கொண்ட மூலபாடத்திற்கும் விருத்தியுரைப் பதிப்பாசிரியர்கள் கொண்ட மூலபாடத்திற்கும் இடையே சுமார் 32 இடங்களுக்கு மேல் வேறுபாடுகள் உள. அய்யரவர்கள் வெளியிட்ட இறுதிப்பதிப்பு.

16. " சென்னை: கபீர் அச்சுக்கூடம் 1942 மூன்றாம் பதிப்பு. கலியாணசுந்தரையர் குறிப்புடன் மொ.பக். XXVIII+451 சுருக்க விளக்கம் நூலின் தொடக்கத்தில் அமைகிறது. எல்லா எண்களும் அராபிய எண்களாக மாற்றப்பட்டுள்ளன. முன் பதிப்பில் அடிக்குறிப்பாக இருந்த மேற்கோள்களின் ஆகரங்கள் (627) நூலினகத்து உரிய இடங்களில் சேர்க்கப் பெற்றுள்ளன. அகராதிகளில் இருந்த பக்க எண்கள் சூத்திர எண்களாக மாற்றப் பட்டுள்ளன. விளங்கா மேற்கோள்கள் 174. அய்யரவர்களின் இரண்டாம் பதிப்பு முகவுரை முதலியன அவ்வாறே இடம் பெறுகின்றன. திருத்தங்களுக்கு அய்யரவர்களின் இரண்டாம் பதிப்புக் கைப்பிரதி ஆதாரம் என்று தோன்றுகிறது.

17. " ஸ்ரீதியாகராஜ விலாச வெளியீடு சென்னை. கபீர் அச்சுக்கூடம். 1953. நான்காம் பதிப்பு மொ. பக். xxviii+451 விலை 5-0-0 மூன்றாம் பதிப்பின் மறுபதிப்பு. நல்ல தெளிவான அச்சு. இறுதியாக வந்த பதிப்பு.

18. தமிழ்நெறி விளக்கம்-பொருளியல் பழைய உரையுடன் சென்னை. கலைமகள் இதழில் தொகுதி 10 பகுதி 56, ஆகஸ்டு 1936 பக். 1-8; பகுதி 57 செப். பக். 9-16; பகுதி 58 அக். பக். 17-24 பகுதி 59, நவம். பக். 25-32; பகுதி 60 டிசம். பக். 33-40; தொகுதி 11 பகுதி 61 ஜன. 1937 பக். 41-57; பகுதி 63 மார்ச்சு பக். முன்னுரை i-xii ஆகியவற்றில் வெளியாயிற்று. இதுவே உடன் தனி நூலாகவும் வெளியாயிற்று. அடுத்த குறிப்பு நோக்குக.

19. " சென்னை லா ஜர்னல் அச்சுக்கூடம் கலைமகள் வெளியீடு-7. 1937 முதற்பதிப்பு. மொ. பக். xii+58 விலை எட்டு அணா.

பொருளடக்கம் : 1. முகவுரை 2. தமிழ்நெறி விளக்கம்–பொருளியல் 3. சூத்திர முதற்குறிப்பகராதி 4. மேற்கோட் செய்யுண் முதற்குறிப்பகராதி 5. பிழையும் திருத்தமும்.

பதிப்பிற்கு ஆதாரமான பிரதி ஒன்றே. நூற்பாக்களின் தலைப்பில் அவற்றின் கருத்தை விளக்கும் சொல்லோ தொடரோ அமைகிறது. நூற்பா 18 வரை அராபிய எண்களும் எஞ்சியவற்றிற்குத் தமிழ் எண்களும் காணப்படுகின்றன. இடம் விளங்கா 172 செய்யுட்களுக்கு வலதுபுறம் தொடர் எண் உள்ளது. 118 அடிக்குறிப்புக்களில் விளக்கமான ஆராய்ச்சிக் கருத்துக்கள் உள. அய்யரவர்கள் பதிப்பின் சிறப்பியல்பாகிய அரும்பத அகராதி, விரிவான நூலாராய்ச்சி முதலியன இதில் இல்லை. அய்யரவர்கள் காலத்தில் வந்த இறுதிப் பதிப்பு.

20. ,, சென்னை. கபீர் அச்சுக்கூடம் எஸ். கலியாணசுந்தரையர் பதிப்பு. 1947 இரண்டாம் பதிப்பு.. மொ. பக். viii+56 விலை 1-0-0 முதற்பதிப்பின் மறுபதிப்பு.

மேற்கண்ட நூல்களின் ஏட்டுச்சுவடிகள் உள்ள இடங்கள், பிற விவரங்கள் (பட்டியல் முற்றுப் பெறாதது)

1) புறப்பொருள் வெண்பாமாலை ஏட்டுச்சுவடிகள் : சென்னை அரசினர் கையெழுத்துச்சுவடி நூல்நிலைய எண்கள் ஆர்.78, 5523, 5552, மற்றும் 4647, 4659 (?) முதலியவை. பட்டியல் முற்றுப் பெறவில்லை, தஞ்சை சரஸ்வதி மகால் சுவடி எண் 115; கேரளப் பல்கலைக்கழகச் சுவடி எண் 6338 முதலியன.

2) நன்னூல் மயிலைநாதர் உரை, சங்கரநமச்சிவாயர் உரை ஏட்டுச்சுவடிகள் உள்ள இடங்கள், சுவடிகளின் விவரம் முதலியவற்றைக் க. ப. அறவாணனின் எழுநூறாண்டுகளில் நன்னூல் [1977] என்ற நூலில் [பக். 363-366] பார்க்கலாம். அவற்றில் குறிப்பிடப்படாத கேரளப் பல்கலைக்கழகச் சுவடிகளின் எண்கள் 6368 B [மூலம் மட்டும்] 3940, 4095 C, 8004 [சங்கரநமச்சிவாயர் உரை 2] 6345 [மூலம் மட்டும்] 6368 D [இடைஉரி மட்டும்], 6359 6362 [மயிலைநாதர் உரை]. நன்னூல் எழுத்ததிகாரம் மட்டும் 8080, 8076 B, 8089, 8074 [உரையுடன்], 8068B, 8035, 8034 [எழுத்து, சொல்] சங்கரநமச்சிவாயர்—விருத்தியுரை 6405, 6407, 6420, 6422 முதலியன. [ஆதாரம் : தமிழ்ச் சுவடிப்பெயர்கள்; கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச்சுவடி நூலக வெளியீடு 1984].

3. தமிழ்நெறி விளக்க ஏட்டுச்சுவடிகள் வேறு இருப்பதாகத் தெரியவில்லை.

# நூலடைவு

## தமிழ்

அப்பனையங்கார், டி.என். ; 'வெண்பாமாலையாராய்ச்சி, செந்தமிழ் 28:10 [1929]:413-420; 28:11: 449-456; 28:12: 497-504; 29:1 [1930]: 21-24; 29:2 : 49-56; 29:4 : 127-134; 29:7: 231-242.

அரவிந்தன், மு. வை.; உரையாசிரியர்கள், சிதம்பரம்:மணிவாசகர் நூலகம், 1983, திருத்திய பதிப்பு. மொ. பக். 887.

அருணாசலம், மு.; தமிழிலக்கியவரலாறு—ஒன்பதாம் நூற்றாண்டு. 1975. மொ. பக். xxxv+480; பத்தாம் நூற்றாண்டு 1972. மொ. பக். xvi+632; பதினோராம் நூற்றாண்டு 1971. மொ. பக். xviii+442; பன்னிரண்டாம் நூற்றாண்டு முதற்பகுதி 1973. மொ. பக்.xxxi+520; இரண்டாம் பகுதி 1973. மொ. பக். 521-996; பதின்மூன்றாம் நூற்றாண்டு 1970. மொ.பக். xviii+518; பதினான்காம் நூற்றாண்டு. 1969. மொ. பக். xxx+456; பதினைந்தாம் நூற்றாண்டு 1969. மொ. பக். xiv+408; பதினாறாம் நூற்றாண்டு முதற்பாகம் 1977. மொ. பக். xxxiv+496; இரண்டாம் பாகம் 1975. மொ. பக். xiiv+390; மூன்றாம் பாகம் 1976 மொ. பக். xxxiv+430.

அறவாணன், க. ப. ; எழுநூறு ஆண்டுகளில் நன்னூல், சென்னை பாரிநிலையம் 1977 முதற் பதிப்பு மொ. பக். 372

ஆறுமுகநாவலர் ; நன்னூல் விருத்தியுரை, சென்னை ஸ்ரீ ஆறுமுக நாவலர் வித்தியாநுபாலன அச்சகம், 1851 முதற்பதிப்பு; 1974 பத்தாம் பதிப்பு மொ. பக். 464.

இராமகிருஷ்ணன் ; புறத்திணை வளர்ச்சி [சங்ககாலம்முதல் கி. பி. 12-ஆம் நூற்றாண்டு வரை] அச்சிடப்படாத அறிஞர்பட்ட ஆய்வேடு, மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம் 1976.

இராமசுவாமிகள் ; பஞ்சலட்சண மூலம்-நன்னூல் அகப்பொருள் விளக்கம், புறப்பொருள் வெண்பாமாலை, யாப்பருங்கலக் காரிகை, தண்டியலங்காரம், நேமி நாதம், வீரசோழியம் ஆகியவற்றின் மூலம் மட்டும். சென்னை, ஜீவரக்ஷாமிருத அச்சுக் கூடம், 1886. மொ. பக். 295.

இராமநாதன்,சுப.; புறப்பொருள் வெண்பாமாலை; அண்ணாமலைப் பல்கலைக்கழகம். 1985

இராகவையங்கார், இரா. ; 'சாமுண்டி தேவநாயகன்' செந்தமிழ் தொகுதி 1 : பக். 45 1902?

இராகவையங்கார், மு. ; சாசனத் தமிழ்க்கவி சரிதம் மானா மதுரை. மு. இரா. நாராயணையங்கார் 1961 மூன்றும் பதிப்பு. மொ. பக். 17+3+13+228.

இராமன் மு. கோ. ; 'டாக்டர் உ.வே. சாமிநாதையர்,' தற்காலத் தமிழ் முன்னோடிகள், பக். 44-68.

இளவரசு, சோம. ; இலக்கண வரலாறு; சிதம்பரம், தொல் காப்பியர் நூலகம் 1963 மொ. பக். 246.

கந்தையாபிள்ளை ந. சி. ; புறப்பொருள் விளக்கம், சென்னை ஒற்றுமை ஆபீஸ் 1936. மொ. பக். viii+104.

காசிராசன், இரா. ; உ. வே. சா. காப்பியப் பதிப்புகள். சென்னை, உலகத்தமிழராய்ச்சி நிறுவனம் 1985. மொ. பக். viii+170

குளோறியா சுந்தரமதி, இலா. ; டாக்டர் உ. வே. சா. சங்க இலக்கியப் பதிப்புகள்; சென்னை, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் 1984 மொ. பக். vii+172.

சடகோபராமானுஜாச்சாரியார்; நன்னூல்; சென்னை; 1986.

சண்முகம், மு. [பதிப்பாசிரியர்] ; தமிழ்நூல் விவர அட்டவணை சென்னை, தமிழ்நாடு அரசு முதல் தொகுதி: முதல் பகுதி: 1961 மொ. பக். xxx + 383.

சண்முகம்பிள்ளை, மு. ; 'பாட வேறுபாடுகளும் பதிப்பாசிரியர் களும்' தமிழ்க்கலை, தமிழ்:2; கலை 1 மார்ச்சு, 1984 பக். 45-63.

சதாசிவம்பிள்ளை, அ. ; பாவலர் சரித்திர தீபகம், பொ. பூலோக சிங்கத்தின் புதிய பதிப்பு, பகுதி 1 கொழும்பு தமிழ்ச்சங்கம் 1975. மொ.பக். xxviii+240.

சந்திரசேகர கவிராஜ பண்டிதர், தில்லையம்பூர். ; நன்னூல் மூலமும்-சங்கரநமச்சிவாயர் சிவஞான முனிவர் விருத்தியுரையும், திருத்தணிகை விசாகப்பெருமாளையர் பதவுரையும், சென்னை: 1895

சாமிநாதையர், உ. வே. ; ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம் முதற்பாகம் சென்னை லிபர்ட்டி அச்சுக்கூடம் 1938 மொ. பக் xx+355; இரண்டாம் பாகம் 1940 மொ. பக். xv+346

என் சரித்திரம்; சென்னை; டாக்டர் உ. வே. சா. நூல்நிலையம், திருவான்மியூர் 1982 இரண்டாம் பதிப்பு மொ. பக். xxii+776.

சாமிநாத தேசிகர் ; இலக்கணக்கொத்து-மூலமும் உரையும், பதிப் பாசிரியர் தி. வே. கோபாலையர் தஞ்சாவூர்: சரசுவதி மகால் நூல் நிலையம் 1973 மொ. பக். vj+431.

சிங்காரவேலுமுதலியார், ஆ.; அபிதான சிந்தாமணி டில்லி: ஏ இ எஸ் மறுபதிப்பு 1981 மொ. பக். xii+1640.

சிவபாத சுந்தரனார், நா. ; புறப்பொருள் வெண்பாமாலை ஆராய்ச்சி சுழிபுரம், யாழ்ப்பாணம்: வட்டுக் கோட்டைத் தொகுதித் தமிழ்ச் சங்கம் 1972 மொ. பக். 32+484.

சிவப்பிரகாசக் குருக்கள் ; தமிழ்ப் பஞ்சலட்சண மூலம் பகுதி 1 நன்னூல், இறையனார் அகப்பொருள், அகப்பொருள், புறப் பொருள், யாப்பருங்கலம். யாப்பருங்கலக்காரிகை, தண்டியலங் காரம். சிதம்பரம்: ஸ்ரீபாலாம்பிகா அச்சுக்கூடம் 1927 மொ. பக். 359.

சுந்தரமகாலிங்கனார் ; புறத்திணை விருந்து, சென்னை: சேகர் பதிப்பகம் 1977.

சொல்விளங்கும் பெருமாள், பூ. ; டாக்டர் உ. வே. சா. பதிப்புப்பணி ஓராய்வு. மதுரை; வஞ்சிக்கோப் பதிப்பகம் 1981 மொ. பக்.xii+387

சோமசுரந்தரனார், பொ. வே. ; புறப் பொருள் வெண்பாமாலை-மூலமும் விளக்க உரையும், சென்னை: சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம். 1955 முதற் பதிப்பு. 1960, 1964, 1967, 1969, பின் பதிப்புக்கள் மொ. பக். 380.

ஜாஸ்மின்; நன்னூல் சொல்லடைவும் சங்கர நமச்சிவாயர் அகராதியும் கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை முதுகலை ஆய்வேடு 1984.

ஜெயராமன், நா. ; சங்க இலக்கியத்தில் பாடாண் திணை மதுரை, 1975.

தண்டபாணி தேசிகர் ; நன்னூல் விருத்தியுரை, சென்னை: பாரி நிலையம் 1971 இரண்டாம் பதிப்பு. மொ. பக். 650 (முதற்பதிப்பு 1957).

தமிழண்ணல்; சங்க இலக்கிய ஒப்பீடு. மதுரை: மீனாட்சி புத்தக நிலையம் 1974.

தாண்டவராய முதலியார்; இலக்கணப் பஞ்சகங்களில் நன்னூல் மூலமும் அகப் பொருள் மூலமும் புறப் பொருட்கிலக்கியத்தோடு வெண்பா மாலை மூலமும்; சென்னை: 1835.

தாமோதரன், அ. ; திருக்குறள் மேற்கோள் விளக்கம் ஹைடல் பர்க்: தெற்காசியக் கழகம் 1970 மொ. பக். xvii+332.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | தமிழில் விடுகதைகள் | ... ரூ. 12-00 |
| 2. | உலகத் தமிழ் எழுத்தாளர் யார்? எவர்? | ... ரூ. 6-00 |
| 3. | தமிழர் தோற்கருவிகள் | ... ரூ. 10-00 |
| 4. | தமிழும் தமிழரும் | ... ரூ. 5-00 |
| 5. | தமிழர் இசை | ... ரூ. 70-00 |
| 6. | ம. பொ. சி. யின் இலக்கிய நூல்கள்-ஓர் மதிப்பீடு | ... ரூ. 20-00 |
| 7. | இளங்கோவின் இலக்கிய உத்திகள் | ... ரூ. 12-00 |
| 8. | திராவிட மொழி இலக்கியங்கள் | ... ரூ. 35-00 |
| 9. | தமிழ் இலக்கியக் கொள்கை - 8 | ... ரூ. 20-00 |
| 10. | தமிழ் இலக்கியக் கொள்கை - 9 | ... ரூ. 20-00 |
| 11. | தொல்காப்பியம் புணரியல் | ... ரூ. 10-00 |
| 12. | தொல்காப்பியம் வேற்றுமை மயங்கியல் | ... ரூ. 12-00 |
| 13. | தொல்காப்பியம் - விளிமரபு | ... ரூ. 6-00 |
| 14. | தொல்காப்பியம் - பெயரியல் | ... ரூ. 12-00 |
| 15. | தொல்காப்பியம் - வினையியல் | ... ரூ. 20-00 |
| 16. | பிரபந்த தீபிகை | ... ரூ. 12-00 |
| 17. | கண் மருத்துவம் | ... ரூ. 50-00 |
| 18. | வர்ம சூத்திரம் | ... ரூ. 10-00 |
| 19. | தன்வந்திரி குழந்தை வாகடம் | ... ரூ. 14-00 |
| 20. | வெள்ளைக்காரன் கதை | ... ரூ. 7-00 |
| 21. | மெய்க்கீர்த்திகள் | ... ரூ. 20-00 |
| 22. | சிந்து இலக்கியம் | ... ரூ. 8-00 |
| 23. | தமிழ்ச் சுவடிகள் அட்டவணை | ... ரூ. 6-00 |
| 24. | தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள் | ... ரூ. 12-00 |
| 25. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் - 1 | ... ரூ. 12-00 |
| 26. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் - 2 | ... ரூ 22-00 |
| 27. | இஸ்லாம் வளர்த்த தமிழ் | ... ரூ. 15-00 |
| 28. | உ. வே. சா. சங்க இலக்கியப் பதிப்புகள் | ... ரூ. 10-00 |
| 29. | டாக்டர் உ. வே. சா. காப்பியப் பதிப்புகள் | ... ரூ. 10-00 |
| 30. | தமிழரின் தாயகம் | ... ரூ. 10-00 |
| 31. | பாவாணரும் தனித்தமிழும் | ... ரூ. 12-00 |
| 32. | தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வு | ... ரூ. 10-00 |
| 33. | விவிலியம் - திருக்குறள் - சைவசித்தாந்தம் | ... ரூ. 20-00 |
| 34. | செங்கை மாவட்ட ஊர்ப் பெயர்கள் | ... ரூ. 25-00 |
| 35. | மொழி பெயர்ப்பியல் | ... ரூ. 10-00 |
| 36. | தமிழர் திருமணம் | ... ரூ. 25-00 |
| 37. | தமிழ் வாழ்க்கை வரலாற்றிலக்கியம் | ... ரூ. 35-00 |
| 38. | தமிழ் நாவல்கள் (அகர வரிசை) | ... ரூ. 40-00 |
| 39. | எண்பத்திரண்டில் தமிழ் | ... ரூ. 90-00 |
| 40. | Siddha Medicine (Heritage of the Tamils) | ... Rs. 45-00 |
| 41. | Cultural Heritage of the Tamils | ... Rs. 20-00 |
| 42. | Literary Heritage of the Tamils | ... Rs. 50-00 |
| 43. | Papers on Tamil Studies | ... Rs. 15-00 |
| 44. | Tamil Drama | ... Rs. 20-00 |
| 45. | Dr. Mu. Va. | ... Rs. 20-00 |
| 46. | Thiru Murugan | ... Rs. 5-00 |
| 47. | A Study of the Perunkatai | ... Rs. 12-00 |
| 48. | Tamil Writers Directory | ... Rs. 10-00 |
| 49. | Dissertations on Tamilology | ... Rs. 10-00 |
| 50. | Tamil-Text (An-Auto Instructional Course) | ... Rs. 25-00 |
| 51. | Siddha Medical Manuscripts in Tamil | ... Rs. 8-00 |
| 52. | Karaikkal Ammaiyar | ... Rs. 6-00 |
| 53. | Heritage of the Tamils-Temple Arts | ... Rs. 50-00 |
| 54. | Tolkāppiyam (An English Translation) | ... Rs. 25-00 |